ஓஷோவைப்பற்றி எதுவும் சொல்லுவது சுலபமில்லை. ஆனால் ஒருவர் அவரிடம் மிக நெருங்கி வரும்பொழுது, அவர் வார்த்தைகள், அவர் இசைவு, அவர் அங்க அசைவுகளின் மூலம் வெளிப்படும் அழகு மெய்சிலிர்க்கும், ஆனந்தம் மிக்க சூழ்நிலையை உருவாக்கும். வாழ்க்கையை ஒரு புதிய இசையில், ஒரு புதிய நடனத்தில், ஒரு புது உத்வேகத்துடன் அனுபவிக்க அழைக்கும் ஓர் அழைப்பாக அவர் இருக்கிறார்.

ஓஷோவை ஏதேனும் ஒருவகையில் வகைப் படுத்துவது மிகவும் கடினம். மனித குலத்தை மேன்மைப்படுத்தும் எல்லாவிதமான உயர்ந்த கருத்துக்களையும் ஏற்றுக்கொள்கிறார். ஆனால் அதே சமயம் எந்த ஒரு குறிப்பிட்ட தத்துவத் தையோ அல்லது எண்ணங்களையோ சார்ந்திரா தவர். அவர் தன்னந்தனியாக தன்னுடைய பலத்துடனே நிற்கின்றார். அவர் சுதந்திரம் எல்லா சிறப்புகளையும் கடந்தது.

காமம் என்பது உன்னுடைய படைப்பு அல்ல. அது கடவுளால் உனக்கு அளிக்கப்பட்ட வெகுமதி.

காமம் என்பது ஆரம்பம், ஆனால் முடிவல்ல.

நீங்கள் ஆரம்பத்தைத் தவற விட்டுவிட்டால், முடிவையும் தவற விட்டு விடுவீர்கள்.

தந்திரா என்பது காமத்தை அடைவது அல்ல. காமம் என்பது பேரின்பத்தின் மூலஸ்தானம் என்று சொல்லுகிறது.

தந்திரா சொல்லுகிறது; நீங்கள் தியானத்திற்குள் செல்வீர்களேயானால் காமம் முற்றிலுமாக மறைந்து விடுகிறது.

இந்த எளிமையான காமத்தில் தவறு ஏதும் கிடையாது.

ஒருவர் காமத்தை ஏதேனும் ஓர் நாள் கடந்தே ஆகவேண்டும், ஆனால் காமத்தின் மூலமாகத்தான் கடந்து செல்வதற்கான வழி உள்ளது. நீங்கள் அதனுள் சரியானபடி செல்லாமல், கடந்து செல்வது மிகவும் கடினமானது.

ஆனவே காமத்தின் மூலமாகச் செல்லுவது அதைக் கடந்து செல்வதற்கான வழியில் ஒரு பகுதியேயாகும்.

உங்கள் விழிப்புணர்வற்ற நிலையில், இயந்திரத்தன்மையுடன் கூடிய காமம் தவறானது.

காமம் என்பது தவறே இல்லை. அதை இயந்திரத் தன்மையுடையதாகச் செய்யும்போதுதான் அது தவறாகி விடுகிறது.

காமம் என்பது இயற்கையாக நிகழக்கூடியதே.

காமத்தின் துணையுடன் கிடைக்கும் இன்பமே, தியானத்தில் அளவுக்கு அதிகமாக காமத்தின் துணையின்றிக் கிடைக்கிறது.

நீங்கள் முக்தி நிலை அடைவதற்கு காமஉணர்வுதான் போஷாக்கு அளிக்கிறது.

## ஓஷோ

பகவான் ஸ்ரீ ரஜ்னீஷ், தற்போது 'ஓஷோ' என்ற பெயரால் மட்டுமே குறிப்பிடப்படுகிறார்.

வில்லியம் ஜேம்ஸ் குறிப்பிட்ட 'ஓஷியானிக்' என்ற சொல்லிருந்து தம்முடைய பெயர் உருவானதாக ஓஷோ குறிப்பிட்டுள்ளார்.

'ஓஷியானிக்' என்றால் கடலில் கரைந்து போவது என்று பொருள்.

'ஓஷியானிக்' என்ற சொல் அனுபவத்தை மட்டுமே குறிக்கின்றது. ஆனால், அனுபவிப்பவரைக் குறிப்பிடவில்லை. அதனால், 'ஓஷோ' என்ற சொல்லை உருவாக்கினேன் என்கிறார், ஓஷோ.

ஆனால், இந்த சொல் கீழைநாடுகளில், நீண்டகாலமாக, வேறு ஒரு பொருளிலும் பயன்படுத்தப்பட்டு வருவதை ஓஷோ பின்னால் கண்டு கொண்டார்.

இதன் பொருள்:

''வானம் பூச்சொரிந்து ஆசீர்வதிக்கப்பட்ட மனிதன்.''

# அனுபவத்திற்கான அழைப்பு

## ஓஷோ

பிறக்கவும் இல்லை இறக்கவும் இல்லை
இந்தப் பூமிக் கிரகத்திற்கு அவர் வருகை தந்த காலம் இடைவெளி:
டிசம் 11- 1931 முதல் - ஜன 19 - 1990 வரை

ஓஷோ, ஞானம் பெற்ற சித்தர்.

ஞான தாகம் கொண்டவர்களும், நண்பர்களும் எழுப்பிய வினாக்களுக்கு அவர் முப்பதாண்டுக் காலம் விடைகளும் விளக்கங்களும் அளித்து வந்தார். உலகில் மாபெரும் ஞானிகளின் போதனைகள் பற்றியும், உலகின் பல்வேறு ஞான நூல்கள், வேதங்கள் பற்றியும் அவர் தமது விரிவுரைகளை வழங்கி வந்தார்.

அவரது பேருரைகள், எல்லாவற்றின் மீதும் ஒளி பாய்ச்சித் தெளிவடையச் செய்தன, மறை பொருட்களான உபநிடதங்கள் முதல், பிரபலமான குர்ட்ஜியெஃப் தத்துவங்கள் வரை, அஷ்டாவக்கிரர் முதல், ஜரதுஷ்டிரர் வரை.

ஹஸ்ஸிட்டுகள், சூபிகள், பாவுல்கள், மற்றும் யோகம், தந்திரா, தாவோ, கௌதம புத்தர் எனப் பல்வேறு தத்துவ ஞானப் பிரிவுகள் பற்றி, அவர் அழுத்தந் திருத்தமாகவும், ஆதாரப் பூர்வமாகவும் பேசினார். இவை எல்லாவற்றிற்கும் மேலாக, ஓஷோ, அபூர்வ ஞானமாகிய ஜென் ஒளியைப் பரப்பினார்.

காலத்தை வென்றதும், நிகழ்கால மனித குலத்தின் கடைத்தேற்றத்திற்கு ஏற்றதும், மனிதனின் அக வாழ்வுக்கு ஆன்மிகப் பாதை வகுத்துக் கொடுப்பதும், ஜென் ஒன்றுதான் என்று அவர் கூறுகிறார்.

'தியானம்' என்ற வடமொழி சொல்லின் மறுபெயர்தான் 'ஜென்'. இதை, 'மெடிடேஷன்' என்று ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துச் சொல்லலாம். ஆனால், இது முழுமையான மொழி பெயர்ப்பு ஆகாது. ஆதலால், 'தியானம்' என்றோ, 'ஜென்' என்றோ அழைப்பதே சரி. இதனால் பெறக்கூடிய அனுபவத்தையே ஓஷோ முதன்மைப்படுத்துகிறார்.

1974 முதல் ஓஷோ புனேயில் நிலையாகத் தங்கியிருக்க,

உலகம் முழுவதிலுமிருந்து சீடர்களும், அன்பர்களும், அவரைப் பார்க்கவும், அவரது பேச்சைக் கேட்கவும், நவீன மனிதனுக்காக அவர் முறைப்படுத்தித் தந்த தியான உத்திகளை அறிந்து பயிலவும், திரள் திரளாக வரத் துவங்கினார்கள்.

மேற்கத்திய பயில் முறைகளும், பயிற்சி வகுப்புகளும் மெல்ல மெல்ல இங்கே அறிமுகப்படுத்தப்பட்டன. கீழைநாட்டு ஞானானுபவத்தையும், மேலைநாட்டு அறிவியல் அணுகு முறைகளையும் ஒரே சமயத்தில் அறிந்துணர, அந்த வகுப்புகள் உதவின.

ஆன்மிக வளர்ச்சிக்கும், தியானப் பயிற்சிக்குமான மாபெரும் ஞான மையமாக, இன்று 'ஓஷோ கம்யூன் இன்டர்நேஷனல்' அமைப்பு, பரிணமித்திருக்கிறது. உள் உலகத்தைத் தேடிக் கண்டு கொள்ள நூற்றுக்கணக்கான வெவ்வேறு தியான முறைகளை கம்யூன் வழங்கி வருகின்றது.

ஆண்டுதோறும் பல்லாயிரக்கணக்கான ஆர்வலர்கள் உலகம் முழுவதிலுமிருந்து வந்து, ஓஷோவின் புத்த வளாகத்தில் ஒன்று கூடி அமர்ந்து, தியானம் கை வரப் பெற்று, ஆடிப்பாடி மகிழ்ந்து கொண்டாடுகிறார்கள்.

ஓஷோ கம்யூன் வளாகம் பச்சை மரகதப் புல்வெளி பரவிய எழில் கொஞ்சும் இடம், பசுஞ் சோலைகளும், குளங்களும் அருவிகளும் நிறைந்த அழகிய இயற்கையின் கொலுபீடம்; வெள்ளை அன்னங்கள் நீந்தி விளையாடும்; வண்ண மயில்கள் தோகை விரித்தாடும்; அழகிய கட்டடங்களும், பிரமிடுகளும் நிறைந்த வளாகம். இனிமையும், அமைதியும் குடி கொண்டிருக்கும் சாந்திவனம். ஆனந்தமான முறையில், அகத்தின் அமைதி அனுபவத்தை உணர அற்புதமான சூழல், ஓஷோ கம்யூன்...

**தொடர்பு முகவரி**


**OSHO COMMUNE INTERNATIONAL**

17, KOREGAON PARK, 0-411 001, MS, INDIA

PH: 020 628562 FAX: 020 62481

e-mail: commune @ osho.net

INTERNATIONAL WEB SITE: http://www.osho.com

# பொருளடக்கம்

பக்கம்

## அன்பு!

அன்பு என்றால் என்ன?

அதை உணர்வது எளிது. அன்பைப் பற்றி விவரிப்பது உண்மையிலேயே கடினம்.

நீங்கள் ஒரு மீனிடம் கடல் எப்படி இருக்கும் என்று கேட்டால் அந்த மீன், "இதுதான் கடல். கடல் சுற்றிலும் உள்ளது. அதுதான் அது" என்று கூறும். ஆனால் நீங்கள் அதனிடம், தயவுசெய்து கடலைப் பற்றி விவரி என்று வற்புறுத்தினால் உண்மையிலேயே அதற்கு அது ஒரு கடினமான பிரச்சனை யாகிவிடும்.

வாழ்க்கையில் அழகானதும், நேர்த்தியானதுமான சில விஷயங்களை நாம் வாழ்ந்து பார்க்க முடியும். அறிந்து கொள்ள முடியும். ஆனால் அவைகளை விவரித்தல், அவைகளுக்குப் பொருள் கூறுதல் மிகவும் கடினம்.

மனிதன் எதை மனப்பூர்வமாக வாழ்ந்து பார்த்திருக்க வேண்டுமோ, எதை அவன் தனக்குள்ளாகவே தெளிவாக உணர்ந்திருக்க வேண்டுமோ, அதைப் பற்றி, அதுதான் அன்பைப் பற்றி, கடந்த நான்கு, ஐந்தாயிரம் ஆண்டுகளாக வெறுமனே பேசிப் பேசியே வந்துள்ளான். இதுதான் மனிதனின் துன்பம். அன்பைப் பற்றி பலராலும் பேசப்பட்டுள்ளது. கணக்கற்ற அன்புப் பாடல்கள் கோவில்களிலும், தேவாலயங் களிலும், தொடர்ந்து பாடப்பட்டு வருகின்றன. அன்பின் பெயரால் என்னதான் செய்யப்படவில்லை? இவ்வளவு செய்தும் மனிதனின் வாழ்க்கையில் அன்பிற்கு இடமே இல்லை.

மனிதனின் மொழிகளை நாம் ஆழ்ந்து பார்த்தால் "அன்பு" என்ற வார்த்தையைப் போல் ஒரு பொய்யான வார்த்தையை நாம் காண முடியாது.

எல்லா மதங்களும் அன்பைப் பற்றி தொடர்ந்து பேசிக் கொண்டு வருகின்றன. ஆனால், எங்கும் நாம் காணும் அன்பின் விதம், ஏதோ பரம்பரை துரதிர்ஷ்டத்தைப் போல் மனிதனைச் சுற்றியுள்ளஅந்த அன்பானது. மனித வாழ்வில் அன்பின் கதவுகளை மூடுவதில்தான் வெற்றி கண்டுள்ளது. ஆனால், மக்கள் கூட்டம் அப்படிப்பட்ட மதங்களின் தலைவர்களைத்தான் அன்பின் படைப்பாளிகள் என்று வணங்குகிறது. அவர்கள் அன்பை பொய்யாக்கி விட்டனர். அவர்கள் எல்லா அன்பு ஊற்றுகளையும் அடைத்து விட்டனர். இந்த விஷயத்தைப் பொறுத்தமட்டில் கீழை நாட்டிற்கும், மேல் நாட்டிற்கும் - இந்தியாவிற்கும், அமெரிக்காவிற்கும் அடிப்படையில் வித்தியாசம் கிடையாது.

அன்பின் ஊற்று இன்னும் மனிதனிடத்தில் மேலெழுந்து வரவில்லை. இதற்கு நாம் மனிதனைச் சாடுகிறோம். மனிதன் கெட்டுவிட்டதால் அவனிடம் அன்பு பரிணமிக்கவில்லை யென்றும், நமது வாழ்க்கையில் அன்பின் ஓட்டம் இல்லை யென்றும் நாம் கூறுகிறோம். இதற்காக நாம் மனித மனதைக் குறை கூறுகிறோம். மனம் விஷமாகிவிட்டது என்று நாம் கூறுகிறோம். மனம் விஷமானது அல்ல. யார் மனதைத் தரக்குறைவாக ஆக்கிவிட்டார்களோ, அவர்கள் அன்பை விஷமாக்கி விட்டார்கள். அவர்கள் அன்பை வளர்ச்சியடைய விடவில்லை. இந்த உலகில் எதுவுமே விஷம் கிடையாது. கடவுளின் படைப்பில் எதுவுமே கெட்டது கிடையாது. எல்லாமே அமுதம்தான். ஆனால், அந்த முழுக்கோப்பை அமுதத்தையும் விஷமாக மாற்றியது மனிதன் மட்டும்தான். தங்களை ஆச்சாரியார் என்று சொல்லிக் கொள்பவர்களும், துறவிகள் என்போரும், அரசியல்வாதிகளும்தான் பெரும் குற்றவாளிகள்.

இதை நீங்கள் விபரமாக புரிந்துகொள்ள வேண்டும். இந்த நோயை நாம் உடனடியாகப் புரிந்து கொள்ளவில் லையெனில், இப்போதே நாம் நேராக்கவில்லையெனில், இப்போது மட்டுமல்ல இனிவரும் காலங்களிலும் கூட மனிதனின் வாழ்வில் அன்பைக் காண்பதற்கான சாத்தியங்களே இல்லாமல் போய்விடும்.

முதலில் மனித இனத்தின் அடிவானத்தில் உதிக்க வேண்டிய அன்பானது உதயமாகாமல் இருப்பதற்கு யார் மீது நாம் குற்றம் சுமத்துகிறோமோ, அவர்களிடமிருந்தே அன்பு உதயமாகாமல் இருப்பதற்கான காரணங்களையும் நாம் கண்மூடித்தனமாக ஏற்றுக்கொண்டு விட்டது ஒருவகையில் முரண்பாடுதான். தவறான கருத்துக்கள் திரும்ப பன்னெடுங் காலமாக வலியுறுத்தப்படும்போது, நாம் உண்மைக் கருத்துக்களின் பின்னாலுள்ள அடிப்படை பொய்களை கண்டுகொள்ளத் தவறிவிடுகிறோம். அதனால்தான் குழப்பம் உருவாகிறது. ஏனென்றால், இந்த செயற்கையான விதிகள் மனிதன் எப்படி மாறவேண்டும் என்று கூறுகின்றனவோ, அப்படி மாறுவதற்கு இயற்கையிலேயே மனிதன் தகுதியில்லாதவனாக இருக்கிறான். மனிதன்தான் தவறாகச் செல்கிறான் என்று வெறுமனே ஏற்றுக்கொண்டு விட்டோம்.

பழங்காலத்தில் தெருவில் விசிறிகளை விற்கும் வியாபாரி ஒருவன் தினமும் அரண்மனை வழியாகச் செல்வது வழக்கம். அவன் விற்பனை செய்யும் விசிறிகளின் தனித் தன்மையையும், அற்புதத்தையும் பற்றி அவன் தற்புகழ்ச்சி செய்துகொள்வது வழக்கம். அதுபோன்ற விசிறிகளை இதுவரை யாரும் பார்த்திருக்க முடியாது என்று அவன் கூறினான்.

அந்த அரசன் உலகின் ஒவ்வொரு பகுதியிலிருந்தும் எல்லா வகையான விசிறிகளையும் சேகரித்து வைத்திருந்தான். எனவேதான் அரசன் மிகவும் ஆர்வமுடனிருந்தான். ஒருநாள் தனது அரண்மனையின் முன்மண்டபத்தில் சாய்ந்து கொண்டு

கீழே தனித்தன்மையும், அற்புதமும் நிறைந்த விசிறிகளை விற்றுக்கொண்டு வரும் வியாபாரியைப் பார்த்தான். அவனுக்கு அந்த விசிறிகள் சாதாரணமானதாகவும், மிஞ்சிப்போனால் ஒரு செப்புக் காசுக்குத்தான் பெறுமானமுள்ளதாகவும் தோன்றியது. எனினும் அவன் அந்த வியாபாரியை மாடிக்கு அழைத்தான். அரசன் அவனிடம், "இந்த விசிறிகளின் தனித்தன்மை என்ன?" இவைகளின் விலை என்ன? என்றுக் கேட்டான்.

அதற்கு அந்த வியாபாரி, மாட்சிமையுடைய அரசே, "இவைகளின் விலை அதிகம் இல்லை. இந்த விசிறிகளின் தரத்தை வைத்துப் பார்க்கும்போது இதன் விலைகள் மிகவும் குறைவே. ஒரு விசிறியின் விலை ரூபாய் நூறுதான்" என்று கூறினான்.

அரசன் ஆச்சரியமடைந்தான். "நூறு ரூபாயா? பைசா பெறுமானமுள்ள இந்த விசிறி, செப்புக் காசு பெறுமானமுள்ள இந்த விசிறி எங்கும் கிடைக்கக் கூடியதாயிற்றே. இதற்கா நீ நூறு ரூபாய் கேட்கிறாய்! அப்படியென்ன இந்த விசிறியில் விசேஷம் உள்ளது?"

அதற்கு வியாபாரி, "இதன் தரம்தான்! ஒவ்வொரு விசிறியும் நூறு ஆண்டுகள் வரை உழைக்கும். நூறு வருடங்களுக்கு இது கெட்டுப் போகாது" என்று கூறினான்.

"ஆனால் இதைப் பார்த்தால் ஒரு வாரம் கூட வராது போல் தெரிகிறது. என்னை நீ ஏமாற்றப் பார்க்கிறாயா? இது முழு மோசடி : அதுவும் அரசனிடமா?" என்றான் அரசன்.

உடனே வியாபாரி, "பிரபுவே, எனக்கு ஏது அவ்வளவு தைரியம்? நான் தினமும் உங்களது உப்பரிகையின் அடியில் இந்த விசிறிகளை விற்று வருவதை நீங்கள் நன்றாக அறிவீர்கள். இதன் விலை நூறு ரூபாய்தான். ஆனால் இந்த விசிறி நூறு ஆண்டுகள் உழைக்கவில்லையெனில், அதற்கு நான் பொறுப்பேற்கிறேன். நான் தினமும் இந்தத் தெருவில்தான்

செல்கிறேன். இதற்கு மேல் நீங்கள் இந்த நாட்டை ஆள்பவர். உங்களை ஏமாற்றிவிட்டு நான் எப்படி உயிரோடிருக்க முடியும்?" என்று பதிலளித்தான்.

அவன் கேட்ட விலைக்கே அந்த விசிறி வாங்கப்பட்டது. அந்த அரசன் அந்த வியாபாரியை நம்பவில்லையென்றாலும், அந்த வியாபாரி அவ்வாறு சொல்வதற்குக் காரணம் என்ன என்பதை அறிவதற்காக அரசன் துடித்துக் கொண்டிருந்தான். அதனால் ஏழாவது நாள் மீண்டும் அந்த வியாபாரி நேரில் வரும்படி ஆணையிடப்பட்டது.

விசிறியின் நடுக்குச்சி மூன்றே நாட்களில் வெளியே வந்து விட்டது. மேலும் அந்த வாரம் முடிவதற்குள் அந்த விசிறி வீணாகப் போய்விட்டது.

அந்த வியாபாரி மீண்டும் திரும்ப வரமாட்டான் என அரசன் நிச்சயமாக நினைத்தான். ஆனால் அரசரே ஆச்ச ரியப்படுமளவிற்கு அவனுக்கு கட்டளையிட்டதுப் போல சரியான நேரத்தில், அதாவது, ஏழாவது நாள் வந்து விட்டான்.

"உங்களுக்கு சேவை செய்ய காத்திருக்கிறேன் பிரபு" என்றான்.

அரசன் மிகவும் கோபமடைந்தான். "மடையா! அங்கேப் பார். அங்கு உனது விசிறி துண்டு துண்டாய் பிய்ந்து கிடக்கிறது. ஒரு வாரத்தில் அதனுடைய நிலை இது. ஆனால் நீ அது நூறு வருடங்கள் உழைக்கும் என உத்திரவாதம் கொடுத்தாய். உனக்குப் பைத்தியம் பிடித்துள்ளதா, இல்லை நீ பெரிய ஏமாற்றுக்காரனா?" என்றான்.

அந்த வியாபாரி தாழ்மையுடன், "அரசருக்கு எனது மரியாதைகள். பிரபு அவர்களுக்கு விசிறிகளை உபயோகிப்பது எப்படி என்று தெரியாது போல் தோன்றுகிறது. கண்டிப்பாக இந்த விசிறி நூறு ஆண்டுகள் வர வேண்டும். அது உத்திரவாதமானது. நீங்கள் எப்படி விசிறினீர்கள்?" என்று கேட்டான்.

அதற்கு அரசன், "நன்றாக இருக்கிறது. இப்போது நான் எப்படி விசிறுவது என்றுக்கூட கற்றுக் கொடுக்க வேண்டும் போலிருக்கிறது" என்றான்.

"தயவுசெய்து கோபப்படாதீர்கள். ஏழே நாட்களில் இந்த விசிறி எப்படி இந்த நிலைக்கு வந்தது? நீங்கள் எப்படி விசிறினீர்கள்?" என்று அந்த வியாபாரி கேட்டான்.

அரசன் விசிறியை எடுத்தான். சாதாரணமாக ஒருவன் எப்படி விசிறுவானோ, அவ்வாறு விசிறிக் காண்பித்தான்.

உடனே அந்த வியாபாரி, "இப்போது எனக்குப் புரிந்து விட்டது. நீங்கள் இந்த மாதிரி விசிறக் கூடாது" என்றான்.

"வேறு எப்படித்தான் விசிறுவது?" என்றான் அரசன். உடனே வியாபாரி விவரிக்க ஆரம்பித்தான். "விசிறியை அசையாமல் பிடித்துக் கொள்ளுங்கள். உங்கள் முன் அதை அசையாமல் பிடித்துக் கொள்ளுங்கள். அதன்பின் உங்களது தலையை பக்கவாட்டில் இங்கும், அங்கும் அசையுங்கள். அப்போது இந்த விசிறி நூறு ஆண்டுகள் உழைக்கும். நீங்கள் போய்விடுவீர்கள். ஆனால், இந்த விசிறி மட்டும் அப்படியே இருக்கும். எனவே விசிறி மீது எந்தக் குறையும் இல்லை. நீங்கள் விசிறிய முறைதான் தவறானது. நீங்கள் விசிறியை அசையாமல் வைத்துக் கொண்டு உங்களது தலையை மட்டும் அசைத்திருக்க வேண்டும். எனவே எனது விசிறி எப்படி குற்றமுடையதாகும்? குற்றம் உங்களுடையது, எனது விசிறியினுடையதல்ல" என்று கூறினான்.

மனித வர்க்கமும் இதே போன்ற குற்றச்சாட்டிற்காக குறை கூறப்படுகிறது. மனித வர்க்கத்தைப் பாருங்கள். மனிதன் நோயுள்ளவனாக உள்ளான். கடந்த ஐந்து, ஆறு, பத்தாயிரம் வருடங்களாக சேர்த்து வைத்த நோயினால் சுகவீனனாக உள்ளான். ஆனால், மனிதன்தான் தவறாக இருக்கிறான். அவனது கலாச்சாரம் அல்ல என்று மீண்டும் மீண்டும்

கூறப்படுகிறது. மனிதன் நாறிக் கொண்டிருக்கிறான், எனினும் அவனது பண்பாடு புகழப்படுகிறது. நமது மாபெரும் பண்பாடு! நமது மாபெரும் மதங்கள்! எல்லாமே மாபெரும்தான்! ஆனால், கனிகளைப் பாருங்கள்!

எல்லோரும், "மனிதன்தான் தவறாகச் செல்கிறான், மனிதன் தன்னை மாற்றிக்கொள்ள வேண்டும்" எனக் கூறுகின்றனர். ஆனால், அது அப்படியல்ல. பத்தாயிரம் ஆண்டுகளாக மனிதனை அன்பினால் நிறைவடையச் செய்யாததற்கு நமது மதங்கள் மற்றும் பண்பாடு இவைகளின் அடிப்படைகள் யாவும் தவறான கருத்துக்களாக இருப்பதுதான் என்று ஒருவர் கூட எழுந்து கேள்வி கேட்பதில்லை. மேலும் கடந்த பத்தாயிரம் ஆண்டுகளில் மனிதனிடத்தில் அன்பானது பரிணமிக்கவில்லையெனில் நான் இப்போது கூறுகிறேன் இந்தப் பண்பாடு, மதம் இவைகளினால் எதிர்காலத்தில் கூட அன்பு செலுத்தும் ஒரு மனிதனைக் காணமுடியாது. எதை நாம் கடந்த பத்தாயிரம் ஆண்டுகளாக சாதிக்க முடியவில்லையோ அதை இனிவரும் பத்தாயிரம் ஆண்டுகளிலும் நிச்சயமாக சாதிக்க முடியாது. இன்றைய மனிதன் நாளையும் இதேபோலத்தான் இருப்பான். புத்தகத்தின் மேலட்டையைப் போன்று ஆசாரங்கள், நாகரீகம் மற்றும் தொழில் நுட்பம் இவைகள் காலத்திற்கு காலம் மாறுபடலாம். ஆனால் மனிதன் அப்படியே, என்றைக்கும் அப்படியே இருப்பான்.

நமது பண்பாட்டையும், மதத்தையும் நாம் மீண்டும் விமர்சனம் செய்யத் தயாராக இல்லை. ஆனால் நாம் அவைகளின் புகழை மட்டும் மூச்சைப் பிடித்துக் கொண்டு பாடுகிறோம். அவைகளின் பாதுகாவலர்கள், மற்றும் துறவிகளின் பாதங்களை முத்தமிடுகிறோம். நாம் நடந்து வந்த பாதையை திரும்பிப் பார்ப்பதற்குக் கூட நாம் ஒத்துக் கொள்வதில்லை. நாம் நடந்து வந்த வழிகளையும், நமது சிந்தனையின் திசைகளையும், அவைகள் சரியாக உள்ளனவா,

அவைகள் எல்லாமே தவறாகப் போய்விடுமா என்றுக்கூட நாம் பார்ப்பதில்லை.

நான் கூற விரும்புவது இதுதான்: அடிப்படையே கோளாறாக உள்ளது. அடிப்படைக் கருத்துக்களே பொய் யானவைகள். அதற்கு நிரூபணம் இன்றைய மனிதன். இதைவிட வேறு என்ன நிரூபணம் இருக்கமுடியும்?

நாம் ஒரு செடியின் விதையைப் போட்டு அதன் பழங்கள் கசப்பாகவும், விஷமானதாகவும் இருந்தால் அது எதை நிரூபிக்கிறது? அந்த விதையே கசப்பானதாகவும், விஷ மானதாகவும் இருந்திருக்க வேண்டும் என்பதைத்தான் நிரூபிக்கிறது. ஆனால் ஒரு குறிப்பிட்ட விதையானது கசப்பான பழங்களைக் கொடுக்குமா, கொடுக்காதா என்று முன் கூட்டியே கூறுவது கொஞ்சம் சிரமம்தான். அதை நீங்கள் கவனமாகப் பார்க்கலாம். அதை அமுக்கிப் பார்க்கலாம். அதை உடைத்துக்கூடப் பார்க்கலாம். ஆனால், அது தரும் பழங்கள் இனிப்பா அல்லது கசப்பா என்று முன் கூட்டியே தீர்மானிப்பது கடினம். நீங்கள் காலத்தின் பரிசோதனைக்கு காத்திருக்கத்தான் வேண்டும்.

ஒரு விதையை விதையுங்கள். ஒரு செடி முளைவிடும். வருடங்கள் கடக்கும். ஒரு மரம் தோன்றும். அதன் கிளைகளை ஆகாயத்தில் பரப்பும். பழங்கள் கொடுக்கும். அப்போதுதான் நாம் விதைத்த விதை கசப்பானதா, இல்லையா என்பதை நாம் அறிந்து கொள்ள முடியும். பத்தாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு விதைக்கப்பட்டு, இதுநாள்வரை போஷிக்கப்பட்டு வந்த பண்பாடு மற்றும் மதம் இவற்றின் விதைகளின் பழங்கள்தான் இன்றைய மனிதன். இப்போது அந்தப் பழம் கசக்கிறது; அது முழுவதும் துக்கமும், முரண்பாடுகளும் கொண்டுள்ளது.

ஆனால், அந்த விதைகளின் புகழ் பாடிக்கொண்டு, அவற்றிலிருந்து அன்பு மலர்களை எதிர்பார்த்துக் கொண்டி ருக்கும் மக்கள் வேறுயாருமல்ல. நாம்தான்.

அது நடக்கப் போவதில்லை என்று நான் மீண்டும் மீண்டும் கூறுகிறேன். ஏனென்றால், அன்பு வெளிப்படுத் துவதற்கான சாத்தியங்கள் யாவும் மதங்களால் அழிக்கப்பட்டு விட்டன; சாத்தியங்கள் விஷமாக்கப்பட்டு விட்டன. மனிதனைக் காட்டிலும், பண்பாடு, மதங்கள் இவைகளெல்லாம் இல்லாத பறவைகள், மிருகங்கள், தாவரங்கள் இவற்றில் அதிகமான அன்பு இருப்பதை நாம் காணமுடியும். பண்பட்ட, நாகரீகமடைந்த, முன்னேற்றம் அடைந்த இன்றைய மனிதனைக் காட்டிலும் நாகரீகமடையாத, பின்தங்கிய காட்டு மனிதர்களிடம் அன்பானது இன்னும் தெளிவாக உள்ளது. பழங்குடி மக்களிடம் அபி விருத்தியடைந்த நாகரீகம், பண்பாடு, மதம் இவைகள் கிடையாது என்பதை ஞாபகத்தில் கொள்ளுங்கள்.

தவறாமல் கோவில்கள், தேவாலயங்களுக்கு பிரார்த்தனை செய்ய போய்க்கொண்டு மதம், பண்பாடு, நாகரீகம் இவற்றில் பற்றுள்ளவனாக பாசாங்கு செய்துவரும் மனிதன் அன்பைப் பொருத்தமட்டில் மேலும் மேலும் மலடாக முன்னேறிக் கொண்டிருப்பது ஏன்? அதற்கு சில காரணங்கள் உள்ளன. நான் அவைகளை விவாதிக்க விரும்புகிறேன். இவைகளை நீங்கள் புரிந்துகொள்ள முடிந்தால் அன்பெனும் வற்றாத ஊற்று வெளிப்படும். அது கற்களுக்கு அடியில் அடைப்பட்டுள்ளது; அதனால் வெளிவர முடியவில்லை. அதைச் சுற்றிலும் எல்லாப் பக்கங்களிலும் சுவர்கள் எழுப் பப்பட்டுள்ளன. அதனால் கங்கை வேகத்துடன் பாய முடிய வில்லை. அன்பானது மனிதனுள் உள்ளது. அது வெளியில் இருந்து இறக்குமதி செய்யப்படுவதில்லை. நாம் சந்தைக்கு போகும்போது வாங்கி வரக்கூடிய சரக்கு அல்ல அது. அன்பு நமது வாழ்க்கையின் நறுமணம். அது ஒவ்வொரு வருக்குள்ளும் இருக்கிறது. அன்பைத்தேடி அலைவதென்பது, அன்பை மணம்புரியக் கெஞ்சுவதென்பது நாம் கூடுதலாக செய்ய வேண்டிய செயல் அல்ல. அன்பை வெளிக்கொணர்தல் என்பது நீ எங்கோ சென்று அதை இழுத்துக்கொண்டு வரக்கூடிய பகிரங்கமான செயல் அல்ல.

ஒரு சிற்பி ஒரு பாறையை செதுக்கிக் கொண்டிருந்தான். சிற்பங்கள் எவ்வாறு செய்யப்படுகின்றன என்பதைக் காண வந்த யாரோ ஒருவனுக்கு அந்தப் பாறையில் சிற்பத்தின் அறிகுறி கொஞ்சம்கூட தெரியவில்லை. சிற்பி தனது உளியாலும், சுத்தியாலும் பாறையை அங்குமிங்குமாக வெட்டிக் கொண்டிருப் பதைத்தான் அவனால் காண முடிந்தது.

"நீங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?" "நீங்கள் சிலையைச் செய்யப் போவதில்லையா?" "நான் இங்கு ஒரு சிற்பம் செய்யப்படுவதைப் பார்க்க வந்துள்ளேன். ஆனால், கல் வெட்டப்படுவது மட்டுமே என்னால் காணமுடிகிறது" என்று அவன் சிற்பியிடம் விசாரித்தான். அதற்கு சிற்பியானவன், "சிலை ஏற்கனவே இதனுள் மறைந்துள்ளது. அதை செய்ய வேண்டிய அவசியம் இல்லை. தேவையற்ற சில கற்பகுதிகள் எப்படியோ அந்த சிலையோடு ஒன்றாகி விட்டன. அதை பிரித்தெடுக்கப்பட வேண்டும். அப்போதுதான் அந்த சிலை தன்னை வெளிக்காட்டும். ஒரு சிலையானது வெளிப்படுத் தப்படுகிறது; அது வெளிச்சத்திற்கு கொண்டுவரப்படுகிறது" என்றான்.

அன்பும் மனிதனுள் அடைப்பட்டு கிடக்கிறது. விடுதலை செய்யப்படுவதைத்தான் அது கேட்கிறது. எனவே அன்பை எப்படி உருவாக்குவது என்பதல்ல கேள்வி. அதை எப்படி வெளிக்கொணர்வது என்பதுதான் கேள்வி. நாம் நம்மை எதனால் மூடி வைத்துள்ளோம்? அன்பு நம்மிடமிருந்து வெளிவர அனுமதிக்காத அது என்ன?

ஒரு மருத்துவரிடம் போய் ஆரோக்கியம் என்றால் என்ன? என்று கேட்டுப் பாருங்கள். இது விநோதமானதுதான். ஆனால் இந்த உலகில் உள்ள எந்த மருத்துவமும் ஆரோக்கியம் என்றால் என்னவென்று சொல்வதில்லை! மருத்துவ விஞ்ஞானம் முழுவதும் ஆரோக்கியத்தைப் பற்றியதாகத்தான் உள்ளது. அப்படியிருந்தும் ஆரோக்கியம் என்றால் என்ன? என்று

கூறுவதற்கு ஒருவர் கூட இல்லையே? நீங்கள் ஒரு மருத்துவரிடம் கேட்டால் அவர் நோய்கள் என்னென்ன, அவற்றின் அறிகுறி என்னென்ன என்று மட்டுமே தன்னால் கூறமுடியும் என்று கூறுவார். அவர் ஒவ்வொரு நோய்க்கும் என்னென்ன மருத்துவப் பெயர் என்றும், அதைக் குணப் படுத்துவதற்கான வழிகளையும் மட்டுமே அறிவார். ஆனால் ஆரோக்கியத்தைப் பற்றி அவர் ஒன்றும் அறிந்திருக்க மாட்டார். நோய் இல்லாமல் இருக்கும்போது என்ன உள்ளதோ, அதுதான் ஆரோக்கியம் என்று மட்டுமே அவரால் கூறமுடியும். இது ஏனெனில் ஆரோக்கியம் என்பது மனிதனுள் மறைந்துள்ளது. ஆரோக்கியம் என்பது மனிதனின் எண்ணங்களுக்கு அப்பாற் பட்டது.

நோய் வெளியிலிருந்து வருகிறது. எனவே அதை விவரிக்க முடியும்; ஆரோக்கியம் என்பது அவனுக்குள்ளிருந்து வருவது. எனவே அதை விவரிக்க முடியாது. விவரிப்பதற்கு எதிராக சவால் விடுவது ஆரோக்கியம். நோய் இல்லாமைதான் ஆரோக்கியம் என்று மட்டுமே நாம் கூறமுடியும். உண்மை என்னவெனில் ஆரோக்கியத்தை நாம் உருவாக்க வேண்டிய தில்லை; ஒன்று அது நோயால் மறைக்கப்பட்டிருக்க வேண்டும் அல்லது நோய் அகலும் போது அல்லது குணப்படுத்தும்போது அது தன்னை வெளிப்படுத்தும். ஆரோக்கியம் நமக்குள்ளேயே இருக்கிறது. ஆரோக்கியம் என்பது நமது இயல்பு.

அன்பும் நமக்குள்ளேயே உள்ளது. அன்புதான் இயற்கையாய் அமையப் பெற்ற நமது சுபாவம். எனவே அடிப்படையாகவே, மனிதனிடம் அன்பை உருவாக்கச் சொல்வது தவறானது. அன்பை எப்படி உருவாக்குவது என்பதல்ல பிரச்சனை. அன்பு ஏன் மனிதனிடமிருந்து வெளிப்படாமல் இருக்கிறது என்பதை எப்படி அலசி ஆராய்வது என்பதுதான் பிரச்சனை. அதற்குள்ள இடையூறுகள் என்ன? கஷ்டங்கள் என்ன? அன்பைத் தடுத்து நிறுத்தும் அணை எங்கே உள்ளது?

தடைகள் இல்லையெனில் கண்டிப்பாக அன்பு தன்னை வெளிக்காட்டிவிடும். அதற்கு வழிகாட்ட வேண்டியதோ அல்லது அதை தூண்டிவிட வேண்டியதோ அவசியம் இல்லை. போலித்தனமான பண்பாடும், இழிவையும் - தீங்கையும் உடைய தலைமுறைத் தத்துவங்களும் ஆகிய தடைகள் மட்டும் இல்லையெனில் ஒவ்வொரு மனிதனும் அன்பினால் நிரப்பப் பட்டிருப்பான். அன்பை எதுவும் திணறடிக்க முடியாது.

அன்பு என்பது கட்டாயம் சம்பவிக்கக்கூடியது. அன்புதான் நமது இயல்பு.

கங்கை இமயத்திலிருந்து பாய்கிறது. அது நீர், அது வெறுமனே பாய்ந்தோடுகிறது. அது எந்த மதகுருவிடமும் கடலுக்குப் போகும் வழியைக் கேட்பதில்லை. நாற்சந்தியில் நின்றுகொண்டு கடலுக்குச் செல்லும் வழியை போலீஸ்காரரிடம் கேட்கும் நதியை நீங்கள் எப்போதாவது பார்த்ததுண்டா? கடல் எவ்வளவு தூரத்தில் இருந்தாலும் அது எங்கு மறைந்திருந்தாலும் நதி நிச்சயமாக வழியைக் கண்டுபிடித்துவிடும். அது கட்டாயம் சம்பவிக்கக் கூடியது. நதிக்கு அதனுள் உந்துதல் உள்ளது. நதிக்கு வழிகாட்டும் புத்தகங்கள் இல்லை. ஆனால் நிச்சயமாக அது சேரவேண்டிய இடத்தைச் சேர்ந்துவிடும். கடலைச் சென்றடையும் அந்த வேகத்தில் அது மலைகளைக் குடைந்து, சமவெளிகளைக் கடந்து தேசத்தின் குறுக்கே செல்லும். தணிக்க முடியாத ஆசை, ஒருவித வேகம், ஒருவித சக்தி அதனுடைய இதயத்தினுள் உள்ளது.

ஆனால் நதியின் வழியில் தடைகள் மனிதனால் ஏற்படுத்தப்பட்டால்? ஒரு வேளை மனிதனால் அணைகள் கட்டப்பட்டால்? ஒரு நதியானது இயற்கையின் தடைகளை யெல்லாம் உடைத்துவிட்டு வந்துவிடும். சொல்லப்போனால் அவைகள் அதற்கு தடைகளை உருவாக்கினால், அதன் குறுக்கே அணை கட்டப்படுமானால் நதியானது கடலைச் சென்றடைவது சாத்தியமில்லாமல் போகலாம். படைப்பிலேயே மிக உயர்ந்த

அறிவாளியாகிய மனிதன் அவன் விரும்பினால் ஒரு நதியை அது கடலைச் சென்றடைவதை தடுக்க முடியும்.

இயற்கையின் ஒரு அடிப்படை ஒற்றுமை, ஒரு இணக்கம் உள்ளது. இயற்கையின் தடைகள், இயற்கையில் நாம் தெளிவாகக் காணும் தடைகள் எல்லாம் நமக்கு இருக்கும் சக்தியை எழுப்புவதற்கான சவால்கள்; நமக்குள் உறங்கிக் கொண்டிருக்கும் சக்திகளை உசுப்பிவிடுகின்ற சப்தங்கள்தான் இயற்கையின் தடைகள். இயற்கையில் இணக்கமின்மை என்பது கிடையாது.

நாம் ஒரு விதையை விதைக்கிறோம், அந்த விதையின் மேலுள்ள மண்ணின் பகுதியானது அந்த விதையை அமுக்கிக் கொண்டிருப்பது போலவும், விதையின் வளர்ச்சியை அது தடுப்பது போலவும் நமக்குத் தென்படும். பார்ப்பதற்கு அப்படித் தெரியலாம். ஆனால், உண்மையில் அந்த மண்ணின் பகுதி ஒரு தடையல்ல; அந்த மண் இல்லையெனில் விதையானது முளைவிட முடியாது. அந்த விதையானது பக்குவமடைந்து, உடைந்து, அது ஒரு இளம் மரக்கன்றாக ஆகவேண்டும் என்பதற்காகத்தான் மண்ணானது விதையை மூச்சுத் திணறச் செய்வதை போல் தெரியும். ஆனால் அந்த மண் ஒரு நண்பனின் கடமையைத்தான் செய்கிறது. அது ஒருவித மருத்துவ ரண சிகிச்சை.

ஒரு விதை செடியாக வளரவில்லையெனில், ஒரு வேளை அந்த மண் சரியாக இல்லாமல் இருக்கலாம், அல்லது அந்த விதைக்கு போதுமான தண்ணீர் இல்லாமல் இருக்கலாம், அல்லது அதற்கு போதுமான சூரிய ஒளி கிடைக்காமல் இருந்திருக்கலாம் என்றுதான் நாம் காரணம் கூறுவோமே தவிர அந்த விதையை நாம் குறை கூறுவதில்லை. ஆனால் மனித வாழ்க்கையில் மலர்கள் மலரவில்லையெனில் நாம் மனிதன்தான் அதற்கு பொறுப்பு என்று கூறுகிறோம். அதற்கு ஒரு வேளை தரம் குறைந்த உரம், தண்ணீர் பற்றாக்குறை, சூரிய ஒளி

போதாமை இவைகள் கூட காரணங்களாக இருக்கலாமே என்று யாரும் சிந்திப்பதும் இல்லை. அதற்காக எதுவும் செய்வதும் இல்லை. வெறுமனே மனிதன் கெட்டவனாக இருக்கிறான் என்று மட்டும் குறை கூறப்படுகிறது. எனவேதான் மனிதன் என்னும் செடியானது வளர்ச்சியடையாமலேயே இருந்துவிட்டது; சிநேகமில்லாமல் அடக்கி வைக்கப்பட்டு விட்டது; எனவேதான் அது மலரும் பருவத்தை அடைய முடியவில்லை.

இயற்கை ஒரு சீரான இணக்கம் நிறைந்தது. ஆனால் இயற்கையின் மீது மனிதன் திணித்துள்ள செயற்கைத் தனங்களும், அதன் குறுக்கே அவன் கட்டியுள்ள விஷயங்களும், இயந்திரத்தனமான உபாயங்களும், மனிதனின் இயற்கையான வாழ்க்கை ஓட்டத்தின் குறுக்கே அனேக இடங்களில் தடைகளை உருவாக்கி வாழ்க்கை நதியின் ஓட்டத்தை நிறுத்திவிட்டது. ஆனால் நதி குற்றவாளியாக்கப்பட்டு விட்டது. "மனிதன் கெட்டவன்; விதை விஷமானது" என்று எல்லோரும் கூறகின்றனர்.

எனவே, இந்த அடிப்படைத் தடைகள் எல்லாம் மனிதனால் உண்டாக்கப்பட்டவைதான், மனிதனால் உருவாக்கப் பட்டவைதான். இல்லையெனில் அன்பெனும் ஆறு சுதந்திர மாகப் பாய்ந்து கடவுள் என்னும் கடலைச் சென்றடைந் திருக்கும் என்கிற உண்மைக்கு உங்களது கவனத்தை நான் ஈர்க்கிறேன். அன்பு மனிதனுள் இயற்கையாவே உள்ளது. அதன் மேலுள்ள தடைகள் விழிப்புணர்வுடன் நீக்கப்படுமானால் அன்பு வழிந்தோடும். அப்போது அந்த அன்பானது கடவுளைத் தொடுமளவிற்கு, யாவர்க்கும் மேலான ஒன்றைத் தொடுமளவிற்கு உயர முடியும்.

மனிதனால் உருவாக்கப்பட்ட இந்தத் தடைகள் என்னென்ன? முதலாவதாக மிகவும் வெளிப்படையான தடை காமத்திற்கு உள்ள எதிர்ப்பு, தீவிர உணர்ச்சிக்கு எதிரான நிந்தனைதான். இந்தத் தடைதான் மனிதனிடத்தில் அன்பு

பிறப்பெடுப்பதற்கான சாத்தியங்களை அழித்துவிட்டது.

எளிய உண்மை என்னவெனில், காமம்தான் அன்பின் ஆரம்ப இடம். அன்பென்னும் பிரயாணத்தின் ஆரம்பம் காமம்தான். அதுதான் ஆதிமூலம். அன்பென்னும் கங்கையின் கங்கோத்ரி காமம்தான். ஆனால், எல்லோரும் அதற்கு விரோதிகள் போல் நடக்கின்றனர். இந்த கங்கோத்ரியை எல்லா பண்பாடுகளும், எல்லா மதங்களும், எல்லா குருமார்களும், எல்லா ஞானிகளும் தாக்குகின்றனர். எனவே, அந்த நதி அப்படியே அடைப்பட்டுக் கிடக்கிறது. காமம் பாவச் செயல், காமம் மததூஷணை, காமம் விஷம் போன்றது என்றெல்லாம் எப்போதும் கூக்குரலிடுகின்றனர். ஆனால், காம சக்திதான் நம்முள் உள்ள அன்பென்னும் சாகரத்தை முடிவாகச் சென்றடைகிறது என்பதை நாம் ஒருபோதும் உணர்வதில்லை. அன்பு என்பது பாலுணர்வு சக்தியின் உருமாற்றம்தான். காமம் என்னும் விதையிலிருந்துதான் அன்பு மலர முடியும்.

ஒரு கரித்துண்டைப் பார்த்தவுடன் அந்தக் கரித் துண்டுதான் வைரமாக உருமாறுகிறது என்பது உங்களுக்கு ஒருபோதும் உறைப்பதில்லை. ஒரு கரித்துண்டில் இருக்கும் மூலப்பொருள்களும், வைரத்தில் இருக்கும் மூலப்பொருள்ளும் ஒன்றானவையே; முக்கியமாக அவை இரண்டிற்கும் அடைப் படையில் வித்தியாசங்கள் கிடையாது. பல ஆயிரம் ஆண்டுகள் பூமிக்கடியில் பலவித மாற்றங்கள் அடைந்தபின் கரியானது வைரமாகிறது.

ஆனால், கரியை யாரும் முக்கியமானதாகக் கருதுவதில்லை. வீட்டில் கரியை விருந்தாளிகள் வந்தால் பார்க்க முடியாத இடத்தில்தான் அதைப் போட்டு வைக்கிறோம். ஆனால் வைரத்தை கழுத்திலோ அல்லது மார்பிலோ எல்லோரும் பார்க்கும்படி அணிகிறோம். வைரமும், கரியும் ஒன்றுதான். ஒரே மூலப்பொருள், அதனதன் பிரயாணத்தில் சென்றடைந்த இரு வேறு இடங்கள்தான் அவை. வெறும்

கரும்புகையைத் தவிர வேறொன்றையும் கரி கொடுப்பதில்லை என்று அதைப் பார்த்த மாத்திரத்திலேயே நீங்கள் வெறுத்தால் அந்தக் கரியானது வைரமாக மாறக்கூடிய சந்தர்ப்பம் அந்த இடத்திலேயே முடிந்து போகின்றது. அந்தக் கரித்துண்டானது வைரமாக மாறியிருக்க முடியும். ஆனால் நாம் கரியை வெறுக்கிறோம். எனவே அது அபிவிருத்தி அடைவதற்கான சாத்தியங்கள் அங்கேயே முடிந்து விடுகின்றன.

காமத்தின் சக்தி மட்டுமே அன்பாக மலர முடியும். ஆனால் எல்லோரும், மனித வர்க்கத்தின் மாபெரும் சிந்தனையாளர்களும் கூட அதற்கு எதிராக உள்ளனர். அந்த எதிர்ப்பானது அன்பென்னும் விதை முளைவிடுவதற்கு அனுமதிக்காது. அன்பென்னும் அரண்மனை அஸ்திவாரத்திலேயே அழிக்கப்பட்டுவிடுகிறது. காமத்திற்கு எதிரான விரோதம் அன்பு வெளிப்படுவதற்கான சாத்தியங்களை அழித்துவிட்டது. எனவே கரியானது வைரமாக மாறுவதற்கு தகுதியற்றுப் போய்விட்டது.

அடிப்படையிலேயே தவறான கருத்துக்களை கொண்டிருப்பதால், காமத்தின் பல்வேறு நிலைகளை ஏற்றுக் கொண்டு, அவைகளை அபிவிருத்தி செய்துகொண்டு, அதை உருமாற்றம் செய்வதற்கான செயல் முறைகளை செய்ய வேண்டியதன் அவசியத்தை ஒருவரும் உணர்வதில்லை. நமக்கு எதிரியாக இருக்கும் ஒருவனை, நாம் எதிர்க்கும் ஒருவனை, நாம் தொடர்ந்து சண்டையிட்டுக் கொண்டிருக்கும் ஒருவனை மாற்றியமைப்பது எப்படி? மனிதனுக்கும் அவனது சக்திக்கும் இடையே ஒரு கலகம் வெளியில் இருந்து திணிக்கப்பட்டுள்ளது. மனிதன் அவனது பாலுணர்வு சக்திக்கு எதிராக போரிடும்படி, அவனது காமத் தூண்டுதல்களை எதிர்க்கும்படி கற்றுக் கொடுக்கப்பட்டுள்ளான்.

மனமானது விஷம் நிறைந்தது. எனவே அதை எதிர்த்து "போராடு" என்று மனிதனிடம் கூறப்பட்டுள்ளது. மனிதனுள்

தான் மனம் உள்ளது. காமமும் அவனுள்தான் உள்ளது. அப்படியிருக்கும்போது மனிதன் தனது உட்பூசலகளில் இருந்து விடுபட வேண்டும் என்று எல்லோரும் எதிர்பார்க்கின்றனர். அவன் சண்டையிட வேண்டும் அதே சமயம் சமாதானமாகவும் போக வேண்டுமாம். பெருந்தலைவர்களின் உபதேசங்கள்தான் இப்படி உள்ளன. ஒரு பக்கம் அவனை பைத்தியமாகும்படி செய்கிறார்கள். மறுபக்கம் அவனை குணப்படுத்துவதற்கு பைத்தியக்கார ஆஸ்பத்திரிகளை திறக்கிறார்கள். அவர்களே நோயின் கிருமிகளை பரப்பிவிட்டு அதன் பின்னர் நோயாளிகளை குணபபடுத்த ஆஸ்பத்திரிகளை கட்டுகின்றனர்.

சிற்றின்பத்தில் இருந்து மனிதனைப் பிரிக்க முடியாது என்பது மற்றொரு முக்கியமான கருத்து. காமம்தான் ஆரம்ப இடம்; மனிதன் அதில்தான் பிறந்துள்ளான். கடவுள் காமத்தைத்தான் படைப்பின் ஆரம்ப நிலையாக ஏற்படுத்தியுள்ளார். கடவுளே கூட பாவச் செயல் என்று கருதாத ஒன்றை மிகப்பெரும் மனிதர்கள் பாவச்செயல் என்றழைக்கின்றனர். கடவுள் காமத்தை ஒரு பாவச் செயலாக கருதியிருப்பாரேயாகில், இந்த உலகில் கடவுளைத் தவிர மிகப்பெரிய பாவி வேறு யாரும் இருக்க முடியாது; இந்த பிரபஞ்சத்திலேயே அவரைவிட மிகப் பெரிய பாவி இருக்க முடியாது.

ஒரு மலரின் மலர்ச்சி காமத்தின் வெளிப்பாடு என்பதை, அது ஒரு சிற்றின்பச் செயல் என்பதை நீங்கள் எப்போதாவது உணர்ந்ததுண்டா? ஒரு மயில் முழு அழகுடன் ஆடுகிறது; ஒரு கவிஞன் அதைப் பார்த்து ஒரு கவிதை பாடுவான்; ஒரு துறவி கூட ஆனந்தம் அடைவான். ஆனால் மயிலின் அந்த நடனம் காமத்தின் பகிரங்கமான வெளிப்பாடு என்பதை, சிற்றின்பத்தின் ஆரம்பச் செயல் என்பதை அவர்கள் உணர்வதில்லையா? யாரை திருப்திப்படுத்துவதற்காக அந்த மயில் நடனமாடுகிறது? மயில் தனது இணையை, தனது துணையை அழைக்கின்றது. குயில் பாடுகிறது. ஒரு சிறுவன் வாலிபனாகிறான், ஒரு சிறுமி பெண்மை அடைகிறாள். இவையெல்லாம் என்ன? என்ன

விளையாட்டு இது? இது என்ன லீலை? சிற்றின்ப சக்தியின், அன்பின் அடையாளங்கள் தான் இவைகள். இப்படிப்பட்ட அன்பின் வெளிப்பாடுகள் எல்லாம் சக்தியுடன் கொப்பளித்துக் கொண்டிருக்கும் காமத்தை ஏற்றுக்கொண்டு காமத்தை வெளிப்படுத்தும் உருமாற்றங்கள்தான். ஒருவரது வாழ்நாள் முழுவதும், அன்பை வெளிப்படுத்தும் எல்லாச் செயல்களும், அன்பைத் தூண்டுகின்ற எல்லா நோக்கங்களும் காம சக்தியின் ஆரம்ப மலர்ச்சியாகும்.

மதமும், பண்பாடும் மனிதனின் மனதில் காமத்திற்கு எதிரான விஷத்தை ஊற்றுகின்றன. அவைகள் சச்சரவை, யுத்தத்தை உருவாக்குகின்றன; அவைகள் மனிதனை அவனது சொந்த ஆரம்ப சக்திக்கு எதிராக போரிடவைக்கின்றன. அதனால் மனிதன் மிகவும் பலவீனமாக, முரடனாக, வெட்கம் கெட்டவனாக, அன்பற்றவனாக ஒன்றுமே இல்லாதவனாக ஆகிவிட்டான். எனவே காமத்தோடு நாம் கொள்ளவேண்டியது நட்புதானே தவிர, விரோதம் அல்ல. காமம் இன்னும் தூய்மையான உயர்நிலைக்கு உயர்த்தப்பட வேண்டும்.

புதிதாக திருமணமான ஒரு ஜோடியை வாழ்த்தும்போது முனிவர் ஒருவர் மணப்பெண்ணிடம், "நீ பத்துக் குழந்தை களுக்கு தாயாக இரு. இறுதியாக உன்னுடைய கணவன் உனக்கு பதினொராவது குழந்தையாக ஆகட்டும்" என்று வாழ்த்தினார்.

காமம் உருமாற்றப்படுமேயானால், மனைவி தாயாக ஆக முடியும்; காமவெறியை மாற்றவிட்டால் காமம் அன்பாக ஆகிவிடும் காமசக்தி மட்டுமே அன்பு சக்தியாக மலர முடியும். ஆனால் நாம் மனிதனிடம் காமத்தை குறித்து வெறுப்பை நிரப்பி விட்டோம். அதன் பலனாக அன்பு மலரவில்லை. பாலுணர்வை ஏற்றுக் கொள்வதன் மூலம்தான் பிற்காலத்தில் என்ன ஏற்பட வேண்டுமோ, அதாவது இனிவரப் போகும் மனித இனம் சரியானதாக உண்டாக்கப்பட முடியும். பலத்த எதிர்ப்பு இருப்பதால் அன்பென்னும் ஓடை அதை உடைத்துக் கொண்டு

வர முடியவில்லை. ஆனால், மற்றொரு பக்கத்தில் காமம் மனிதனுக்குள் ஊடுருவிக் கொண்டிருக்கிறது. மனிதனின் உள்ளுணர்வு காமத்தினால் சேறாக்கப்பட்டு விட்டது.

மனிதன் உள்ளுணர்வு மேலும், மேலும் காமம் மிக்கவனாகி விட்டான். நமது பாடல்கள், கவிதைகள், ஓவியங்கள், நமது கோயில்களில் உள்ள உருவங்கள் இவை யாவும் உண்மையிலேயே காமத்தையே மையமாகக் கொண்டுள்ளன. ஏனெனில் நமது மனங்களும் காமம் என்னும் அச்சில்தான் சுழன்று கொண்டிருக்கின்றன. இந்த உலகில் எந்த மிருகமும் மனிதனைப் போல் காம வெறிகொண்டிருக் கவில்லை. விழிப்பிலும், தூக்கத்திலும், அவன் பழகும் விதங்கள் மற்றும் பண்புகளிலும் எங்குமே மனிதன் காமாந்தகனாகத்தான் இருக்கிறான். ஒவ்வொரு கணமும் மனிதன் பாலுணர்வில் ஓயாது சுற்றி வருகின்றான்.

காமத்தின் மேல் இப்படி விரோதம் கொள்வதனாலும், காமத்தை உள்ள எதிர்த்து மற்றும் அடக்குவதாலும் மனிதன் உள்ளுக்குள்ளேயே அழுகிக் கொண்டிருக்கிறான். மனிதன் தன் வாழ்க்கையின் ஆணிவேர் எதுவோ, அதிலிருந்து தன்னை ஒருபோதும் விடுவித்துக் கொள்ள முடியாது. மேலும் இந்த நிரந்தர உட்பூசலினால் அவனது வாழ்வே நோயுற்று விட்டது. மனித வர்க்கத்திடம் இன்று கண்கூடாகத் தெரியும் நெறி கோணிய காமச் செயல்களுக்குக் காரணம் அவனது தலைவர்களும், துறவிகளும்தான். அவர்களைத்தான் குறை கூற வேண்டும். மனிதன் இது போன்ற மதச்சாரியர்கள், ஒழுக்க போதனையாளர்கள் மற்றும் மதத் தலைவர்கள் இவர்களிட மிருந்தும், இவர்களது போலித்தனமான போதனைகளில் இருந்தும் தன்னை விடுவித்துக்கொள்ளாதவரை மனிதனிடத்தில் அன்பு மேலோங்கி வருவதற்கான சாத்தியங்கள் இல்லை.

எனக்கு ஒரு கதை ஞாபகத்திற்கு வருகிறது:

ஒரு ஞாயிற்றுக்கிழமை ஏழை விவசாயி ஒருவன்

வீட்டைவிட்டு வெளியே புறப்பட்டான். வாசலில் அவனைப் பார்க்க வந்த பால்ய நண்பன் ஒருவனைச் சந்தித்தான். விவசாயி அவனிடம், "வாப்பா! இத்தனை வருடமாக எங்கே போயிருந்தாய்? உள்ளே வா! இதோ பாரு, நான் சில நண்பர்களை சந்திப்பதாகச் சொல்லி இருந்தேன். அவர்களை சந்திக்காமல் ஒத்திப்போட முடியாது. எனவே நீ என்னுடைய வீட்டில் தயவு செய்து ஓய்வெடு. நான் இன்னும் ஒரு மணி நேரத்தில் வந்து விடுவேன். நான் விரைவில் திரும்பிவிடுவேன். நாம் இருவரும் நீண்ட நேரம் பேசலாம்" என்று நண்பனிடம் கூறினான்.

அதற்கு நண்பன், "வேண்டாம், நான் உன்னோடு வந்தால் நன்றாக இருக்காதா? என்னுடைய ஆடைகள் மிகவும் அழுக்காக இருக்கின்றன. நீ ஏதாவது சுத்தமான ஆடைகள் கொடுத்தால் நான் ஆடை மாற்றிவிட்டு உன்னோடு வருகின்றேன்" என்றான்.

கொஞ்ச காலத்திற்கு முன்பு, அரசன் அந்த விவசாயிக்கு விலை மதிப்புள்ள ஆடைகளைக் கொடுத்திருந்தான். ஏதாவது பெரிய நிகழ்ச்சிகளில் அதை அணியலாம் என்று அந்த விவசாயி அதை பத்திரப்படுத்தி வைத்திருந்தான். அவன் அதை சந்தோஷமாக வெளியில் எடுத்துக் கொடுத்தான்.

அவனது நண்பன் விலையுயர்ந்த கோட்டையும், தலைப்பாகையும், வேஷ்டியையும், அழகான செருப்புகளையும் அணிந்து கொண்டான். அவன் பார்ப்பதற்கு ராஜாவைப் போல இருந்தான். அவனது நண்பனைப் பார்த்த விவசாயியே கொஞ்சம் பொறாமை அடைந்தான். அவனோடு ஒப்பிட்டுப் பார்த்தால் விவசாயி ஒரு வேலைக்காரனைப் போல் காட்சியளித்தான். தன்னுடைய நல்ல ஆடைகளை அவனுக்குக் கொடுத்தது தப்பாகி விட்டதே என்று நினைத்து தாழ்வு மனப்பான்மை கொள்ள ஆரம்பித்தான். இப்படியே போனால் எல்லோரும் அவனது நண்பனைத்தான் பார்ப்பார்கள். மேலும்

இவனை அவனது வேலைக்காரன் அல்லது எடுபிடி என்றுதான் நினைப்பார்கள் என்று எண்ணினான்.

அவன் தன்னை ஒரு நல்ல நண்பன் என்றும், கடவுள் பக்தி உள்ளவன் என்றும் நினைத்துக் கொண்டு தனது மனதை சாந்தப்படுத்த முயற்சித்தான். அவன் கடவுள் மற்றும் உயர்ந்த விஷயங்களைத்தான் சிந்திப்பான். "இந்த நேர்த்தியான கோட்டிலும், விலையுயர்ந்த தலைப்பாகையிலும் என்ன இருக்கிறது?" என்று தீர்மானித்தான். ஆனால், அவன் எவ்வளவுக்கெவ்வளவு அவனுள் வாதிட முயற்சித்தானோ, அவ்வளக்கவ்வளவு அந்த கோட்டும், தலைப்பாகையும் அவனது மனதில் அதிகம் இடம் பிடிக்க ஆரம்பித்தன.

போகும் வழியில், அவர்கள் இருவரும் ஒன்றாகச் சென்று கொண்டிருந்த போதிலும், வருவோர் போவோர் எல்லாம் அவனது நண்பனை மட்டுமே பார்த்தனர்; யாரும் அந்த விவசாயியை கவனிக்கவில்லை. அவன் தன்னை தாழ்வதாக உணர ஆரம்பித்தான். அவன் தனது நண்பனிடம் பேசிக் கொண்டு வந்தான். ஆனால், அவனுக்குள் அந்த கோட்டையும், தலைப்பாகையும் பற்றியே சிந்தித்துக் கொண்டு வந்தான்!

அவர்கள் பார்க்க வேண்டிய நண்பனின் வீட்டைச் சென்றடைந்தனர். அவன் தனது நண்பனிடம், "இவன் என்னுடைய நண்பன், பால்ய நண்பன், மிகவும் நேசம் நிறைந்தவன்" என்று கூறிவிட்டு, "ஆனால் இந்த ஆடைகளா? அவை என்னுடையவை!" என்று பீறிட்டான்.

அவனுடன் வந்த நண்பன் அதிர்ச்சியடைந்தான். இவர்கள் பார்க்கச் சென்ற நண்பனும் ஆச்சரியமடைந்தான். தான் ஆடைகளைப் பற்றி கூறியது தேவையில்லாதது என்பதை விவசாயி உணர்ந்தான். ஆனால், இப்போது உணர்ந்து என்ன செய்வது. அவன் தனது தவறுக்காக தன்னைத்தானே கடிந்து கொண்டான்.

வீட்டைவிட்டு வெளியே வந்ததும் தனது நண்பனிடம் மன்னிப்புக் கேட்டான்.

"எனக்கு இடி விழுந்ததைப் போல இருந்தது. நீ எப்படி அந்த மாதிரி சொல்லலாம்?" என்று அவனது நண்பன் கேட்டான்.

அதற்கு அந்த விவசாயி, "மன்னித்துக் கொள், ஏதோ நாக்குளறிவிட்டேன், நான் தப்புத்தான் செய்து விட்டேன்" என்று கூறினான்.

ஆனால், நாக்கு ஒருபோதும் பொய் பேசாது. ஒருவனுடைய மனதில் ஏதாவது இருந்தால்தான் அது வார்த்தையாக வாயிலிருந்து வெளியே வருமே தவிர, நாக்கு ஒருபோதும் தவறு செய்யாது. "என்னை மன்னித்துவிடு, நான் எப்படி அந்த வார்த்தைகளைச் சொன்னேன் என்று எனக்கேத் தெரியவில்லை" என்றுக் கூறினான். ஆனால், அவனது மனதில் இருந்துதான் அந்த எண்ணம் மேலே வந்தது என்பதை அவன் நன்றாக அறிவான்.

மீண்டும் அவர்கள் அடுத்த நண்பனின் வீட்டிற்கு புறப்பட்டனர். இப்போது அவன் அந்த ஆடைகள் தன்னுடையவை என்று கூறுவதில்லை என்று உறுதியாக தீர்மானித்துக் கொண்டான். அவன் தனது மனதை கெட்டி யாக்கிக் கொண்டான். அவர்கள் வீட்டு வாசலை அடையும் போது அந்த விவசாயி ஆடைகள் தன்னுடையது என்றுக் கூறுவதில்லை என்ற மாற்ற முடியாத தீர்மானத்திற்கு வந்திருந்தான்.

எதுவும் சொல்லக்கூடாது என்று எந்த அளவுக்கு அவன் தீர்மானம் செய்கிறானோ, அவ்வளக்கவ்வளவு அவனது உள்ளுணர்வில் அந்த ஆடைகள் அவனுக்குச் சொந்தம் என்பது இன்னும் தீவிரமாக வேரூன்றும் என்பதை அவன் அறிந்திருக்க மாட்டான். மேலும் இது போன்ற தீர்மானங்கள் எப்போது எடுக்கப்படுகின்றன? ஒரு மனிதன் எப்போது தீர்க்கமான

முடிவுகள் எடுக்கிறானோ, அதாவது உதாரணத்திற்கு பிரம்மச் சாரியாக இருப்பதாக சூளுரைக்கிறான் என்றால், அதன் பொருள் அவனின் காமம் அவனுக்குள்ளிருந்து தாங்க முடியாமல் வெளிவருகிறது என்பதுதான். ஒருவன் தான் இன்றிலிருந்து குறைவாக சாப்பிடப் போவதாகவோ, அல்லது உபவாசம் இருக்கப் போவதாகவோ முடிவெடுத்தால், அந்த முடிவு அவனுக்குள் அதிகம் சாப்பிட வேண்டும் என்கிற ஆசை உள்ளதைத்தான் காட்டுகிறது. நமது பலவீனங்கள் எதுவோ அதுவே நாமாக இருக்கிறோம். ஆனால், நாம் நமது பலவீனங்களை அடக்குவதற்காக தீர்மானிக்கிறோம். எனவே இயற்கையாகவே அது நமது ஆழ்மனதின் பூசல்களுக்கு மூலக்காரணம் ஆகிவிடுகிறது.

அதே போன்று உள் மனப் போராட்டங்களுடன், நமது விவசாயியும் நண்பனின் வீட்டிற்குள் நுழைந்தான். அவன் மிகவும் கவனமாக பேச்சை ஆரம்பித்தான்; "இவன் எனது நண்பன்" - ஆனால் யாரும் அவன் மீது கவனத்தைச் செலுத்தவில்லை என்பதைப் பார்த்தான். எல்லோரும் அவனது நண்பனையும், அவனது ஆடைகளையுமே ஆச்சரியமாகப் பார்த்தனர். அதைப் பார்த்ததும், "அது என்னுடைய கோட்! என்னுடைய தலைப்பாகை!" என்று மனதுக்குள் எண்ணினான். அப்போது மீண்டும் தனக்குள் தான் ஆடைகளை பற்றிப் பேசப் போவதில்லை என்பதை ஞாபகப்படுத்திக் கொண்டான். அவன் தீர்மானமாக இருந்தான். "எல்லோரும் ஏதாவது ஒரு ஆடை உடுத்தியிருப்பார்கள். எளிய ஆடையோ அல்லது விலையு யர்ந்த ஆடையோ அதெல்லாம் சின்ன விஷயம்" என்று தனக்குள்ளேயே விவரித்துக் கொண்டான். எனினும் அந்த ஆடைகள் அவனது கண்களின் முன் கடிகாரத்தின் ஊசல் குண்டு போல இங்கும் - அங்கும் ஆடியது.

அவன் தனது அறிமுகத்தை மீண்டும் ஆரம்பித்தான், "இவன் எனது நண்பன், பால்ய நண்பன், நல்ல பண்பாளன். ஆனால், இந்த உடைகள்தானே? அவைகள் அவனுடையவை தான், என்னுடையவையல்ல" என்றான்.

அவன் அங்கிருந்து வந்ததும், மீண்டும் தாராளமாக மன்னிப்புக் கேட்டுக் கொண்டான். தான் செய்தது பெருந்தவறு என்று அவன் ஒத்துக் கொண்டான். இப்போது அவனுக்கு எதைச் செய்வது, எதைச் செய்யாமல் இருப்பது என்று ஒரே குழப்பமாக இருந்தது. "ஆடைகள் இந்த அளவுக்கு இதற்கு முன்பு என்னை ஆட்டிப்படைத்ததில்லை! அடக் கடவுளே, எனக்கு என்ன ஆயிற்று? " என்று அவன் கதறினான்.

அவனுக்கு என்ன ஆயிற்று? அவன் உபயோகித்த இந்த முறையையே, கடவுளே உபயோகித்திருந்தாலும் கூட அந்த ஆடைகள் கடவுளின் மனதையும் ஆட்டிப் படைக்கும் என்பதை அவன் அறிய மாட்டான்.

மிகவும் கோபமடைந்த அவனது நண்பன் இனி அவனோடு மீண்டும் வரப் போவதில்லை என்று கூறினான். ஆனால், விவசாயி அவனது கைகளைப் பிடித்துக் கொண்டு, "தயவு செய்து அப்படி செய்து விடாதே, எனது வாழ்நாள் முழுவதும் ஒரு நண்பனிடம் இது போன்று பண்பற்ற முறையில் நடந்து கொண்டதற்காக வருந்துகிறேன். மீண்டும் அந்த ஆடைகளைப் பற்றி குறிப்பிடுவதில்லை என்று சத்தியம் செய்கிறேன். இனிமேல் ஆடைகளைப் பற்றி குறிப்பிடுவதில்லை என்று இதயப்பூர்வமாக, கடவுள் மீது ஆணையிட்டுக் கூறுகிறேன்" என்றான்.

ஆனால், இது போன்ற சத்தியம் செய்பவர்களிடம் ஒருவன் மிகவும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். ஏனென்றால், ஒருவன் ஏதாவது ஒன்றை ஆணையிட்டு கூறுகிறான் என்றால், அதன் ஆழத்தில் நிறைய விஷயங்கள் உள்ளன என்று கொள்ள வேண்டும். தீர்மானம் அல்லது உறுதி செய்தல் என்பது மேல்மட்ட மனதினால் எடுக்கப்படுகிறது. ஆனால் எந்த விஷயம் குறித்த தீர்மானம், உறுதி எடுக்கப்பட்டுள்ளதோ, அதற்கு எதிரான விஷயங்கள் நமது ஆழ்மனதில் புதிர் நெறியாக அப்படியே இருக்கும். மனதை

நீங்கள் பத்துப் பகுதிகளாக பிரித்துக் கொண்டால், அது ஒரே ஒரு பகுதியில் மட்டும் அதாவது மேல் பகுதியில் மட்டும்தான் நாம் தீர்மானித்திருப்பதை ஆதரிக்கும். பாக்கியிருக்கும் ஒன்பது பகுதிகளும் அதற்கு எதிராகத்தான் இருக்கும். உதாரணமாக பிரம்மச்சரிய சபதம் நாம் எடுத்தால் அது மனதின் ஒரு பகுதியால் மட்டும்தான் எடுக்கப்படுகிறது. எஞ்சியுள்ள மனதின் பகுதிகள் காமத்தைக் குறித்து பைத்தியம் பிடித்து இருக்கும், எஞ்சியுள்ள பகுதியானது கடவுளால் மனிதனிடம் எது நிலை நாட்டப்படுகிறதோ, அதற்காக கதறிக்கொண்டிருக்கும். இப்போதைக்கு இது இப்படியே இருக்கட்டும்.

அவர்கள் மூன்றாவது நண்பனின் வீட்டிற்கு சென்றனர். அந்த விவசாயி கடுமையாக அடக்கிக் கொண்டான். அடக்கி வைத்திருக்கும் மக்கள் மிகவும் அபாயகரமானவர்கள். ஏனெனில் அவர்களுக்குள் ஒரு உயிருள்ள எரிமலை இருந்து கொண்டே இருக்கும். வெளியில் பார்ப்பதற்கு அவர்கள் உறுதியானவர் களாகவும், முழுவதும் அடக்கி வைத்திருப்பவர்கள் போலவும் தெரியும். ஆனால் சுதந்திரமாக இருக்க வேண்டும் என்பது போன்ற உந்துதல் கண்டிப்பாக அவர்களுக்குள் இறுக்கி வைக்கப் பட்டிருக்கும்.

வெளியிலிருந்து திணிக்கப்படுகின்ற எதுவும் தொடர்ந்தோ அல்லது முழுமையாகவோ ஒருவனிடம் நிலைத்து நிற்காது என்பதை தயவு செய்து ஞாபகத்தில் கொள்ளுங்கள். ஏனென்றால், அதை நிலை நிறுத்துவதற்கு அளவுக்கு அதிகமான ஊக்கம் செலுத்தி உழைக்க வேண்டும். கண்டிப்பாக நீங்கள் எப்போதாவது ஓய்வு எடுத்துத்தான் ஆக வேண்டும்.

உங்களது கைகளை எவ்வளவு நேரம்தான் இறுக மூடிக் கொண்டிருக்க முடியும்? இருபத்துநான்கு மணி நேரமுமா? எவ்வளவு அதிகம் இறுக்கப்படுகிறதோ அவ்வளவுக்கு அது அதிகமாக களைப்படையும். எனவே அது விரைவிலேயே தானாகத் திறந்துவிடும். கடினமாக வேலை செய்யுங்கள்,

அதிகமாக சக்தியை விரயம் பண்ணுங்கள், அப்போது நீங்கள் விரைவில் களைப்படைந்து விடுவீர்கள். எப்போதும் ஒவ்வொரு செயலுக்கும் எதிர்செயல் ஒன்று உண்டு. அது எப்போதும் உடனுக்குடன் செய்யப்பட்டுவிடும். உங்களது கைகள் எல்லா நேரங்களிலும் திறந்து இருப்பது முடியும். ஆனால் கை முஷ்டியை மடக்கிக் கொண்டு எப்போதும் இருக்க முடியாது. உங்களை களைப்படையச் செய்யும் எதுவுமே உங்களது வாழ்க்கையின் இயற்கையான, இயல்பான பகுதியாக இருக்க முடியாது. ஏதாவது ஒன்றை கட்டாயப்படுத்தி திணிக்கும்போது கொஞ்சம் ஓய்வெடுக்கும் காலமும் கண்டிப்பாக ஏற்பட்டே ஆகவேண்டும். எனவேதான் எந்த ஒரு துறவியும் எவ்வளவுக் கெவ்வளவு கைத்தேர்ந்தவராக இருக்கிறாரோ, அந்த அளவுக்கு அபாயகரமானவராகவும் இருப்பார். புனித நூல்களில் கூறப் பட்டுள்ள சட்டதிட்டங்களை பின்பற்றி இருபத்திநான்கு மணி நேரமும் அடக்கி வைத்ததற்கு பிறகு அவர் குறைந்தது ஒரு மணி நேரத்தில் அவருக்குள் அடக்கி வைத்திருந்த தீவினைகளின் உந்துதலினால் அவர் தான் ஒரு நரகத்தில் இருப்பதைப்போல் கண்டிப்பாக உணர்வார்.

அதைப் போல் இந்த விவசாயியும் துணிகளைப் பற்றி பேசுவதில்லை என்று தன்னை மிகவும் கஷ்டப்பட்டு கட்டுப் படுத்திக்கொண்டான். அவனது நிலையை கொஞ்சம் கற்பனை செய்து பாருங்கள். நீங்கள் கொஞ்சம் மதப்பற்றுள்ளவராக இருந்தாலே போதும், நீங்கள் அவனது மனநிலையை கற்பனை செய்து பார்க்க முடியும். நீங்கள் எப்போதாவது இது போன்று சத்தியம் செய்திருந்தால், அல்லது சபதம் எடுத்திருந்தால் அல்லது ஏதாவது மதக்காரணத்திற்காக உங்களை வருத்தி யிருந்தால் நீங்கள் அவனது பரிதாபத்திற்குரிய மனநிலையை நன்றாகப் புரிந்து கொள்ள முடியும்.

அவர்கள் அடுத்த வீட்டிற்கு சென்றனர். அந்த விவசாயிக்கு உடலெங்கும் வியர்த்துக் கொட்டியது. அவன் களைப்படைந்தான், அவனது நண்பனும் வருத்தமாக இருந்தான்.

விவசாயி துன்பத்தில் உறைந்து போயிருந்தான். மெதுவாகவும், கவனமாகவும் ஒவ்வொரு வார்த்தையையும் கூறி அவனது நண்பனை அறிமுகம் செய்தான். "எனது நண்பனை சந்தியுங்கள், இவன் எனது நீண்டநாள் நண்பன்; இவன் மிகவும் நல்லவன்" என்றான்.

ஒரு கணம் தயங்கினான். அவனுக்குள்ளிருந்து பெரும் உந்துதல் எழுந்தது. அதில் தான் அடித்துச் செல்லப்படுவோம் என்று அறிந்தான். "அவனது ஆடைகளைப் பற்றித்தானே? என்னை மன்னியுங்கள், அவைகளைப் பற்றி நான் எதுவும் சொல்வதற்கில்லை. ஏனெனில் அந்த ஆடைகளைப் பற்றி எதுவும் சொல்வதில்லை என்று நான் சபதம் செய்துள்ளேன்!" என்று பலமாக உளறிக் கொட்டினான்.

இந்த மனிதனுக்கு என்ன நேர்ந்ததோ அதுதான் இப்போது மனிதவர்க்கம் முழுமைக்கும் நேர்ந்துள்ளது. தவறு என்று கூறியதால்தான் காமம் இப்போது மனிதனின் மனம் முழுவதும் பரவியுள்ள, ஒரு நோயாகி விட்டது. அது நெறி தவறியதாகிவிட்டது. அது விஷமாக ஆகிவிட்டது.

ஆரம்ப காலத்திலிருந்தே காமம் ஒரு பாவச் செயல் என்று குழந்தைகளுக்கு கற்பிக்கப்பட்டுள்ளது. ஒரு சிறுமியும் வளர்கிறாள்; ஒரு சிறுவனும் வளர்கிறான். வாலிபப் பருவம் வருகிறது. அவர்களின் திருமணம் நடக்கிறது. அப்போது காமம் என்பது ஒரு பாவச் செயல் என்கிற தீர்மானத்துடனேயே காமத்தின் பயணம் ஆரம்பமாகிறது. இந்தியாவில் அந்தச் சிறுமிக்கு கணவன் தன் கடவுள் என்று வேறு சொல்லப் பட்டுள்ளது. தன்னை பாவச் செயலுக்கு அழைத்துச் செல்லும் ஒருவனை அவள் எப்படி கடவுள் என்று மதிக்க முடியும்? அந்த சிறுவனிடம், "இவள் தான் உன் மனைவி, உனது வாழ்க்கைத் துணை, உனது இணை" என்று கூறப்படுகிறது. ஆனால், புனித நூல்களோ பெண் என்பவர் நரகத்தின் வாசல், பாவத்தின் கிணறு என்று கூறுகின்றன. எனவே அவன் ஒரு உயிருள்ள பேயை

தனது வாழ்க்கைத் துணைவியாக ஏற்றுக் கொண்டதாக உணர்கிறான். அந்தச் சிறுவன் இப்போது, "இவளா, எனது வாழ்க்கைத் துணை? நரகத்தைப் போன்ற, பாவச் செயலை தூண்டுகின்ற இவளா, எனது வாழ்க்கைத் துணை?" என்று எண்ணுகிறான். இப்படி இருக்கும்போது அவர்களுக்குள் எப்படி ஒரு இணக்கம் இருக்கும்?

இப்படிப்பட்ட தலைமுறைத் தத்துவங்கள் இந்த உலகம் முழுமைக்கும் மணவாழ்க்கையை அழித்துவிட்டன. மண வாழ்க்கையானது முழுவதும் விஷம் நிறைந்ததாக இருக்கும் போது எப்படி அன்பு சாத்தியப்படும். ஒரு கணவனும், மனைவியும் அடிப்படையில் இயற்கையாக, சுதந்திரமாக அன்பு செலுத்திக் கொள்ள முடியவில்லையெனில் அதன்பின் யார் யாரை நேசிக்க முடியும்? எனினும் இந்த அமைதிக் குலைவை சரி செய்ய முடியும்: இப்படி கலங்கிப் போன அன்பை சுத்தம் செய்ய முடியும். எல்லாத் தடைகளையும் உடைக்கும் அளவுக்கு ஓர் உயர்ந்த நிலைக்கு இந்த அன்பை நாம் உயர்த்த முடியும். எல்லாச் சிக்கல்களையும் நீக்கி கணவனையும், மனைவியையும் தூய மற்றும் தெய்வீகமான இன்பத்தில் ஆழ்த்த முடியும். உயர் மதிப்புடைய அன்பு சாத்தியமானது. ஆனால், அது அரும்பிலேயே கிள்ளி எறியப்படுமேயானால், அது திக்கு முக்காடச் செய்யப்படுமேயானால், அது விஷமாக்கப் படுமேயானால், அதிலிருந்து என்ன வளர முடியும்? உன்னதமான அன்பு ரோஜாவாக எப்படி மலரும்?

இராமனுஜர் ஒருவர் ஒரு கிராமத்தில் தங்கியிருந்தார். ஒருவன் அவரிடம் வந்து தான் கடவுளை அறிந்து கொள்ள வேண்டும் என்று கூறினான்.

அதற்கு அவர் "நீ யாரையாவது நேசித்திருக்கிறாயா?" என்று கேட்டார்.

"கிடையாது, இவ்வுலக விஷயங்களில் நான் எந்தத் தவறும் செய்வதில்லை. நான் ஒருபோதும் அந்த அளவுக்கு

தாழ்வான காரியம் செய்வதில்லை. நான் கடவுளை அறிவதற்கு விரும்புகிறேன்'' என்று பதிலளித்தான்.

ஆனால் இராமானுஜர் மீண்டும் அவனிடம் "நேசத்தினால் உண்டாகும் அந்தக் கொடிய வேதனையைக் கூட நீ உணர்ந்ததில்லையா?'' என்று கேட்டார்.

"நான் உண்மையைத்தான் கூறுகிறேன்'' என்று அவன் அழுத்தமாக பதிலளித்தான்.

அவன் நியாயமாகப் பேசினான். மதங்களின் ஆளுகைக்குள் யார் மீதாவது பாசம் வைப்பது என்பது தகுதி குறைவானது. தான் யாரையாவது நேசித்திருந்தோம் என்று கூறினால் அதற்கு அந்தத் துறவி தன்னை பந்த பாசத்தை விட வேண்டும், எல்லாப் பற்றுகளையும் விட வேண்டும், அவருடைய அறிவுரைகளைக் கேட்பதற்கு முன்பு இந்த உலகப் பற்றுகளை விட்டுவிட வேண்டும் என்று நிச்சயமாக கூறுவார் என்று அவன் எண்ணினான். எனவே அவன் உண்மையிலேயே யாரையாவது நேசித்திருந்தாலும் கூட, தான் அதற்கு எதிர்மறையாகத்தான் பதில் சொல்ல வேண்டும் என நினைத்தான். கடுகளவு கூட நேசிக்காத ஒரு மனிதனை நீங்கள் எங்கு காண' முடியும்?

ஆனால், இராமானுஜர் மூன்றாவது முறையாக, "ஏதாவது சொல்லு, நன்றாக சிந்தித்துப் பார். கடுகளவுக் கூட நேசித்ததில்லையா - யாரையாவது? அல்லது ஒருவரைக் கூட நேசித்ததில்லையா?'' என்று கேட்டார்.

அதற்கு அவன், "தயவு செய்து என்னை மன்னியுங்கள், நீங்கள் ஏன் அதே கேள்வியை திரும்பத் திரும்ப கேட்கிறீர்கள்? நான் ஒரு நீண்ட தடியால் கூட அன்பைத் தொட்டது கிடையாது. நான் விரும்புவதெல்லாம் கடவுள் தன்மையை அனுபவிக்க வேண்டுமென்பதுதான்'' என்று கூறினான்.

அதற்கு அவர், "அப்படியானால் நீயும் என்னை மன்னிக்க வேண்டும். தயவு செய்து வேறு யாரையாவது போய்ப் பார். நீ யாரையாவது அல்லது ஒருத்தரையாவது நேசித்திருந் தால், அன்பு, நேசம் இவற்றை நீ கண நேரமாவது அனுபவித் திருந்தால் அதைப் பெரிதாக்க, அதை வளர்ச்சி யடையவைக்க ஒருவேளை நீ கடவுளைச் சேர்வதற்கு அதை உதவ முடியும். ஆனால், நீ ஒருபோதும் நேசித்ததில்லையெனில் - உனக்குள் ஒன்றும் இல்லை; மரமாக வளர்வதற்கான விதை உன்னிடம் இல்லை. எனவே போய் வேறு யாரையாவது விசாரித்துப் பார். எனது நண்பனே, அன்பு இல்லாத பட்சத்தில் கடவுளுக்கான வழியை நாம் காண முடியாது" என்று பதிலளித்தார்.

அதேபோன்று கணவனுக்கும் மனைவிக்கும் இடையே அன்பு இல்லாத போது...

தனது மனைவியை நேசிக்காத ஒரு கணவன், தனது குழந்தைகளையும் நேசிப்பான் என்று நீங்கள் நினைத்தால் நீங்கள் தவறாக நினைக்கிறீர்கள். அதேபோல் மனைவியும், அவள் தனது கணவனை எந்த அளவுக்கு நேசிக்கிறாளோ, அதே அளவுக்குத்தான் தனது மகனையும் நேசிப்பாள். ஏனெனில், குழந்தை கணவனின் பிரதிபிம்பம்தான். ஆனால், கணவனிடம் அன்பு செலுத்தவில்லையெனில், குழந்தையிடம் எப்படி அன்பு செலுத்த முடியும்? மகனுக்கு அன்பு கிடைக்கவில்லையெனில், அவனது வளர்ப்பிலும், பேணுதலிலும் அன்பு கலக்கப்பட வில்லையெனில், அவன் தனது தாய் தந்தையரை நேசிக்க வேண்டும் என்று நீங்கள் எங்ஙனம் எதிர்பார்க்க முடியும்? குடும்பம் என்பது வாழ்வின் ஒரு அங்கம்; இந்த உலகமே ஒரு மாபெரும் குடும்பம்தான். ஆனால், காமத்தைக் குறை கூறுவதன் மூலம் குடும்ப வாழ்வே விஷமாக்கப்பட்டுவிட்டது. ஆனால், அன்பை எங்குமே காண முடியவில்லையே என்று நாம் துக்கப்படுகிறோம்! இப்படிப்பட்ட சூழலில் அன்பை நீங்கள் எப்படி எதிர்பார்க்க முடியும்?

எல்லோரும் தாங்கள் அனைவரையும் நேசிப்பதாகக் கூறுகின்றனர் : தாய்மார்கள், மனைவிகள், மகன்கள், சகோதரர்கள், சகோதரிகள், நண்பர்கள் - எல்லோரும் ஒட்டு மொத்தமாக தாங்கள் பிறரை நேசிப்பதாகக் கூறுகின்றனர். ஆனால், வாழ்க்கையை முழுமையாக நீங்கள் கவனித்தால், வாழ்க்கையில் அன்பை, நேசத்தை நீங்கள் கண்கூடாகக் காண முடியாது. அப்படி அநேக மக்கள் அன்பினால் நிறைந்திருந்தால் இங்கு ஒரு அன்பு மழையே பொழிந்திருக்கும். அன்பென்னும் ஒரு பெரிய பூந்தோட்டம், முழுவதும் மலர்கள் நிறைந்ததாக, எங்கு பார்த்தாலும் மலர்களாக உருவாகியிருக்கும். ஒவ்வொரு வீட்டிலும் அன்பென்னும் விளக்கு ஒளி விட்டுக் கொண்டிருக் குமானால், இந்த உலகில் எவ்வளவு வெளிச்சம் நிறைந்திருக்கும்! ஆனால், அதற்கு நேர் எதிரான ஒரு சூழலைத்தான் நாம் காண்கிறோம். வருந்தத்தக்க இந்தத் திட்டங்களினால் அன்பின் ஒரு துளிக் கீற்றைக் கூட காண முடியவில்லை.

அன்பு எங்கும் நிறைந்துள்ளது என்று நாம் நம்பினால் அது வெறும் வெளிப் பசப்பில்தான். மேலும் இந்த மாயையில் நாம் ஆழ்ந்திருக்கும் வரை சத்தியத்தைத் தேடிச் செல்வதை நாம் ஆரம்பிக்க முடியாது. இங்கு யாரும் யாரையும் நேசிப்பதில்லை. மேலும் எந்தவித ஒதுக்கீடுகளும் இன்றி இயற்கையாக பாலுணர்வு ஏற்றுக் கொள்ளப்படாதவரை அன்பே இருக்க முடியாது. அது வரை யாரும், யாரையும் நேசிக்க முடியாது.

நான் கூற விரும்புவது என்னவெனில்: காமம் என்பது தெய்வீகமானது. ஆதார சக்தியாகிய காமத்தில் கடவுளின் பிரதிபிம்பம் உள்ளது. அது தெள்ளத் தெளிவானது. அந்த சக்திதான் புதிய உயிர்களை உருவாக்குகிறது. அதுதான் எல்லாவற்றையும் விட மிகப் பெரியதும், அதிகம் புதிர் நிறைந்ததும் ஆகும்.

காமத்தின் மீதுள்ள விரோதத்தை விட்டு விடுங்கள். உங்கள் வாழ்வில் அன்பு மழை பொழிய வேண்டுமெனில்,

காமத்துடன் நீங்கள் கொண்டுள்ள பூசலை விட்டுவிடுங்கள். பாலுணர்வை சந்தோஷத்தோடு ஏற்றுக்கொள்ளுங்கள். அதன் புனிதத் தன்மையை ஒப்புக் கொள்ளுங்கள். நன்றிப் பெருக்குடன் அதை ஏற்றுக்கொண்டு அதை மேன்மேலும் ஆழமாகத் தழுவுங்கள். காமமா இந்த அளவுக்கு புனிதத் தன்மையை வெளிப்படுத்துகிறது? என்று கூறுமளவுக்கு நீங்களே ஆச்சரியப்படுவீர்கள். நீங்கள் காமத்தை எந்த அளவுக்கு ஏற்றுக் கொள்கிறீர்களோ, அந்த அளவுக்கு அது அதன் புனிதத் தன்மையை வெளிப்படுத்தும். அதேபோல் நீங்கள் அதை ஒரு பாவச் செயல் என்றோ, மதிப்பற்றது என்றோ அணுகினால், அந்த அளவிற்கு நீங்கள் எதிர்கொள்ளும் காமமும் அசிங்கமானதாக, பாவச் செயலைப் போன்று இருக்கும்.

ஒருவன் தனது மனைவியை அணுகும்போது ஒரு புனிதமான உணர்வுடன் இருக்க வேண்டும். அதாவது ஏதோ ஒரு கோவிலுக்குப் போவதைப் போன்ற உணர்வுடன் இருக்க வேண்டும். அதேபோல் ஒரு மனைவியும் தன்னுடைய கணவனை அணுகும்போது ஏதோ ஒரு கடவுளை நெருங்குவதைப் போன்ற உணர்வும், மதிப்பும் கொள்ள வேண்டும். காமத்தை அனுபவிக்கும் நேரத்தில், நேசமுள்ள வர்கள் உடலுறவு கொள்ளும் அந்த நிலையில், உருவமில்லாமல் உருவாக்கித் தன்னை வெளிப்படுத்துகின்ற அந்தக் கடவுளின் ஆலயத்திற்கு வெகு அருகாமையில் உள்ளனர்.

உடலுறவின் போதுதான் மனிதன் சமாதியின், தியானத்தின் என்று கூறுகின்ற அந்த நிலையின், அந்த கணநேர ஒளியை அனுபவித்திருப்பான் என்பது என் ஊகம். உடலுறவில் ஈடுபட்டுள்ள அந்தக் கணநேரங்களில்தான் மனிதன் இந்த அளவுக்கு ஆழ்ந்த உணர்ச்சியுள்ள அன்பை, இதுபோன்ற ஒளி நிறைந்த பரவச நிலையை உணர முடியும். இந்த உண்மையைக் குறித்து சரியான மனதுடன் தியானித்தவர்கள், காமத்தின் கருத்துக்களைப் பற்றி, உடலுறவைப் பற்றி தியானித்தவர்கள், அந்த நிலையின் உச்சக்கட்டத்தின்போது மனமானது

எண்ணங்கள் ஏதுமின்றி ஆகிவிடுகிறது என்கிற முடிவுக்கு வந்தனா. அந்தக கணநேரததில் எண்ணங்கள் எல்லாம் மறைந்து விடுகின்றன. எனவே மனதின் இந்த ஒன்றுமில்லாத நிலைதான். இந்த வெறுமைதான. இந்த வெற்றிடம்தான். மனமானது உறைந்து போகின்ற இந்த நிலைதான். அப்படிப்பட்ட தெய்வீகமான சந்தோஷ மழைக்கு காரணம் ஆகும்.

இதுவரை ரகசியங்களை வெளிக்கொணர்ந்த மனிதன் இன்னும் அதற்கு மேலும் தோண்ட ஆரம்பித்தான். மனமானது எண்ணங்களிலிருந்து விடுதலை பெறுமானால். வேறு ஏதாவது வழிகளில் மனித உள்ளுணர்வில் ஏற்படும் எண்ண அலைகளை அமைதிப்படுத்திவிட்டால். மனிதன் தூய பரவசநிலையை அடைய முடியும் என்று ஆராய்ந்து அறிந்தான். இதிலிருந்துதான் "யோகா" என்னும் ஒழுங்கமைப்பு அபிவிருத்தி அடைந்தது: இதிலிருந்துதான் தியானமும். பிரார்த்தனைகளும் எழுந்தன. இந்தப் புதிய அணுகுமுறையின் மூலம் உடலுறவு இல்லாமலேயே மனிதனின் உள்ளுணர்வு அசைவற்றதாக. எண்ணங்களே இல்லாமல் ஆக முடியும் என்பது நிரூபண மானது. உடலுறவு கொள்ளும்போது நாம் பெறுகின்ற அந்த வியத்தகு அளவுள்ள சந்தோஷத்தை அந்த உடலுறவு இல்லாமலேயே பெற முடியும் என்பதை மனிதன் கண்டு பிடித்தான்.

இயற்கையின் செயல்முறையில் உடலுறவு என்பது ஒருசில கணநேரங்கள் மட்டுமே நடக்கின்ற செயல். ஏனெனில். உடலுறவுச் செய்கையில் நமது சக்தியின் ஓட்டமானது நிறைவு செய்யப்பட வேண்டியுள்ளது. ஒரு யோகி சதா சர்வ காலமும் அனுபவிக்கின்ற அந்த அழகான ஆறுதலை. தூய்மையான சந்தோஷத்தை. நிறைவான அன்பை ஒரு தம்பதிகள் ஒரு சில கணங்கள் மட்டுமே அடைகின்றனர். ஆனால். அந்த சந்தோஷத்தின் அடிப்படையில் எந்த ஒரு வித்தியாசமும் அவற்றுக்கிடையில் கிடையாது. விஷய ஆனந்தமும். பிரம்மானந்தமும் - அதாவது புலன் இன்பங்களை அனுபவிக்கின்ற ஒருவனும். தெய்வீக

மயமான ஆனந்தத்தை அனுபவிக்கின்ற ஒருவனும் சகோதரர்கள் என்று யார் கூறினார்களோ அவர்கள் உறுதியான ஒரு உண்மையைக் கூறியுள்ளனர். அந்த இருவரும் ஒரே கருப்பையில் இருந்து வந்தவர்கள். ஆனால், அவர்களுக்குள் உள்ள ஒரே வேற்றுமை வானத்திற்கும், பூமிக்கும் இடையே உள்ள தூரத்தின் அளவாகும்.

இந்த நிலையில் நான் உங்களுக்கு முதல் தத்துவத்தைக் கொடுக்க விரும்புகின்றேன். நீங்கள் அன்பின் ஆரம்ப உண்மைகளை அறிந்து கொள்ள விரும்பினால் அதற்கான முதல் தேவை காமத்தின் புனிதத்தன்மையை நீங்கள் ஏற்றுக்கொள்ளுதல்தான். காமத்தின் தெய்வீகத் தன்மையை, நீங்கள் கடவுள் இருப்பதை எப்படி ஏற்றுக் கொள்கிறீர்களோ, அதேபோன்று திறந்த உள்ளத்துடன் ஏற்றுக் கொள்ள வேண்டும். மேலும் எந்த அளவுக்கு காமத்தை நீங்கள் திறந்த உள்ளத்துடனும், திறந்த மனதுடனும், முழுமையாக ஏற்றுக் கொள்கிறீர்களோ அந்த அளவுக்கு அதிலிருந்து விடுபடுவீர்கள். ஆனால் நீங்கள் நான் கூறிய அந்த விவசாயி எப்படி ஆடைகளுக்கு அடிமையானானோ அதேபோல் காமத்தில் கட்டுண்டு கிடப்பீர்கள். நீங்கள் காமத்தை ஏற்றுக் கொள்ளும் அளவுதான் அதிலிருந்து நீங்கள் விடுபடும் அளவாகும். வாழ்க்கையை முழுமையாக ஏற்றுக் கொள்வது, வாழ்க்கையில் இயற்கையாய் எழுவதையெல்லாம் ஏற்றுக் கொள்வது, உங்களை தெய்வீகத்தின் உயர்ந்த நிலைகளுக்கு, நீங்கள் அறிந்திராத உயரங்களுக்கு, மதிப்பை உண்டுபண்ணுகிற உயரத்திற்கு உங்களை வழிநடத்திச் செல்லும்.

அவ்வாறு ஏற்றுக் கொள்வதைத்தான் நான் ஆத்திகம் என்கிறேன். கடவுள் கொடுத்துள்ளவற்றின் மீது நம்பிக்கை கொள்வதுதான் உங்களது விடுதலைக்கான வாயில் ஆகும்.

ஆத்திகத்தில், தெய்வீகத் திட்டத்தின் கீழ் வாழ்க்கையில் இயற்கையானவைகளையெல்லாம் மனிதன் ஏற்றுக்கொள்ளும் கட்டளைகளை நான் பெரிதும் மதிக்கிறேன். நான் புரிந்து

கொண்டவரையில் "இதை எதிர்த்து நில். அதை அடக்கு. எது இயற்கையாக உள்ளதோ அது பாவமானது. கெட்டது. காமம் நிறைந்தது. இதை விட்டுவிடு. அதை விட்டுவிடு" என்கின்ற இவைகள் எல்லாம்தான் நாத்திகம். யார் துறவறத்தைப் போதிக்கிறார்களோ அவர்கள்தான் நாத்திகர்கள்.

வாழ்க்கையை அதன் தூய, இயற்கையான உருவகத்தில் ஏற்றுக்கொண்டு. அதன் முழுமையில் செழுமையடையுங்கள். அந்த முழுமையே உங்களை படிப்படியாக உயர்த்திவிடும். அதேபோன்று காமத்தை. பாலுணர்வையும் நீங்கள் ஏற்றுக் கொள்ளும்போது நீங்கள் அடைவோம் என்று கற்பனைகூடப் பண்ணி பார்க்க முடியாத கொந்தளிப்பில்லாத நிலைக்கு உங்களை உயர்த்திவிடும். காமத்தை ஒரு கரித்துண்டாகக் கருதினால் அது தன்னை ஒரு வைரமாக காட்டக்கூடிய ஒருநாள் நிச்சயம் வந்தே தீரும். இதுதான் முதல் தத்துவம்.

அன்பைப் பற்றி நான் உங்களுக்கு சொல்ல விரும்புகின்ற இரண்டாவது அடிப்படைத் தத்துவம் இதுவரை நாகரீகம். பண்பாடு. மதம் இவற்றினால் நமக்குள் இறுகிப் போயிருக்கும் ஒன்றைப் பற்றியது. அதுதான் "தன் முனைப்பு" அதாவது "நான்" என்னும் தன்னுணர்வு.

காமசக்தியின் இயல்பானது அதை அன்பை நோக்கி வழிந்தோடும்படி தூண்டுகிறது. ஆனால். "நான்" எனும் தடையானது சுவர்வேலி ஒன்று போட்டுள்ளது. அதனால் அன்பானது வழிந்தோட முடிவதில்லை. நல்லவர்களானாலும். கெட்டவர்களானாலும். புனிதமானவர்களானாலும். புனிதமற்ற வர்களானாலும் அந்த "நான்" என்னும் ஆணவம் மிகவும் சக்தி வாய்ந்ததாக உள்ளது. கெட்டவர்கள் அநேகவழிகளில் "நான்" என்னும் உரிமையை வற்புறுத்தலாம். ஆனால். நல்லவர்களும் கூட "நான்" என்னும் தன்முனைப்பை பறைசாற்றுகின்றனர். அவர்கள் மோட்சத்திற்கு செல்ல விரும்புகின்றனர்: அவர்கள் விடுதலைப்பெற வேண்டும் என விரும்புகின்றனர்: அவர்கள்

இந்த உலகைத் துறந்துவிட்டனர். அவர்கள் ஆலயங்களைக் கட்டியுள்ளனர். அவர்கள் பாவச்செயல்கள் செய்வதில்லை அவர்கள் இதைச் செய்ய விரும்புகின்றனர். அவர்கள் அதைச் செய்ய விரும்புகின்றனர். ஆனால், அந்த "நான்" என்னும் அந்த வழிக்காட்டும் அறிகுறி எப்போதும் அவர்களுக்குள் இருக்கிறது.

ஒருவனின் ஆணவம் எந்த அளவுக்கு வலுவானதாக உள்ளதோ அந்த அளவுக்கு அவன் யாருடனும் இணைந் திருப்பதும் மிகவும் கடினம். அவனது ஆணவம் அவர்களுக்கு இடையே வந்து விடும்; "நான்" என்பது தன்னை எப்போதும் உறுதிப்படுத்திக் கொள்ளும். ஆணவம் என்பது ஒரு சுவர் "நீ நீதான், நான் நான்தான்" என்று அது பறைசாற்றுகிறது. அதனால்தான் மிகவும் நெருக்கமான அனுபவங்கள் கூட மக்களை ஒருவருக்கொருவர் உண்மையிலேயே நெருக்கமாகக் கொண்டு வருவதில்லை. உடல்கள் வேண்டுமானால் அருகில் இருக்கலாம். ஆனால், அந்த மக்கள் வெகுதூரம் விலகியே இருப்பர். நமக்குள் "நான்" என்னும் இந்தத் தன்முனைப்பு எதுவரை உள்ளதோ அதுவரை "மற்றவர்" என்கிற உணர்வும் தவிர்க்க முடியாததாகிவிடும்.

ஒருநாள் சார்டர் (Sartre) ஒரு அற்புதமான விஷயத்தைக் கூறினார்: "மற்றவன் எப்போதும் நரகத்தைப் போன்றவன்" என்பதுதான் அது. ஆனால், அதற்கு மேல் ஏன் அடுத்தவன் நரகமாக இருக்கிறான் என்றோ அல்லது ஏன் அடுத்தவன் அடுத்தவனாக இருக்கிறான் என்பதையோ விளக்கவில்லை. அடுத்தவன் அடுத்தவனாக இருக்கிறான். ஏனெனில் நான் நானாக இருப்பதால்தான். மேலும் நான் நானாக இருக்கும்போது என்னைச் சுற்றியிருக்கும் உலகமும் அடுத்ததாக மாறுபட்டதாக, விலகியதாக, தனித்தனியாக இருக்கும். அங்கு உறவொன்றும் இருப்பதில்லை. தனியானவன் என்கிற உணர்வு இருக்கும் வரை அன்பு என்பதை அறியமுடியாது. ஒற்றுமையின் அனுபவம்தான் அன்பு. நம்மைச் சுற்றியுள்ள சுவர்களை

யெல்லாம் இடித்து விடுதல்தான். இருவரின் சக்திகளும் ஒன்றாக உருகிவிடுவதுதான் அன்பின் அனுபவம் ஆகும். இரண்டு பேருக்கு இடையில் உள்ள சுவர்கள் பொடிப் பொடியாகும் போது, இரண்டு உயிர்கள் கலக்கும்போது, இரண்டு உயிர்கள் ஒன்று சேரும்போது ஏற்படுகின்ற பேரானந்தம்தான் அன்பு.

இதைப்போன்ற இணக்கம் இரண்டுபேருக்கு இடையே நிலவுவதைத்தான் நான் அன்பு என்று அழைக்கிறேன். அதைப் போன்ற உணர்வுடன் நீங்கள் என்னுடன் மூழ்க முடியுமெனில் - அதாவது எல்லாத் தடைகளும் உருகி ஓடி, அதனால் ஆன்மீக மட்டத்தில் ஒரு இடமாறிக் கலத்தல் நடக்கும்போது அதுதான் அன்பு எனப்படும். மேலும் அதேபோன்று ஒன்றுபடுதல் எனக்கும் மற்றவர்கள் எல்லோருக்கும் இடையில் ஏற்படும்போது, நான் எனது அடையாளங்களை இங்கு இருப்பவை எல்லா வற்றிலும் இழந்துவிடும்போது அந்த நிலை, அந்தச் சேர்க்கை கடவுளோடு, சர்வ வல்லமை படைத்தவரோடு, எங்கும் நிறைந் தவரோடு, இந்த் பிரபஞ்ச பிரக்ஞையோடு, எல்லாவற்றிற்கும் மேலான ஒன்றோடு அல்லது நீங்கள் அதை எப்படியெல்லாம் அழைக்க விரும்புகிறீர்களோ அதோடு கலப்பதாகும். எனவே அன்புதான் முதல்படி, கடவுள்தான் நேர்த்தியானதும், முடிவான துமான கடைசிப்படி என்று நான் கூறுகிறேன்.

எனவே "நான்" என்பதை அழிப்பது எப்படி?

நான் என்னைக் கரைத்துக் கொள்ளாதவரை அடுத்தவன் என்னோடு எப்படி ஒன்று சேர முடியும்? என்னுடைய "நான்" என்பதற்கான எதிர்ச்செயலாகத்தான் "அடுத்தவன்" என்பது உருவாயிற்று. நான் எந்த அளவிற்கு "நான்" என்று உரக்கக் கத்துகிறேனோ அந்த அளவுக்கு "அடுத்தவன்" என்பதும் மிகவும் அழுத்தம் வாய்ந்ததாக ஆகிறது. "அடுத்தவன்" என்பது "நான்" என்பதன் எதிரொலிதான்.

ஆனால், இந்த "நான்" என்பது என்ன? அதைப்பற்றி

நீங்கள் எப்போதாவது அமைதியாக சிந்தித்ததுண்டா? அது உங்களது கால் அல்லது கையில் இருக்கிறதா, உங்களது தலை அல்லது இதயத்தில் இருக்கிறதா? இல்லை அது வெறும் ஆணவம்தானா?

உங்களுடைய அந்த "நான்" என்னும் தன்முனைப்பு எங்கே, எப்படி உள்ளது? நான் என்கிற உணர்வு இருக்கிறது. எனினும் அதை எந்த ஒரு குறிப்பிட்ட இடத்திலும் காண முடிவதில்லை. கொஞ்ச நேரத்திற்கு அமைதியாக உட்கார்ந்து அந்த "நான்" என்பதைத் தேடுங்கள். நீங்கள் எவ்வளவு தீவிரமாகத் தேடினாலும் அந்த "நான்" என்பதை எங்கும் காணமுடியாதது குறித்து நீங்கள் ஆச்சரியமடைவீர்கள். உங்களுக்குள் ஆழ்ந்து தேடியபொழுதும் அங்கும் "நான்" என்பது இல்லை என்பதை அறிவீர்கள். எனவே "நான்" என்னும் தன்முனைப்பு இல்லை. இந்த ஆன்மாவின் உண்மையை அறிந்துகொள்ளும்போது "நான்" என்பது அங்கே இருக்காது.

மிலிண்ட் (Milind) என்னும் பேரரசன் தனது அரச சபைக்கு வந்து அருளாசி வழங்குமாறு நாகசேன் (Nagsen) என்னும் மேன்மை நிறைந்த துறவிக்கு சொல்லியனுப்பினான்.

தூதுவன் ஒருவன் நாகசேன்னிடம் சென்று, "நாகசேன் துறவியாரே, எங்களது பேரரசர் உங்களைப் பார்க்க விரும்புகிறார். நான் உங்களை அழைத்துச் செல்ல வந்திருக்கிறேன்" என்றான்.

அதற்கு நாகசேன், "நீ விரும்பினால் நான் வருகிறேன். ஆனால், தயவுசெய்து என்னை மன்னித்துவிடு. இங்கு நாகசேன் என்று ஒருவரும் இல்லை. அது வெறும் பெயர் மட்டுமே. அது ஒரு தற்காலிகமான முத்திரைதான்" என்று பதிலளித்தார்.

அரசவையார் பேரரசனிடம் நாகசேன் மிகவும் விநோதமான மனிதனாக உள்ளார். அவர் தான் வருவதாகக் கூறுகிறார். ஆனால் நாகசேன் என்று ஒரு நபர் அங்கு இல்லை என்று கூறுகிறார் என்றனர். பேரரசன் ஆச்சரியத்தில் ஆழ்ந்தான்.

நாகசேன் சரியான நேரத்தில் அரசனுடைய தேரில் வந்து சேர்ந்தார். பேரரசன் அவரை அரண்மனை வாயிலில் வரவேற்று, "நாகசேன் துறவி அவர்களே, நான் உங்களை வரவேற்கிறேன்" என்று கூறினார்.

இதைக் கேட்டு அந்தத் துறவி சிரிக்க ஆரம்பித்தார். "நாகசேனுக்கு நீங்கள் கொடுக்கும் மரியாதையை ஏற்றுக் கொள்கிறேன். ஆனால், நாகசேன் என்ற பெயருடைய யாரும் இங்கு இல்லை என்பதை ஞாபகத்தில் கொள்ளுங்கள்" என்று கூறினார்.

உடனே பேரரசன், "நீங்கள் புதிர்போட்டு பேசுகிறீர்கள். நீங்கள் நீங்களாக இல்லையெனில், எனது அழைப்பை ஏற்றுக் கொண்டிருப்பது யார்? இந்த வரவேற்புக்கு பதில் சொல்லிக் கொண்டிருப்பவர் யார்?" என்று கேட்டார்.

அதற்கு நாகசேன் பின்னால் திரும்பிப் பார்த்து, "இதுதானே நான் வந்த தேர்?" என்று கேட்டார்.

"ஆம், அதுவேதான்."

"தயவு செய்து அந்தக் குதிரைகளை அவிழ்த்து விடுங்கள்." உடனே அதைச் செய்தனர்.

துறவி அந்தக் குதிரைகளைக் காட்டி, "இவைகள்தான் நான் வந்த தேரா?" என்று கேட்டார்.

அதற்கு அந்தப் பேரரசன், "இந்தக் குதிரைகள் எப்படி தேராக ஆக முடியும்?" என்று கேட்டார்.

துறவி ஜாடை காட்டியதன்படி குதிரைகள் அப்பால் கொண்டு செல்லப்பட்டன. அதன்பின் அந்தக் குதிரைகளைப் பூட்டக்கூடிய நுகத்தடி கழற்றப்பட்டது.

"இந்தத் தடிகள்தான் தேரா?"

"இல்லை, இந்தத் தடிகள் தேர் இல்லை."

இதேபோல் அந்தத் துறவி அந்தத் தேரின் ஒவ்வொரு பகுதியையும் கழற்றச் சொன்னார். ஒவ்வொரு பகுதியையும் அந்தப் தேரரசன், "இது தேர் இல்லை" என்று கூறி வந்தான். இறுதியில் அங்கு ஒன்றுமில்லை. அப்போது அந்தத் துறவி, "உங்களுடைய தேர் இப்போது எங்கே போயிற்று? அந்தத் தேரில் இருந்து பிரித்து எடுத்த ஒவ்வொரு பகுதியையும் நீங்கள் "இது தேர் இல்லை" என்று கூறி விட்டீர்கள். அப்படியானால், உங்களது தேர் இப்போது எங்கே உள்ளதென்று கூறுங்கள்?" என்றுக் கேட்டார்.

துறவி வெளிப்படுத்தியது பேரரசனைத் திடுக்கிடச் செய்தது. துறவி தொடர்ந்து, "நான் கூறியதைப் புரிந்து கொண்டீர்களா? தேர் என்பது ஒன்று திரட்டப்பட்டது. சில பொருள்களைச் சேகரித்து தேராக்கி உள்ளனர். தேர் என்று தனியாக ஒன்றும் கிடையாது. அதேபோல் தயவுசெய்து உங்களுக்குள் நோக்குங்கள். உங்களது ஆணவம் எங்கே உள்ளது? உங்களது "நான்" எங்கே உள்ளது?" நீங்கள் அந்த "நான்" என்பதை எங்கும் காணமுடியாது. நான் என்பது பலவிதமான சக்திகளின் வெளிப்பாடு, அவ்வளவுதான். உங்களது ஒவ்வொரு கூறுகளையும் ஆராய்ந்து பாருங்கள். அதன் பின் அவைகளையெல்லாம் ஒன்றன் பின் ஒன்றாக அகற்றிப்பாருங்கள். முடிவாக ஒன்றும் இருக்காது. அன்பு என்பது இந்த ஒன்றுமில்லாத தன்மையில்தான் பிறக்கிறது. இந்த ஒன்றுமில்லா தன்மைதான் கடவுள்.

ஒரு கிராமத்தில் ஒருவன், "புதிய மீன் இங்கு விற்கப்படும்" என்ற விளம்பரத்துடன் ஒரு மீன் கடையைத் திறந்தான்.

முதல்நாளே ஒருவன் அவன் கடைக்கு வந்து புதிய மீன் இங்கு விற்கப்படும் என்பதை படித்துப் பார்த்தான். உடனே அவன் சிரித்து விட்டான். "புதிய மீனா? ஊசிப் போன மீனை யாராவது எங்காவது விற்பார்களா? "புதிய" என்று

எழுதியுள்ளதில் என்ன அர்த்தம் உள்ளது?'' என்று கேட்டான்.

அவன். கூறுவது சரியானதுதான் என்று கடைக்காரன் நினைத்தான். அதோடல்லாமல் "புதிய" என்கிற வார்த்தை "ஊசிப்போன" என்கிற கருத்தை வாடிக்கையாளர்களிடம் ஏற்படுத்தும். உடனே அவன் அந்தப் பெயர்ப் பலகையில் இருந்து "புதிய" என்ற வார்த்தையை அழித்துவிட்டான். இப்போது அந்தப் பெயர் பலகையில் "மீன் இங்கு விற்கப்படும்" என்று இருந்தது.

அடுத்தநாள் அந்தக் கடைக்கு வந்த ஒரு கிழவி. "மீன் இங்கு விற்கப்படும்'' என்று உரக்கப் படித்தாள். உடனே அவள், "நீ இங்கு அல்லாமல் அடுத்து வேறு எங்காவது மீன் விற்கிறாயா?'' என்று கேட்டாள்.

மூன்றாவது நாள் வேறொரு வாடிக்கையாளர் கடைக்கு வந்தார். "மீன் விற்கப்படும்'' என்பதைப் பார்த்து, "விற்கப்படும் என்பது ஏன்? யாராவது மீனை சும்மா கொடுப்பார்களா?'' என்று கேட்டார். உடனே "விற்கப்படும்'' என்ற வார்த்தை அகற்றப் பட்டது. இப்போது "மீன்'' என்கிற ஒரே ஒரு வார்த்தை மட்டுமே இருந்தது.

ஒரு வயதானவன் கடைக்கு வந்தான். கடைக்காரனிடம் "மீனா?'' ஒரு குருடன் கூட இங்கு மீன் விற்கப்படுகிறது என்பதை தூரத்தில் வரும்போதே அறிந்து கொள்வானே! என்று கேட்டான்.

அப்போது அந்தப் பக்கமாகப் போனவன் ஒருவன் "ஏன் இந்த வெறும் பலகை?'' என்று கேட்டான். அதனால் அந்தப் பலகையும் நீக்கப்பட்டது. எனவே ஒவ்வொன்றாக அகற்றிய பின் ஒன்றும் இருக்காது. ஒன்றன்பின் ஒன்றாக ஒவ்வொரு வார்த்தையாக அகற்றப்பட்டது. இப்போது அங்கு மீதமிருப்பது ஒன்றும் இல்லை. வெறும் வெறுமைதான்.

அன்பு என்பதும் இப்படிப்பட்ட வெறுமையில்தான் பிறக்க முடியும். ஒன்றுமில்லாத ஒன்றுதான். ஒன்றுமில்லாத

மற்றொன்றிடம் கூடிக் கலக்க முடியும். ஒரு பூஜ்யம்தான் மற்றொரு பூஜ்யத்துடன் முழுமையாக இணைய முடியும். இரண்டு தனிமனிதர்கள் அல்ல. இரண்டு வெற்றிடங்கள்தான் சந்திக்க முடியும். ஏனெனில் வெற்றிடத்தில் தடைகள் ஏதும் இருப்பதில்லை. மற்றவையெல்லாம் சுவர்களைக் கொண் டுள்ளன. ஆனால், வெற்றிடத்தில் ஒன்றும் கிடையாது.

எனவே நாம் ஞாபகத்தில் கொள்ள வேண்டிய இரண் டாவது விஷயம்: அன்பு என்பது தனிமனிதத் தன்மைகளான "நான்" என்பதும் "அவன், அடுத்தவன்" என்பதும் இல்லாமல் இருக்கும்போதுதான் பிறக்கும். அப்போது எஞ்சியிருப்ப தெல்லாம், நம்மைச் சுற்றியிருக்கும் எல்லாம்தான், எல்லை யில்லாத அந்த தன்மையே தவிர "நான்" என்பதல்ல. அந்த நிலையை அடையும்போது எல்லாத் தடைகளும் பொடிப் பொடியாகி ஏற்கனவே நம்முள் தயாராக இருக்கும் கங்கையின் திடீர்ப் பாய்ச்சல் ஏற்பட்டுவிடும்.

நாம் ஒரு கிணறு வெட்டுகிறோம். தண்ணீர் ஏற்கனவே பூமிக்குள் உள்ளது. அதை நீங்கள் வேறு எங்கிருந்தும் கொண்டு வர வேண்டியதில்லை. நாம் வெறுமனே மணலையும், கற்களையும் தோண்டி அவற்றை அப்புறப்படுத்துகிறோம். நாம் செய்யும் இந்தச் செயல் என்ன? பூமிக்குள் மறைந்திருக்கும் தண்ணீர் வெளிவருவதற்கான ஒரு இடத்தை, அந்தத் தண்ணீர் தன்னைப் பிறருக்கு காட்டிக் கொள்வதற்கான ஒரு இடத்தை, ஒரு வெற்றிடத்தைதான் நாம் உருவாக்குகிறோம். உள்ளே இருக்கும் தண்ணீர் வெளிப்படுவதற்கு ஒரு இடம் தேவைப்படுகிறது. அது இதுவரை பெறமுடியாத ஒரு வெற்றிடத்திற்காக ஏங்குகிறது. அப்போதுதான் அது வெளியே வர முடியும். அப்போதுதான் அது பீறிட்டுக் கிளம்ப முடியும். ஒரு கிணற்றில் முழுவதும் கற்களும், மணலும் நிறைந்திருந்தால், அந்த மணலையும், கற்களையும் அப்புறப்படுத்தும் அந்தக் கணமே தண்ணீரானது மேலெழுந்து வரும். அதே போன்றுதான் மனிதனும் தனக்குள்

அன்பு நிறைந்தவனாக இருக்கிறான். இப்போது அந்த அன்பு மேலெழுந்து வருவதற்கு ஒரு இடம் தேவை. உங்களது உள்ளமும் ஆன்மாவும் எதுவரை "நான்" என்று சொல்லிக் கொண்டிருக்கிறதோ, அதுவரை நீங்களும் மணலும் கற்களும் நிறைந்த ஒரு கிணற்றைப் போன்றவர்கள்தான். அன்பு என்னும் ஊற்று உங்களில் இருந்து மேலே கொப்பளித்துக் கிளம்பாது.

ஒரு காலத்தில் தனது கிளைகளை வானளாவப் பரப்பிக் கொண்டிருந்த ஒரு பழமையான, கம்பீரம் நிறைந்த மரம் ஒன்று இருந்தது. அது பூக்கும் பருவத்தின்போது, பல வித வண்ணங்களில், பலவித உருவங்களில், பலவித பருமன்களில் பூக்கள் அந்த மரத்தைச் சுற்றி நடனமாடின. அந்த மரத்தில் பூக்கள் பூத்து கனிகள் வந்தபோது வெகு தொலைவிலிருந்து பறவைகள் அதனிடம் வந்து அதிலமர்ந்து பாட்டிசைத்தன. அதனது கிளைகள், நீட்டிய கரங்களைப்போல் அதன் நிழலில் யார் வந்து அமர்ந்தாலும் அவர்களை ஆசீர்வதித்தது. ஒரு சிறுவன் அந்த மரத்தினடியில் வந்து விளையாடுவது வழக்கம். அந்தப் பெரிய மரத்திற்கு அந்தச் சிறுவன் மீது ஒருவித பாசம் ஏற்பட்டது.

பெரியதற்கும், சிறியதற்கும் இடையே அன்பு ஏற்பட முடியும். எப்போதெனில் அந்தப் பெரியதுதான் பெரியது என்பதை உணராதவரை. அந்த மரத்திற்கு தான் பெரிதாக இருப்பது தெரியாது. மனிதனுக்கு மட்டுமே அந்த அறிவு உள்ளது. பெரியவர் நான் என்கிற அந்த ஆணவத்தின் மீதுதான் பிரதான அக்கறை செலுத்துவர். ஆனால், அதன்பிறகு பெரியவர், சிறியவர் என்று ஒருவரும் கிடையாது. யாரெல்லாம் அருகில் வருகிறார்களோ, அவர்களையெல்லாம் அன்பானது ஆரத் தழுவிக்கொள்ளும்.

அதே போன்றுதான் இந்த மரமும் அதன் அருகில் வந்து விளையாடும் அந்தச் சிறுவனிடம் ஒருவித நேசத்தை வளர்த்துக் கொண்டது. அதனது கிளைகள் எட்டாத உயரத்தில் இருந்தன.

ஆனால் அந்தச் சிறுவன் அதன் பூக்களைப் பறிக்க வேண்டும். பழங்களைப் பறிக்க வேண்டும் என்பதற்காக அது தனது கிளைகளை வளைத்து அவனுக்கு எட்டுமளவிற்கு தலை சாய்த்தது. அன்பு எப்போதும் தலைவணங்கத் தயாராக உள்ளது. ஆணவம் ஒருபோதும் தலைசாய்ப்பதில்லை. நீங்கள் ஆணவத்தை நெருங்கிச் சென்றால் அது தனது கிளைகளை இன்னும் கொஞ்சம் மேலே உயர்த்திக் கொள்ளும். நீங்கள் அதைப்பிடிக்க முடியாத அளவிற்கு அது விறைப்பாகிவிடும்.

அந்த விளையாட்டுக் குழந்தை வந்தது. மரமும் தனது கிளைகளைத் தாழ்த்தியது. அந்தக் குழந்தையானது சில பூக்களைப் பறித்தபோது அந்த மரம் மிகவும் சந்தோஷ மடைந்தது. அதன் முழு உருவமும் அதன்பின் சந்தோஷத்தால் நிரம்பியது. அன்பானது தான் ஏதாவது ஒன்றைக் கொடுக்கும் போதெல்லாம் சந்தோஷமடைகிறது. ஆனால் ஆணவமானது ஏதாவது ஒன்றைக் கைப்பற்றும்போதுதான் சந்தோஷமடையும்.

அந்தச் சிறுவன் வளர்ந்தான். சில சமயங்களில் அவன் அதன் பழங்களைத் தின்றான். இன்னும் சில சமயம் அந்த மரத்தின் பூக்களினால் மலர்க்கிரீடம் செய்து அதை அணிந்து ஒரு காட்டு ராஜனைப் போல் நடித்தான். அன்பென்னும் மலர்கள் இருக்குமேயானால் ஒருவன் அரசனைப் போல் ஆகிவிடுவான்.. ஆனால் ஆணவம் என்னும் முட்கள் இருக்கு மேயானால் அவன் துக்கமும், ஏழ்மையும் நிறைந்தவனாகி விடுவான். அந்தச் சிறுவன் மலர்க்கிரீடம் அணிந்து ஆட்டம் ஆடுவதைப் பார்த்து அந்த மரம் சந்தோஷத்தால் நிரம்பியது. அன்பில் அது தலையசைத்தது; தென்றலில் அது பாட்டிசைத்தது. சிறுவன் இன்னும் கொஞ்சம் வளர்ந்தான். அந்த மரத்தின் மீது ஏறி அதன் கிளைகளில் ஊஞ்சலாட ஆரம்பித்தான். யாருக்காவது சௌகரியங்களைக் கொடுக்கும்போதுதான் அன்பு ஆனந்தமடையும். ஆனால் ஆணவமோ அசௌகரியத்தைக் கொடுக்கும்போதுதான் ஆனந்தமடையும்.

காலம் செல்லச் செல்ல அந்தச் சிறுவனுக்கு மற்ற கடமைகளின் சுமை வந்தது. அவனுக்கு இலட்சியம் வந்தது. பரீட்சைகளில் அவன் தேர்ச்சிப் பெற வேண்டியதாயிற்று. ஆகையால், அவன் அடிக்கடி அந்த மரத்திடம் வருவதில்லை. ஆனால் அந்த மரமோ அவன் வரவேண்டுமென்று பேராவலுடன் காத்திருந்தது. அது, "வா, வா நான் உனக்காகக் காத்திருக்கிறேன்" என்று ஆன்மாவிலிருந்து அழைத்தது. அன்பு இரவும், பகலும் காத்திருக்கும். அந்த மரமும் காத்திருந்தது. அந்தச் சிறுவன் வராதபோது அந்த மரம் வருத்தமுற்றது. பிறரோடு பங்கிட்டுக் கொள்ள முடியாதபோது அன்பு வருத்தமடையும். பிறருக்குக் கொடுக்க முடியாதபோது அன்பு வருந்தும். பிறரோடு பங்கிட்டுக் கொள்ளும்போது அன்பு நன்றிப் பெருக்கடையும். முழுமையாக தன்னை ஒப்படைக்கும் போது அன்பானது மிகவும் சந்தோஷமடையும்.

அவன் வளர்ந்துவிட்டதால், அந்தச் சிறுவன் மரத்திடம் வருவது கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்தது. பெரியவனாகும் ஒரு மனிதன். அவனது லட்சியங்கள் வளரும்போது அவனுக்கு அன்பு செலுத்துவதற்கு நேரம் குறைவாகவே காண்பான். அந்தச் சிறுவன் இப்போது உலக விஷயங்களில் ஆழ்ந்து போனான்.

ஒருநாள் அவன் அந்த வழியாகப் போகும்போது அந்த மரமானது, "நான் உனக்காக காத்துக்கொண்டே இருக்கிறேன். நீதான் வருவதேயில்லை. நான் உன்னை தினமும் எதிர் பார்ப்பேன்" என்று அவ்னைப் பார்த்து கூறியது.

அதற்கு அந்தச் சிறுவன், "நீ என்ன வைத்திருக்கிறாய்? நான் ஏன் உன்னிடம் வர வேண்டும்? உன்னிடம் ஏதாவது பணம் உள்ளதா? நான் பணத்தைத்தான் தேடிக் கொண்டிருக்கிறேன்" என்றான். ஆணவத்திற்கு எப்போதும் உள்நோக்கம் உண்டு. ஏதாவது காரியம் ஆக வேண்டும் என்றால்தான் ஆணவம் தேடிவரும். ஆனால், அன்பு எந்தவிதமான உள்நோக்கமும் அற்றது. அன்பிற்கு அது அன்பு செலுத்துவதுதான் பரிசு.

அதிர்ச்சியுற்ற அந்த மரம், "நான் ஏதாவது கொடுத்தால் மட்டும்தான் நீ வருவாயா?" என்றது. கொடுக்காமல் வைத்துக் கொண்டிருப்பது அன்பல்ல. ஆணவம் அதிக அளவில் திரட்டும். ஆனால், அன்பு எந்தவிதமான நிபந்தனையின்றி கொடுக்கும். "எங்களுக்கு அப்படிப்பட்ட நோய் இல்லை. ஆகவேதான் நாங்கள் சந்தோஷமாக இருக்கிறோம்" என்று அந்த மரம் கூறியது. "எங்களிடம் மலர்கள் மலர்கின்றன. எங்களிடம் பழங்கள் பழுக்கின்றன. குளிர் தரும் நிழலைக் கொடுக்கின்றோம். நாங்கள் தென்றலில் நடனமாடுகிறோம். பாட்டிசைக்கிறோம். எங்களிடம் பணம் இல்லையென்றாலும் வெள்ளைமனம் கொண்ட பறவைகள் எங்களது கிளைகளில் கத்தித் திரிகின்றன. கிறீச்சிடுகின்றன. பணத்தோடு எங்களை நாங்கள் சம்பந்தப்படுத்திக் கொண்டால் உங்களைப் போன்று வலுவற்ற மக்கள் செய்வதைப் போல் கோயில்களுக்குச் செல்லவேண்டிவரும். அமைதி பெறுவது எப்படி என்பதையும் கற்றுக் கொள்ள வேண்டியதிருக்கும். அன்பை பெறுவது எப்படி என்று கற்றுக்கொள்ள வேண்டியது வரும். வேண்டாம், எங்களுக்குப் பணம் என்பது தேவையே கிடையாது" என்று அந்த மரம் கூறியது.

அதற்கு அந்தச் சிறுவன், "அப்படியானால் நான் ஏன் உன்னிடம் வர வேண்டும்? பணம் எங்கிருக்கிறதோ அங்கு நான் செல்வேன். எனக்குப் பணம்தான் தேவை" என்று கூறினான். ஆணவம் எப்போதும் பணத்தைத்தான் கேட்கும். ஏனென்றால், அதற்குப் பலம் தேவை.

அந்த மரம் கொஞ்ச நேரம் யோசித்த பின், "எனதன்பே, நீ வேறு எங்கேயும் செல்லாதே. என்னுடைய பழங்களைப் பறித்து அவைகளை விற்றுவிடு. உனக்கு அந்த வழியில் பணம் கிடைக்கும்" என்று கூறியது.

அந்தச் சிறுவன் உடனே மகிழ்ச்சியுற்றான். அவன் மரத்தில் ஏறி மரத்திலுள்ள எல்லாப் பழங்களைப் பறித்தான்;

பழுக்காத பழங்களைக்கூட கீழே உலுக்கி விட்டான். தனது கிளைகளும், கொம்புகளும் உடைக்கப்பட்ட போதிலும் கூட அந்த மரம் சந்தோஷப்பட்டது. தான் முறிக்கப்படுவது கூட அன்புக்கு சந்தோஷத்தைத்தான் கொடுக்கும். ஆனால், ஏதாவது பறித்துக் கொண்ட பின்னரும் கூட ஆணவம் சந்தோஷ மடையாது. ஆணவம் எப்போதும் அதிக ஆசை கொள்ளும். அந்தச் சிறுவன் தனக்கு நன்றி தெரிவிக்காததைக் கூட அந்த மரம் கவனிக்கவில்லை. அந்தச் சிறுவன் அந்த மரம் கூறியதை அன்புடன் ஏற்றுக் கொண்டதையே, மரம் தனக்கு அவன் நன்றி கூறுவதாக எடுத்துக்கொண்டது.

அந்தச் சிறுவன் நீண்டகாலமாக வரவில்லை. இப்போது அவனிடம் பணம் இருந்தது. அந்தப் பணத்தைக் கொண்டு மேலும் அதிக பணம் பண்ணுவதிலேயே அவன் சுறுசுறுப்பாய் இருந்தான். அவன் அந்த மரத்தைப் பற்றி மறந்துவிட்டான். வருடங்கள் கடந்தன. மரம் மிகவும் வருத்தம் அடைந்தது. ஒரு தாயின் மார்பகங்களில் பால் நிரம்பியிருந்தது. ஆனால் அவளது மகன் காணாமல் போய்விட்டால் எவ்வளவு வருத்த மடைவாளோ அதேபோன்று அந்தச் சிறுவனின் வரவுக்காக அந்த மரம் ஏங்கிற்று. அந்த தாயின் உயிர் முழுவதும் மகனுக்காக ஏங்கும். அவளது மகன் வந்து அவளது பாரத்தைக் குறைக்க மாட்டானா என்று தன்னுடைய மகனை ஒரு பைத்தியத்தைப் போல் தேடுவாள். அதைப் போன்றுதான் அந்த மரமும் தனக்குள் அழுதது. அதனுடைய உயிர் முழுவதும் துன்பத்தில் உழன்றது.

பல வருடங்களுக்குப் பிறகு, இப்போது ஒரு முழு வளர்ச்சியடைந்தவனாக அந்த மரத்திடம் அந்தச் சிறுவன் வந்தான்.

“வா, எனது சிறுவனே வந்து என்னை ஆரத்தழுவிக் கொள்” என்று அந்த மரம் கூறிற்று.

அதற்கு அந்த மனிதன், “நீ உணர்ச்சி மேலிடுவதை

நிறுத்து. நான் உன்னைக் கட்டி அணைப்பதெல்லாம் எனது குழந்தைப் பருவ விஷயங்கள். நான் இப்போது குழந்தையல்ல" என்று கூறினான். ஆணவத்திற்கு அன்பு என்பது ஒரு பைத்தியத்தைப் போல, ஒரு குழந்தைத்தனமான கற்பனை யாகத்தான் தெரியும்.

ஆனால் அந்த மரம் அவனை வரவேற்றழைத்தது. "வா! எனது கிளைகளில் ஊஞ்சலாடு, வந்து ஆட்டம் போடு. வந்து என்னோடு விளையாடு" என்று அழைத்தது.

அதற்கு அந்த மனிதன், "இதுபோன்ற உபயோகமற்ற பேச்சையெல்லாம் நிறுத்து! நான் ஒரு வீடு கட்ட விரும்புகிறேன். உன்னால் ஒரு வீட்டைக் கொடுக்க முடியுமா?" என்று கேட்டான்.

அந்த மரம் வியப்படைந்தது. "ஒரு வீடு வேண்டுமா? நான் வீடில்லாமல்தானே இருக்கிறேன்" என்றது. மனிதன் மட்டுமே வீடுகளில் வசிக்கிறான். மனிதனைத் தவிர வேறு எதுவும் வீட்டில் வசிப்பதில்லை. ஆனால் அந்த நான்கு சுவர்களுக்குள் தன்னை அடைத்துக் கொண்டபின் அவனது நிலையைப் பார்த்தீர்களா? வீடு பெரிதாக பெரிதாக மனிதன் சின்னவனாக ஆகிறான். "ஆனால் நாங்கள் எல்லாம் வீடுகளில் தங்குவதில்லை. எனினும் நீ என்னுடைய கிளைகளை வெட்டி எடுத்துச் செல்லாம். அதைக் கொண்டு உன்னால் ஒரு வீடு கட்ட முடியும்" என்று அந்த மரம் கூறியது. உடனே நேரத்தை வீணாக்காமல் அவன் ஒரு கோடாரியை எடுத்து வந்து அந்த மரத்தின் கிளைகளையெல்லாம் வெட்டினான். இப்போது அந்த மரம் வெறுமனே அடிமரத்துடன் நின்றது. ஆனால் இதுபோன்ற விஷயங்களுக்காக அன்பு ஒருபோதும் கவலைப்படுவதில்லை. அது தான் நேசிக்கும் மனிதர்களுக்காக தனது உறுப்புக்கள் அனைத்தும் வெட்டப்பட்டாலும் கூட அது கவலை கொள்ளாது. அன்பு என்பது கொடுத்துக் கொண்டேயிருப்பது. அன்பு கொடுப்பதற்கு எப்போதும் தயார் நிலையில் இருக்கும்.

அந்த மனிதன் மரத்திற்கு நன்றி சொல்ல வேண்டுமே என்று கூட கவலைப்படவில்லை. அவன் தனது வீட்டைக் கட்டினான். நாட்கள் வருடங்களாகிப் பறந்தன.

அந்த அடி மரம் காத்துக் கொண்டேயிருந்தது. அவனை அழைக்கவேண்டும் என்று விரும்பியது. ஆனால், அதற்கு பலத்தைக் கெடுப்பதற்கு இப்போது அதனிடம் இலைகளும். கிளைகளும் இல்லை. காற்று அந்த வழியாகச் சென்றது. ஆனால் அந்தக் காற்றிடம் செய்தி சொல்லியனுப்பக் கூட அதனால் முடியவில்லை. என்றாலும் இன்னும் அதன் ஆன்மாவானது ஒரே ஒரு பிரார்த்தனையைத்தான் மீண்டும் மீண்டும் கூறிக் கொண்டிருந்தது. "வா, வா, எனது அன்பானவனே வா" என்பதுதான்ன அந்தப் பிரார்த்தனை. ஆனால் ஒன்றும் நடக்கவில்லை.

காலம் கடந்தது. அந்த மனிதன் இப்போது வயதான வனாகி விட்டான். ஒருதடவை அவன் அந்த வழியாகச் சென்றபோது அந்த மரத்தின் அருகில் வந்து நின்றான்.

அப்போது அந்த மரம், "நெடு நாட்களுக்குப் பிறகு நீ வந்துள்ளாய். நான் உனக்கு வேறு ஏதாவது செய்யவேண்டுமா?" என்று கேட்டது.

அதற்கு அந்தக் கிழவன், "நீ எனக்கு வேறு என்ன செய்ய முடியும்? நான் தூர நாடுகளுக்குச் சென்று அதிகப் பணம் சம்பாதிக்க விரும்புகிறேன். நான் பிரயாணம் செய்ய ஒரு படகு தேவை" என்று கூறினான்.

உடனே அந்த மரம் பெருமகிழ்ச்சியுடன், "அதனால் ஒன்றும் பிரச்சனையில்லை. எனது அன்பே, எனது அடிமரத்தை வெட்டிக்கொள். அதில் ஒரு படகு செய்துகொள். நீ தொலைநாடுகளுக்குச் சென்று பணம் சம்பாதிக்க நான் உதவ முடிந்ததே என்று மிகவும் சந்தோஷமடைவேன். ஆனால் நீ திரும்பி வரும்வரை உனக்காக நான் காத்துக் கொண்டே

யிருப்பேன் என்பதை தயவுசெய்து நீ ஞாபகத்தில் வைத்துக் கொள்" என்று கூறியது. அவன் ஒரு ரம்பத்தைக் கொண்டு வந்தான். அடிமரத்தை அறுத்தான். ஒரு படகைச் செய்து பயணமானான்.

இப்போது அந்த மரம் ஒரு பயனற்ற கடைசித் துண்டுடன் இருக்கிறது. அதன் அன்புக்குரியவனின் வரவுக்காக அது காத்துக் கெண்டிருக்கிறது. அது காத்திருக்கிறது, காத்திருக்கிறது, காத்துக்கொண்டேயிருக்கிறது. அந்த மனிதன் இனிமேல் திரும்பி வரப்போவதில்லை. எங்கேயாவது ஏதாவது ஆதாயம் கிடைத்தால்தான் ஆணவம் அங்கு செல்லும். ஆனால் இப்போது அந்த மரத்திடம் ஒன்றும் இல்லை. கொடுப்பதற்கு முழுமையாக எதுவுமே இல்லை. எங்காவது ஏதாவது ஆதாயம் இல்லையென்றால் ஆணவம் அங்கு செல்லாது. ஆணவம் என்பது முக்கால முழுமைக்கும் பிச்சைக்காரன்தான். எப்போதும் அது ஏதாவது கேட்டுக்கொண்டேயிருக்கும். ஆனால் அன்பு என்பது வாரி வழங்குவது. அன்பு ஒரு அரசன், ஒரு பேரரசன்! அன்பைத் தவிர மிகப் பெரிய அரசன் உண்டா?

நான் ஒருநாள் இரவு அந்த பயனற்ற மரத்தின் அருகில் ஓய்வெடுத்துக் கொண்டிருந்தேன். "இன்னும் எனது நண்பன் வரவில்லை. அவன் எங்காவது மூழ்கியிருப்பானோ, ஒருவேளை அவன் எங்காவது காணாமல் போயிருப்பானோ என்று நான் மிகவும் கவலையாக உள்ளேன். தொலைதூர தேசங்கள் ஏதாவது ஒன்றில் அவன் காணாமல் போயிருக்கலாம். இதற்கு மேல் அவன் உயிரோடு இல்லாமல் கூட இருக்கலாம். அவனைப் பற்றிய செய்திகளுக்காக நான் எப்படி ஆசைப் படுகிறேன்! எனது வாழ்க்கையின் இறுதிக் கட்டத்தை நான் நெருங்கிக் கொண்டிருக்கிறேன். அவனைப் பற்றிய செய்திகள் ஏதாவது கிடைத்தால் நான் கொஞ்சம் திருப்தியடைவேன். அதன்பின் நான் சந்தோஷமாக இறப்பேன். ஆனால் நான் அழைத்தால் கூட அவன் வர மாட்டான். என்னிடமோ

கொடுப்பதற்கு ஒன்றுமில்லை. ஆனால், அவனுக்கோ எதை யாவது கைப்பற்றுகின்ற பாஷைதான் தெரியும்'', என்று அந்த மரம் என்னிடம் மெதுவாகக் கூறியது.

எதையாவது கைப்பற்ற வேண்டும் என்கிற பாஷை மட்டுமே ஆணவத்திற்கு தெரியும். ஆனால் அன்பின் பாஷை ஏதாவது கொடுக்க வேண்டும் என்பதுதான்.

இதற்கு மேல் நான் எதுவும் சொல்லமுடியாது. மேலும் இதற்குமேல் சொல்வதற்கு ஒன்றும் கிடையாது. எல்லோரும் அதன் நிழலில் தங்குவதற்காக நாலாபுறமும் அதன் கிளைகளைப் பரப்பிக் கொண்டிருக்கும் அந்த மரத்தைப் போன்று நமது வாழ்க்கையும் ஆக முடியும் என்றால்தான் நம்மால் அன்பு என்றால் என்ன என்றும் புரிந்து கொள்ளமுடியும். அன்பிற்கு எந்தப் புனித நூல்களும் கிடையாது. ஒரு வரைபடமும் கிடையாது. ஒரு அகராதியும் கிடையாது. அன்பிற்கென்று வரையறுக்கப்பட்ட தத்துவங்கள் கிடையாது.

அன்பைப் பற்றி என்ன கூறமுடியும் என்று நான் ஆச்சரியமடைகிறேன்! அன்பானது விவரிப்பதற்கு அந்த அளவு கடினமானது. அன்பு வெறுமனே இருப்பது; நீங்கள் வந்து எனது கண்களைப் பார்த்தால் அந்தக் கண்களில் அன்பு நிகழ்வதைப் பார்க்க முடியும். ஆரத்தழுவும்போது எனது கைகளில் அன்பை உங்களால் உணரமுடியுமெனில் நான் ஆச்சரியமடைவேன்.

அன்பு.

அன்பு என்றால் என்ன?

அன்பை நீங்கள் எனது கண்களில், எனது கைகளில், எனது மௌனத்தில் உணரவில்லையெனில், அதை உங்களால் ஒருபோதும் எனது வார்த்தைகளால் புரிந்து கொள்ள முடியாது.

இதுவரை பொறுமையுடன் கேட்டதற்கு நன்றியுடைய வனாகிறேன். முடிவாக உங்கள் எல்லோருக்குள்ளும் அமர்ந்திருக்கும் அந்த எல்லாவற்றிற்கும் மேலான ஒன்றிற்கு நான் தலை வணங்குகிறேன்.

எனது வாழ்த்துக்களை தயவுசெய்து ஏற்றுக்கொள் ளுங்கள்.

★★★★★★

ஒருநாள் அதிகாலை வேளையில், சூரிய உதயத்திற்கு முன்பு, செம்படவன் ஒருவன் ஆற்றிற்குச் சென்றான். ஆற்றின் கரையில் காலடியில் ஏதோ தட்டுப்படுவதை உணர்ந்தான். அது கற்கள் நிறைந்த ஒரு சிறு மூட்டையாக இருக்கக் கண்டான். அவன் அந்த மூட்டையை எடுத்தான். தனது மீன்பிடி வலையை அருகில் வைத்துவிட்டு ஆற்றின் கரையில் வந்து அமர்ந்து சூரிய உதயத்திற்காகக் காத்திருந்தான். தனது பகல் வேலையை ஆரம்பிப்பதற்காக, பொழுது விடிவதற்காக காத்திருந்தான். சும்மா இருந்த அவன் அந்த மூட்டையில் இருந்து ஒரு கல்லை எடுத்து ஆற்று நீரில் வீசினான். அதன்பின் அடுத்தக் கல்லை வீசினான். செய்வதற்கு வேறொரு வேலையும் இல்லாததால் இப்படி அவன் இந்தக் கற்களையெல்லாம் ஒன்றன்பின் ஒன்றாக நீரினுள் எறிந்துவந்தான்.

மெதுவாக சூரியன் உதித்தது. எங்கும் வெளிச்சம் வந்தது. அதற்குள் அவன் ஒரே ஒரு கல்லைத் தவிர மற்ற எல்லாக் கற்களையும் வீசி எறிந்திருந்தான்; கடைசிக் கல் மட்டும் அவனது உள்ளங்கையில் இருந்தது. அவன் கையில் வைத்தி ருந்த அந்தக் கல்லை பகல் வெளிச்சத்தில் பார்த்தபோது அவனது இதயமே நின்றுவிட்டது. அது ஒரு இரத்தினக் கல்! இருட்டில் அந்த மூட்டையில் இருந்த கற்கள் முழுவதையும் வீசி எறிந்திருந்தான்! அவனை அறியாமலேயே அவன் எல்லா வற்றையும் இழந்து விட்டான்! தவறை உணர்ந்து வருத்தம் நிறைந்த அவன் தன்னையே சபித்துக் கொண்டான். துக்கத்தில் அவன் மனம்விட்டு கதறி அழுதான்.

இப்போதிருப்பதை விட பலமடங்கு அவனது வாழ்க்கையை வசதியாக்கிக் கொள்வதற்கான அளவிற்குப் போதுமான செல்வம் எதிர்பாராத விதமாக அவனிடம் மாட்டியது. ஆனால் அதை

அறியாமல், இருளில் அதை அவன் இழந்து விட்டான். என்றாலும் ஒருவகையில் அவன் அதிர்ஷ்டம் செய்தவன்; இன்னும் ஒரே ஒரு இரத்தினக் கல் மீதியிருந்தது. அவன் அதை வீசி எறிவதற்கு முன்பே வெளிச்சம் வந்து விட்டது. பொதுவாக நம்மில் பலருக்கு அந்த அளவுக்குக் கூட அதிர்ஷ்டம் இருப்பதில்லை.

சுற்றிலும் ஒரே இருள் நிறைந்துள்ளது. காலமோ விரைந்து செல்கிறது. சூரியனோ இன்னும் உதிக்கவில்லை. ஆனால் நாமோ, நமது வாழ்வின் விலை மதிக்கமுடியாத இரத்தினங்களையெல்லாம் இழந்துவிட்டு நிற்கிறோம். வாழ்க்கை என்பது மிகப் பெரிய புதையல். ஆனால் மனிதன் அதைவைத்து ஒன்றும் செய்யாமல் அதை அப்படியே வீசி எறிந்துவிட்டான். வாழ்க்கையின் முக்கியத்துவத்தை நாம் அறிந்து கொள்கின்ற அந்த நேரத்தில் நமது வாழ்நாள் எல்லாம் வீணாகக் கழிந்து போயிருக்கும். வாழ்க்கையின் இரகசியங்கள், புதிர்கள், ஆனந்தம், அதன் கொடைகளை, சொர்க்கத்தை எல்லா வற்றையும் நாம் இழந்துவிட்டோம். இப்படியே ஒருவனின் வாழ்நாள் கழிந்து போகிறது.

அடுத்த சில தினங்களுக்கு வாழ்க்கையின் அரிய பொக்கிஷயங்களைப் பற்றி நான் பேச இருக்கிறேன். ஆனால் வாழ்க்கையை அந்த சாக்கு மூட்டையைப் போல் நடத்துகின்ற மக்களுக்கு மெய்யான அறிவைப் புகட்டுவது மிகவும் கடினம். இதுவரை அவர்கள் வீசி எறிந்துவந்தது கற்கள் அல்ல. இரத்தினங்களென்கிற உண்மையின்பால் அவர்களது கவனம் ஈர்க்கபடுவதால் மக்கள் வெறுப்படைகின்றனர். நாம் கூறுவது தவறு என்பதற்காக அல்ல, அவர்களது முட்டாள்தனத்தை நாம் சுட்டிக்காட்டுவதால், அவர்கள் இழந்துவிட்டவற்றை அவர் களுக்கு ஞாபகப்படுத்துவதால்தான் அவர்கள் ஆத்திரம் அடைகின்றனர். அவர்களின் ஆணவம் உட்புகுந்து, அவர்கள் கோபமடைகின்றனர்.

இதுவரை நாம் என்னதான் இழந்திருந்தாலும், இன்னும் மிஞ்சியிருக்கும் வாழ்க்கை மிகக் குறுகியதாக இருந்தாலும், ஒரே

ஒரு கல்தான் நமது கையில் மிஞ்சியிருந்தாலும் இப்பொழுதும் கூட உங்களது வாழ்க்கையானது. மீட்கப்படலாம். கற்றுக் கொள்வதற்கு ஒன்றும் காலம் தாழ்ந்துவிடவில்லை. இன்னும் உதவி சாத்தியப்படும். முக்கியமாக உண்மையைத் தேடுவதில் எப்போதும் காலம் தாழ்ந்து போவதில்லை. நாம் நம்பிக்கை யுடன் இருப்பதற்கு இன்னும் காரணங்கள் உள்ளன.

ஆனால் நமது அறியாமையினால், இருளில், வாழ்க்கை என்னும் மூட்டையில் கற்களைத் தவிர வேறொன்றும் இல்லை என்று நாம் எடுத்துக் கொண்டுவிட்டோம். உண்மையைத் தேடுவதற்கு ஏதேனும் முயற்சி மேற்கொள்வதற்கு முன்பு தளர்ந்த இதயத்தோடு வெறுமனே தோல்வியை ஏற்றுக் கொண்டு விட்டோம்.

ஆரம்பக் கட்டமாக இந்த விதி என்னும் படுகுழியைக் குறித்தும், தோற்றுப் போய் விட்டோம் என்கிற இந்தத் தவறான எண்ணத்தைக் குறித்தும் நான் எச்சரிக்கை செய்ய விரும்புகிறேன். வாழ்க்கை என்பது மணலும், கற்களும் நிறைந்த ஒரு குவியல் அல்ல. சரியான கண்ணோட்டத்தில் நீங்கள் வாழ்க்கையை நோக்கினால் வாழ்க்கையில் அநேக நல்லவைகள் உள்ளன. வாழ்க்கையில் நீங்கள் கடவுளை அடைவதற்கான ஏணியைக் காண்பீர்கள்.

இரத்தம், சதை, எலும்பு இவைகளால் ஆன இந்த உடம்பினுள் ஏதோ ஒன்று, இவைகளினின்று தனியான ஏதோ ஒன்று இருக்கிறது. அதற்கும் இந்த இரத்தம், சதை, எலும்பு இவற்றிற்கும் எந்தவிதமான தொடர்பும் கிடையாது. அது அழிவற்றது. அதற்கு ஆரம்பமும் இல்லை, முடிவும் இல்லை. நம் ஒவ்வொருவரின் உள்ளத்தில் அது உருவமற்றதாக இருக்கிறது. நான் உங்களைத் தூண்டுவதெல்லாம் உங்களது அறியாமை என்னும் இருளிலிருந்து அந்த அணையாத ஜோதியை காண தீராத ஆவல் கொள்ளுங்கள் என்பதுதான்.

ஆனால் மரணமில்லா அந்த நெருப்பானது மரணம் என்னும் புகையினால் மூடி மறைக்கப்பட்டுள்ளது. எனவேதான்

நம்மால் அதன் ஒளியைக் காண முடியவில்லை. நாம் புகையை சந்தித்துவிட்டு பின்வாங்கி விடுகிறோம். கொஞ்சம் தைரியம் உள்ளவர்கள் சிறிது தேடுகிறார்கள். ஆனால் அதுவும் புகையில் தான் தேடுகிறார்கள். ஆகையால் அவர்களும் அந்த நெருப்பை, வெளிச்சத்தின் மூலத்தைச் சென்றடைய முடியாதவர்களாகி விடுகின்றனர்.

இந்தப் புகையின் பின்னால் உள்ள அந்த நெருப்பை, இந்த உடலினுள் உள்ள அந்த ஆன்மாவை நோக்கிய நமது பயணத்தை நாம் மேற்கொள்வது எப்படி? எங்கும் நிறைந்த அதை, எல்லாவற்றிற்கும் மேலான அதை நாம் அறிவது எப்படி? இயற்கையால் மூடிமறைக்கப்பட்டுள்ள, இயற்கையின் பின்னால் ஒளிந்துள்ள அந்த ஒன்றை நாம் அறிந்து கொள்வது எப்படி!

அதைப் பற்றி நான் மூன்று கட்டங்களாகப் பேசுகிறேன்.

முதலாவதாக இதுபோன்ற தவறான எண்ணங்களாலும், அளவுக்கு மீறிய கருத்துக்களாலும், போலித் தத்துவங்களாலும் நம்மை நாமே மூச்சடைக்க செய்து விட்டோம். அதனால் அப்பட்டமான உண்மையைத் தெரிந்து கொள்வதற்கான தகுதியையும் நாம் இழந்துவிட்டோம். எதையும் அறிந்து கொள்ளாமல், எதையும் தேடி அலையாமல், எந்தவிதமான உந்துதலும் இல்லாமல், வாழ்க்கையைப் பற்றி நாம் ஏற்கனவே தயாரிக்கப்பட்ட கொள்கைகளை வைத்துக் கொண்டுள்ளோம். ஆயிரக்கணக்கான வருடங்களாக வாழ்க்கை என்பது அர்த்த மற்றது, அது உபயோகமற்றது, துன்பமயமானது என்றுதான் நமக்கு கற்றுக் கொடுக்கப்பட்டுள்ளது. நாம் இருப்பதே உபயோகமற்றது, எந்த நோக்கமும் இல்லாதது, துக்கம் நிறைந்தது. எனவே வாழ்க்கையை நாம் தவிர்க்கவும், வாழ்வை நாம் இகழ்வானதாக நம்பும்படியாகவும் நாம் மனோவசியம் செய்யப்பட்டுள்ளோம். இப்படி தொடர்ந்து மீண்டும் மீண்டும் வாழ்வைப் பற்றிச் சொல்லி மூச்சுத் திணறிக் கொண்டிருக்கிற நமது குரல்வளையை மேலும் இறுக்கிக் கொல்லுவது போல்

ஆகிறது. எனவே இப்போது நாம் வாழ்க்கை என்பதை ஒரு மிகப் பெரிய கூச்சல் என்றும், ஒரு பெரிய ஓசை என்றும், துக்கம் நிறைந்த அனல் படுக்கை என்றும், உணர ஆரம்பிக்கிறோம்.

வாழ்க்கையை நாம் இவ்வளவு கேவலமாக கருது வதால்தான் மனிதனுக்கு கிடைக்க வேண்டிய சந்தோஷமும், அன்பும் கிடைக்காமல் போய்விட்டது. மனிதன் இப்போது உருவமேயில்லாத ஒரு பிண்டத்தைப் போன்று துக்கத்தில் கொந்தளிக்கும் கடலாக இருக்கிறான். மேலும் இதுபோன்ற தவறான கருத்துக்களால் மனிதன் தன்னைத்தானே பிரதிபலித்துப் பார்த்துக் கொள்வதைக் கூட நிறுத்தி விட்டான் என்பதில் ஆச்சரியம் ஏதும் கிடையாது. அசிங்கமான ஒரு பிண்டத்தில் அழகைத் தேடி ஏன் முயற்சி செய்ய வேண்டும்? வாழ்க்கை என்பது வெறுமனே தூக்கி எறிவதற்காகவும், வாழாமல் ஒதுக்கித் தள்ளுவதற்காகவும் தான், என்று ஒருவன் திடமாக நம்பும் பொழுது அந்த வாழ்வை ஒப்புக் கொள்ள முயற்சிப்பதிலும், அதைத் தூய்மையானதாக்க முயற்சிப்பதிலும், அதை அழகுப்படுத்துவதிலும் எந்தவிதமான அர்த்தமும் கிடையாது அல்லவா? முழு முயற்சியும் உபயோகமற்றதாக ஆகிவிடும்.

வாழ்க்கையைப் பற்றிய நமது எண்ணம், இரயில் வரும் வரை இரயில் நிலையத்தில் உள்ள காத்திருக்கும் அறையை நாம் உபயோகிப்பது போன்றுதான் உள்ளது. அவன் அந்த அறையில் கொஞ்சநேரம் மட்டுமே இருக்கப் போவதாகவும், கூடிய சீக்கிரம் அதைவிட்டு போய்விடப் போவதாகவும் நினைக்கிறான். எனவே காத்திருக்கும் அந்த அறைக்கு என்ன முக்கியத்துவம் கிடைக்கும்? அதற்கு எந்தவிதமான முக்கியத்துவமும் கிடைக் காது. அது முற்றிலும் சிறப்பற்றதாக ஆகிவிடும். அவன் அந்த அறையில் அங்கும், இங்கும் சுற்றுவான், அதில் துப்புவான், அதை அசிங்கப்படுத்துவான், அவன் எதுவுமே சிந்திக்க மாட்டான், அவன் தனது நடத்தைகளைப் பற்றி கவலைப் படமாட்டான். ஏனென்றால் கூடிய சீக்கிரம் அவன் அந்த

அறையைவிட்டு வெளியேறிவிடுவான். அதேபோன்று தான் நாமும் வாழ்க்கையை ஒரு தற்காலிக தங்குமிடமாகக் கருதுகிறோம்.

இன்றைய போக்கு என்னவெனில் வாழ்க்கையில் அழகையும், உண்மையையும் ஒருவன் ஏன் தேடி அலைய வேண்டும் என்பதுதான். ஆனால் நான் வலியுறுத்த விரும்புவது என்னவெனில், கூடிய சீக்கிரம் வாழ்க்கை என்பது ஒரு முடிவுக்கு வந்துவிடும். அப்போது அதன் உண்மைகளினின்று நாம் தப்பிக்க முடியாது. நாம் நமது வீடுகளை மாற்றலாம், உடல்களை மாற்றலாம். ஆனால் நமது வாழ்வின் சாரம் நம்மோடு அப்படியேதான் இருக்கும். அதுதான் உங்களது சுயரூபம். அதை ஒழித்துக்கட்ட முற்றிலும் ஒரு வழிகூட கிடையாது.

நாம் செய்யும் செயல்களால்தான் நாம் உருவாக்கப் படுகிறோம். முடிவாக, நாம் செய்யும் செயல்கள்தான் நம்மை உருவாக்குகின்றன அல்லது உருக்குலைக்கின்றன. அவைகள் நமது வாழ்வை மாற்றிவிடும். அவைகள் நமது வாழ்வை உருவாக்கும், நமது ஆன்மாவை வார்ப்படம் செய்கின்றன. நாம் எப்படி வாழ்கிறோம், நாம் நமது வாழ்க்கையில் என்ன செய்கிறோம் என்பதுதான் நமது எதிர்காலத்தை உருவாக்குகிறது. வாழ்க்கையைப் பற்றிய ஒருவனின் நோக்கம்தான் அவனது ஆன்மாவிற்கு வழி காட்டுகிறது. அது எப்படி வளர வேண்டும், இதுவரை புரியாத புதிர்களை அது எப்படி புரிய வைக்கும் என்பது அவனது நோக்கத்தைப் பொருத்தது. எனவே வாழ்க்கை யைப் பற்றி தனது கருத்துதான் தனது எதிர்காலத்தை வார்ப்படம் செய்கிறது என்று ஒருவன் விழிப்புணர்வு பெற்றுவிட்டால் உடனடியாக அவன் வாழ்க்கையைப் பற்றிய தனது நோக்கத்தை, அது உபயோக மற்றது, அர்த்தமற்றது என்ற எண்ணத்தை விட்டு விடுவான். நாம் இருப்பது முழுவதும் துக்கத்தை அனுபவிக்கத் தான். எந்த விதமான திட்டங்களையும் நாம் செய்ய வேண்டிய தில்லை என்கிற நம்பிக்கையின் பொய் தோற்றத்தை அவன் அப்போது உணர்ந்து விடுவான், அப்போது அவன் வாழ்க்கைக்கு எதிரானது எல்லாம் மதத்திற்கும் எதிரானது என்பதை அறிந்து கொள்வான்.

ஆனால், மதத்தின் பெயரால் வாழ்வுக்கு எதிராகச் செல்லும்படிதான் நமக்குக் கற்பிக்கப்பட்டுள்ளது. மதத்தின் தத்துவங்கள் எல்லாம் எப்போதும் மரணத்தைக் குறிக்கோளாகக் கொண்டுதான் உள்ளனவேத் தவிர, வாழ்க்கையைக் குறிக் கோளாகக் கொண்டல்ல. இந்த வாழ்வு முடிந்த பின்னர் என்ன நிகழுமோ அதுதான் முக்கியமானது என்று மதம் நமக்குப் போதிக்கிறது. ஆனால் நாம் மரணமடைவதற்கு முன்பு என்ன நடக்கிறதோ அதற்கு எந்தவிதமான சிறப்பும், மதிப்பும் அது தருவதில்லை. இதுவரையில் மதங்கள் மரணத்திற்கு மதிப்பு கொடுத்துள்ளன. ஆனால் வாழ்க்கைக்கு மரியாதை கொடுக்க வில்லை. வாழ்க்கையின் மலர்களையும். கனிகளையும் சந்தோஷமாக ஏற்றுக்கொள்வதை எங்குமே காண முடிய வில்லை. எங்கு நோக்கினும் மடிந்துபோன மலர்களின் மீதுதான் பிடிவாதமான பற்றுதல் காணப்படுகிறது. மடிந்து போன மலர்களின் கல்லறைகளின் மீது நாம் வாழ்வின் புகழ்மாலையை சூட்டிக் கொண்டிருக்கிறோம்.

மதவய (religious) சிந்தனைகள் எல்லாம் எப்போதும் மரணத்திற்குப் பிறகு அதாவது சொர்க்கத்தில், மோட்சத்தில்தான் குவிக்கப்பட்டுள்ளது. மரணத்தின் முன்னால் ஏற்படுபவை களெல்லாம் சம்பந்தமில்லாதவை என்பது போன்று எண்ணு கிறது. மரணத்திற்கு முன்னால் ஏற்படுபவைகளோடு, உங்களால் வாழமுடியவில்லையெனில் எப்படி நீங்கள் மரணத்திற்குப் பின்னால் ஏற்படுகின்றவற்றோடு தாக்குப் பிடிக்கும் தகுதி அடைவீர்கள்? என்று நான் கேட்க விரும்புகிறேன். அது ஒருபோதும் முடியாத ஒன்று. மரணத்திற்கு முன் இங்கு என்ன இருக்கிறதோ அதை நம்மால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை யெனில் மரணத்திற்குப் பின் ஏற்படப் போகின்றவைகளுக்கு நாம் நம்மை ஒருபோதும் தகுதியுள்ளவர்களாக அல்லது தயார்படுத்திக்கொள்ள முடியாது. ஒருவனது மரணத்திற்கான தயாரிப்புகள் எல்லாம் அவன் வாழும் வாழ்க்கையின்போதுதான் செய்யமுடியும். மரணத்திற்கு பின் மறு உலகம் ஒன்று இருக்கு

மெனில், அங்கு சென்ற பின்னும் நாம் இந்த வாழ்வில் எதை அனுபவித்தோமோ அதோடு நாம் எதிரியாக ஆக வேண்டிய திருக்கும். இந்த வாழ்க்கையை துறந்துவிட்டதாக நீங்கள் எவ்வளவுதான் பின்னிப்பின்னி பேசினாலும் இந்த வாழ்வின் பின்விளைவுகளில் இருந்து நீங்கள் தப்பிக்க முடியாது.

நமக்குக் கொடுக்கப்பட்டுள்ள இந்த வாழ்க்கையைத் தவிர வேறொரு கடவுள் இல்லை. இருக்கவும் முடியாது என்று நான் கூறுகிறேன். ஒருவன் தனது வாழ்க்கையை நேசிப்பதுதான் அவனது சாதனை அல்லது கடவுளைச் சென்றடையும் வழி என்றும் நான் கூறுகிறேன். வாழ்வை முழுமையாக ஏற்றுக் கொள்வதுதான் ஒருவனுடைய உண்மையான மதமாகும். இந்த வாழ்க்கையில்தான் நாம் கண்டுகொள்ள வேண்டிய முடிவான உண்மை உள்ளது என்பதை உணர்ந்துகொள்வதுதான் முழுமை யான விடுதலையை சந்திப்பதற்காக நீங்கள் எடுத்து வைக்கும் மங்களகரமான முதல் அடி ஆகும். வாழ்க்கையை வாழாது விட்ட ஒருவன் நிச்சயமாக எல்லாவற்றையும் இழந்தவனாகிறான்.

எனினும் இந்த மதங்கள் எல்லாவற்றின் போக்குகளும் இதற்கு நேர் எதிரானதாக உள்ளன. வாழ்க்கையை விட்டு விடுங்கள், இந்த உலகத்தை துறந்து விடுங்கள் - இதுதான் அவைகளின் போக்கு. வாழ்க்கையைப் பற்றி சிந்திக்க வேண்டும் என்று மதங்கள் அறிவுறுத்துவது இல்லை. மதங்கள் உங்கள் வாழ்க்கையை நீங்கள் வாழ்வதற்கும் உதவுவதில்லை. வாழ்க்கையை நீ வாழ்ந்து பார்த்தால்தான் புரிந்து கொள்ள முடியும் என்று மதம் உனக்கு சொல்வதில்லை. ஆனால் வாழ்க்கையைப் பற்றிய உங்களது ஞானம் சுத்தமானதாக இல்லாமல் இருப்பதால்தான், உங்களது வாழ்க்கை துன்பம் நிறைந்ததாக இருக்கிறது. என்று மட்டும் மதம் கூறுகிறது. வாழ்க்கையை வாழ்வதற்கான சரியான வழியை நீங்கள் அறிந்துகொண்டால் வாழ்வானது உங்கள் மீது சந்தோஷ மழையைப் பொழிய முடியும்.

வாழும் கலையைக் கற்று கொடுப்பதுதான் மதம் என்று நான் சொல்கிறேன். வாழ்க்கையின் அஸ்திவாரத்தை இரகசிய மாக அழிக்கின்ற வழிகள் மதமாகாது. மதம் என்பது இயற்கை யின் புரியாத புதிர்களை ஆழமாகத் தோண்டுவதற்கான ஒரு சாதனம். மதம் என்பது வாழ்வுக்கு புறமுதுகு காட்டுவது அல்ல. அது வாழ்க்கையை நேருக்கு நேர் சந்திப்பதுதான். மதம் என்பது வாழ்க்கையில் இருந்து தப்பி ஓடுவதல்ல. வாழ்க்கையை முழுமையாக ஆரத்தழுவி கொள்வதுதான் மதம். வாழ்க்கையை முழுமையாக உணர்ந்து கொள்வதுதான் மதம்.

மதத்தைப் பற்றிய தவறான கருத்துக்களினால் இன்றைய காலத்தில் வயதானவர்கள் மட்டுமே மதத்தில் ஆர்வம் காட்டுகின்றனர். கடவுள் இருக்கும் இடங்களில், கோவில்களில், தேவாலயங்களில், குருத்துவாராக்களில், மசூதிகளில் இவை களில் எல்லாம் நீங்கள் வயதானவர்களை மட்டுமே காண முடியும். அங்கு நீங்கள் இளைஞர்களைக் காண முடியாது. ஏன்? அதற்கு ஒரே ஒரு விளக்கம்தான். நமது மதங்கள் எல்லாம் வயதில் முதிர்ந்தவர்களுக்கு மட்டுமே என்பதாகிவிட்டது. அது மரணத்தின் பயத்தால் பீடிக்கப்பட்டவர்களுக்கானதாக ஆகி விட்டது. தங்கள் வாழ்வின் கடைசி கட்டத்தில் உள்ளவர் களுக்கானதாக நமது மதம் ஆகிவிட்டது. மரணத்திற்குப் பின் என்ன நேருமோ என்று துக்கப்படுகிறவர்களுக்கானதாக ஆகிவிட்டது.

மரணத்தை அடிப்படையாகக் கொண்டுள்ள ஒரு மதம் வாழ்வை எங்ஙனம் ஒளியுள்ளதாக ஆக்க முடியும்? ஐயாயிரம் ஆண்டுகள் மத போதனைகளுக்குப் பிறகும் இந்த உலகம் மோசத்திலிருந்து படுமோசமாக மூழ்கிக் கொண்டிருக்கிறது. இந்தக் கிரகத்தில் கோவில்கள், மசூதிகள், தேவாலயங்கள், மதகுருக்கள், போதகர்கள், துறவிகள் இவர்களுக்கெல்லாம் குறைவில்லை. என்றாலும் கூட, இதன் மக்கள் இன்னும் மத சம்பந்தமுடையவர்களாக ஆகவில்லை. இது ஏனெனில் மதம் பொய்யான அடித்தளத்தைக் கொண்டுள்ளது. மதத்தின்

வேர்களில் வாழ்க்கை என்பது இல்லை. மதம் என்பது மரணத்தின் மீது கட்டப்பட்டுள்ளது. மதம் என்பது உயிரோடு இருப்பதற்கான அடையாளம் அல்ல. மதம் என்பது ஒரு கல்லறையைப் போன்று உள்ளது. இப்படி பாரபட்சமுள்ள மதம் ஒரு போதும் நமது வாழ்விற்கு உயிரூட்ட முடியாது.

இதற்கெல்லாம் காரணம் என்ன?

இந்த சில நாட்களில் நான், வாழ்வதற்கான மதத்தைப் பற்றியும், வாழ்க்கையில் நம்பிக்கை கொண்ட மதத்தைப் பற்றியும் மேலும் சாதாரண மனிதனால் அதைக் கண்டுகொண்டுள்ள தைரியமூட்டப்படாத, ஒரு குறிப்பிட்ட ஆரம்ப கொள்கையைப் பற்றியும் உங்களுடன் கலந்துரை யாடுகிறேன். கடந்த காலங்களில் வாழ்க்கையின் ஆரம்ப விதியாகிய இதன் மீது, அந்த அடிப்படை உண்மையை மறைப்பதற்காக ஒரு போர்வையை வீசி விட்டனர். அதன் விளைவாக இந்த மாபெரும் தவறானது எங்கும் வியாபித்துள்ள ஒரு நோயாக வளர்ந்து விட்டது.

சராசரி மனிதனின் அந்த அடிப்படை உந்துதல் என்ன?

கடவுளா?
இல்லை.

ஆன்மாவா?
இல்லை.

உண்மையா?
இல்லை.

மனிதனின் உள்ளகத்தில் இருப்பது என்ன? சாதாரண மனிதனுக்குள் சராசரி மனிதனின் வாழ்வில், ஒருபோதும் தியானம் செய்யாத, ஒருபோதும் தனது ஆன்மாவைத் தேடி அலையாத, ஒருபோதும் மத சம்பந்தமான எவ்வித தேடலையும் மேற்கொள்ளாத சாதாரண மனிதனின் அடிப்படை ஆசை என்ன?

பக்தியா?
இல்லை.

பிரார்த்தனையா?
இல்லை.

விடுதலையா?
இல்லை.

நிர்வாணமா?
நிச்சயமாக இல்லை.

சாதாரண மனிதனின் அடிப்படை ஆசையை, அடிப்படை உந்துதலை நாம் நோக்கினால் இந்த வாழ்க்கையின் பின்னால் இருக்கும் மாபெரும் விசையை நாம் தேடினால் கடவுளையோ, அல்லது பக்தியையோ, பிரார்த்தனையையோ அல்லது ஞானத்தைப் பெறுவதற்கான தியானத்தையோ காண முடியாது. அங்கு நாம் முற்றிலும் மாறுபட்ட ஒன்றை, இருளில் தள்ளிவிடப்பட்ட ஒன்றை, நாம் தன்னுணர்வுடன் எதிர்கொள்ளாத ஒன்றை, நாம் ஒருபோதும் மதிப்பிடாத ஒன்றைத்தான் காண்போம். அந்த ஒன்று என்ன? சராசரி மனிதனின் மையத்தை ஆராய்ந்து பார்த்தால் நீங்கள் என்ன கண்டு கொள்வீர்கள்?

கொஞ்ச நேரத்திற்கு மனிதனை கொஞ்சம் பக்கத்தில் தள்ளி வைத்துவிடுங்கள். மிருகம் அல்லது தாவர வர்க்கத்தை நாம் உற்று நோக்கினால் அவைகளின் மையத்தில் நாம் எதைக் காண்கிறோம்? ஒரு செடியின் செயல்களை நாம் உற்று நோக்கினால் நாம் என்ன காண்கிறோம்? அதன் வளர்ச்சி எதை நோக்கி செல்கிறது? அதன் முழு சக்தியும் ஒரு புதிய விதையை உற்பத்தி செய்வதற்காக திருப்பி விடப்படுகிறது. அதன் உள் உயிர் முழுவதும் ஒரு புதிய விதையை உருவாக்குவதில் ஈடுபட்டுள்ளது. ஒரு பறவை என்ன செய்கிறது? ஒரு மிருகம் என்ன செய்கிறது? இயற்கையின் செயற்பாடுகளை நாம் உற்றுநோக்கினால் அவைகளின் ஒரே ஒரு செயல் மட்டுமே,

ஒரே ஒரு இதயப்பூர்வமான செயல் மட்டுமே நடைபெறுவதைக் காணலாம். அந்த செயற்பாடு என்னவெனில் தொடர்ந்து உற்பத்தி செய்தல், இனவிருத்தி செய்தல், புதிது புதிதாக மாறுபட்ட தன்னுடைய இனத்தை உருவாக்குதல்தான். மலர்களில் விதைகள் இருக்கின்றன. கனிகளில் விதைகள் இருக்கின்றன. விதையின் விதி என்ன? அந்த விதை ஒரு புதிய செடியாக, ஒரு புதிய மலராக, ஒரு புதிய கனியாக, ஒரு புதிய விதையாக ஆக வேண்டும் என்பதுதான் அந்த விதையின் விதி. இப்படியாக அந்த சக்கரம் சுழன்று கொண்டே இருக்கிறது. இனவிருத்தி செய்தல் என்பது என்றுமே முடிவில்லாதது. உயிர் என்பது தொடர்ந்து தன்னைத்தானே உற்பத்திப் பண்ணிக் கொண்டிருக்கும் ஒரு சக்தி. வாழ்க்கை என்பது ஒரு படைப்புக் கலை, தன்னைத் தானே படைத்துக் கொள்ளும் முறை.

இதே உண்மையானது மனிதனைப் பொறுத்த அளவிலும் உண்மையானது. நாம் இந்த செயல்முறையை "மோகம்", "காமம்" என்று பெயரிட்டுள்ளோம். இதை நாம் சிற்றின்ப இச்சை என்றும் அழைக்கிறோம். இப்படி நாம் பெயரிட்டு இருப்பதே இழிவுபடுத்துவது போல் உள்ளது. ஆனாலும் இனப்பெருக்கம் நடந்துகொண்டுதான் இருக்கிறது.

அப்படியென்றால் காமம் என்பது என்ன? மோகம் என்பது என்ன? காமம் என்று அழைக்கப்படும் அந்த சக்தி என்ன?

பன்னெடுங்காலமாக தொடர்ந்து அலைகள் எழுந்து வந்து கரையில் மோதிக் கொண்டே இருக்கின்றன. அலைகள் எழுகின்றன, விழுகின்றன, மீண்டும் திரும்பிச் செல்கின்றன, அவைகள் துருத்திக் கொண்டு மேலே எழுகின்றன, பின்னர் கலைகின்றன. அதன்பின் மீண்டும் பின்னோக்கிச் செல்கின்றன. வாழ்க்கையும் முன்னேற வேண்டும். முன்னால் செல்ல வேண்டும் என்னும் உள் உந்துதலைக் கொண்டுள்ளது. இந்த அலைகளிடம் காணப்படும் அந்த ஒருவகையான ஓய்வற்றத் தன்மைதான்

மனிதனின் வாழ்க்கை அலைகளிலும் காணப்படுகிறது. ஏதோ ஒன்றை சாதிக்க வேண்டும் என்கிற தொடர் முயற்சி நடந்து கொண்டிருக்கிறது. அந்த நோக்கம்தான் என்ன? ஒரு நல்ல நிலையை அடையவேண்டும் என்னும் தீவிர ஆசைதான், மாபெரும் உச்சியை சென்றடைய வேண்டும் என்னும் மோகம்தான். இப்படிப்பட்ட முடிவில்லாத சக்தியின் பின்தான் வாழ்வே உள்ளது. இந்த உயிரானது இன்னும் நல்ல வாழ்க்கையை நோக்கி, நல்லபடியாக இருக்கின்ற நிலையை நோக்கி கஷ்டப்பட்டு முன்னேற முயன்று கொண்டிருக்கிறது.

இந்த பூமியில் முதன்முதலில் மனிதன் தோன்றி வெகுகாலம் ஆகிவிடவில்லை. சில ஆயிரக்கணக்கான வருடங்கள் ஆகின்றன. அதற்கு முன்பு வெறும் மிருகங்கள் மட்டுமே இருந்தன. அவைகள் பூமிக்கு வந்தும் வெகுகாலம் ஆகிவிடவில்லை. அதற்கு முன்பு மிருகங்களே இல்லாத ஒரு காலமும் இருந்தது. அப்போது வெறும் தாவரங்கள் மட்டுமே இருந்தன. தாவரங்களும்கூட இந்த கிரகத்தில் தோன்றி வெகுகாலம் ஆகிவிடவில்லை. அதற்கு முன்பு வெறும் பாறைகளும், மலைகளும், நதிகளும், கடல்களும்தான் இருந்தன.

இந்தப் பாறைகள், மலைகள், நதிகள், கடல்கள் நிறைந்த உலகம் எதைக் குறித்து அமைதியற்று இருந்திருக்க முடியும்? அவைகள் தாவரங்களை உற்பத்தி செய்வதற்கு கஷ்டப்பட்டு முயன்று கொண்டிருந்தன. போகப் போக, மெல்ல மெல்ல தாவரங்கள் ஏற்பட்டன. உயிர் சக்தியானது ஒரு புதிய உருவத்தில் வெளிப்பட ஆரம்பித்தது. அதன்பின் இந்த பூமி தாவரங்களால் சூழப்பெற்றது. அது மேலும் மேலும் உயிர்களைத் தொடர்ந்து உருவாக்கியது. தொடர்ந்து இனவிருத்திச் செய்தது. மலர்கள் மலர்ந்தன, கனிகள் கனிந்தன.

இந்தத் தாவரங்களும்கூட அமைதியற்று இருந்தன. அவைகள் தங்களோடு திருப்தி அடையவில்லை. அவைகளின் உந்துதலும் அவைகளைவிட மேலான ஒன்றை நோக்கி

இருந்தது. மிருகங்களையும், பறவைகளையும் உருவாக்க அவைகள் ஆவலுள்ளவைகளாக இருந்தன. அதன்பின்னர் பறவைகளும், மிருகங்களும் இந்த கிரகத்தில் பல ஆண்டுகளாக இருந்து வந்தன. ஆனால் மனிதனைக் காணமுடியவில்லை. என்றாலும் அந்த மிருகங்களுக்குள் மனிதன் இருக்கத்தான் செய்தான். அவன் உருவாவதற்கான தடைகளை, அவன் பிறப்பதற்கான தடைகளை உடைத்தெறிந்து வெளிவருவதற்குத் தயாராக இருந்தான். அதன்பின் கொஞ்ச காலத்தில் மனிதன் இந்த கிரகத்தில் வந்தான்.

இப்போது மனிதன் எதற்காக இருக்கிறான்? மனிதன் தொடர்ந்து புதிய ஜீவன்களை உருவாக்குவதில் பரபரப்பாக இருக்கிறான். நாம் அதை செக்ஸ் என்று கூறுகிறோம். நாம் அதை காம வேட்கை என்றழைக்கிறோம். ஆனால், அந்த காம வேட்கையின் அடிப்படை அர்த்தம் என்ன? மனிதன் தன்னோடு தன் இனம் முடிந்து விடக்கூடாது என்று மேலும் மேலும் புதிய உயிர்களை உற்பத்தி செய்யவேண்டும் என்ற விருப்பம்தான் அதன் அடிப்படை பொருள். இதெல்லாம் ஏன்? மனித உயிரின் மூலம் மனிதனைவிட உயர்ந்த "சூப்பர்மேன்" அல்லது ஒரு மகாமனிதனை உருவாக்குவதற்கான முயற்சி ஏதேனும் நடந்து கொண்டிருக்கிறதா? தீர்மானிக்கப்பட்ட ஏதோ ஒன்று நடந்து கொண்டிருக்கிறது. மனித உயிர் இந்த முயற்சியில் ஈடுபட்டுள் ளது. ஏனென்றால் மனிதனை விட மிகச்சிறந்த உயிரை அடைய முடியுமா என்கிற அந்த தீர்மானத்தில்தான். மனிதனைவிட மிகச் சிறந்த உயிரை உற்பத்தி செய்ய வேண்டும் என்ற தீர்மானம்தான். நீட்சேயில் இருந்து அரவிந்தர் வரை, பதஞ்சலியில் இருந்து பெர்ட்ரண்ட் ரஸ்ஸல் வரை எல்லா மனிதர்களின் உயிரிலும் ஒரே கற்பனை. நம்மைவிட மேலான மனிதன் ஒருவனை உருவாக்கு வது எப்படி என்பது ஒன்றுதான் ஒரு கனவைப் போல் இருந்து வந்துள்ளது. ஆனால் மனிதனிலிருந்து மகாமனிதன் எப்படி பிறக்க முடியும். நாமோ ஆயிரக்கணக்கான வருடங்களாக இனவிருத்தி செய்யும் விருப்பத்தையே குறை கூறி

வந்துகொண்டிருக்கிறோம். இன்றுவரை நாம் செக்ஸிற்கு, அதை இழிவுபடுத்துவதைத் தவிர வேறு எந்த கௌரவமும் கொடுக்கவில்லை. நாம் அதைப்பற்றி பேசுவதற்குக் கூட பயப்படுகிறோம். "செக்ஸ்" என்று ஒன்று இல்லாதது போலவும் நாம் மறைத்து வருகிறோம். ஆனால் உண்மை என்னவெனில், மனித வாழ்க்கையில் அதைவிட சிறப்பு நிறைந்தது வேறு ஒன்றும் இல்லை. ஆனால் நாம் எதை மறைக்கிறோமோ, அதை அமுக்கி வைத்துள்ளோம். மறைத்து வைப்பதாலும் அழுத்தி வைப்ப தாலும் மனிதன் செக்ஸில் இருந்து விடுதலைப்பெற முடியாது. சொல்லப் போனால் மனிதன் இன்னும் மோசமான நிலையில் செக்ஸினால் பிடிக்கப்பட்டுள்ளான். அடக்கி வைத்தலினால் அதற்கு நேர் எதிரிடையான விளைவுதான் வந்துள்ளது. அநேகமாக உங்களில் யாராவது விஞ்ஞானத்தின் ஒரு புதிய விதியைப் பற்றி கேள்விப்பட்டிருக்கலாம். அந்த விதிக்கு "எதிரிடை விளைவு விதி" (Law of reverse effect) எனப் பெயர். ஆராய்ச்சியில் எதிரான விளைவுகளின் விதி என்று புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. நாம் எதைச் செய்ய விரும்பு கிறோமோ, அதை இந்த முறையில் செய்ய வேண்டியதுள்ளது. அதாவது நாம் எந்த விளைவை எதிர் பார்க்கிறோமோ அதற்கு எதிரான விளைவு நமது கைக்கு வரும் என்பதுதான் அந்த விதி.

ஒரு ஆள் சைக்கிள் ஓட்ட கற்றுக்கொள்கிறான். சாலை மிகவும் பெரிதாக, மிகவும் அகலமானதாக இருக்கிறது. ஒரு சிறிய பாறை ஒன்று சாலையின் ஓரத்தில் இருக்கிறது. அப்போது சைக்கிள் ஓட்டக் கற்றுக் கொள்ளும் அந்த ஆள் தான் எப்படியாகிலும் அந்தப் பாறையில் மோதாமல் போக வேண்டுமென்று பயம் கொள்கிறான். ஆனால் கண்ணை மூடிக் கொண்டு சென்றாலும் கூட அந்த பாறையில் மோதி விடுவது என்பது எளிதான காரியம் அல்ல. ஏனென்றால் அந்த சாலையானது அந்த அளவுக்கு அகலமானது. அவனுடைய சிந்தனையில் அந்தப் பாறையில் மோதாமல் செல்வது எப்படி என்கிற ஒரே ஒரு எண்ணம்தான் உள்ளது. அவ்வளவு பெரிய

சாலையில் எப்படி வேண்டுமானாலும் சென்றுவிட முடியும். ஆனால் நாம் எங்கே அந்தப் பாறையில் மோதிவிடுவோமோ என்று நினைத்து அவன் பயப்படுகிறான். இந்த பயத்தின் காரணமாக அந்தப் பாறையை மட்டும்தான் பார்க்க முடிகிறது. இப்போது அவனது கைக்கிளின் சக்கரங்கள் அந்தப் பாறையை நோக்கிச் செல்கின்றன. அவனது சிந்தனை முழுவதும் அந்தப் பாறையைத்தான் எண்ணுகிறது. அவன் ஏதோ வசியப்படுத்தப் பட்ட, ஹிப்னாடிசம் செய்யப்பட்டவனைப் போல் அந்தப் பாறையையே நோக்கிச் செல்கிறான். சென்று அந்தப் பாறையில் மோதிவிடுகிறான். புதிதாக சைக்கிள் ஓட்டக் கற்றுக்கொள்பவன் எதன்மீது மோதக் கூடாது என்று எண்ணுகிறானோ, அதன் மீதுதான் மோதுகிறான். விளக்கு கம்பத்தில் மோதுகிறான். பாறையில் மோதுகிறான்.

அந்தச் சாலை மிகவும் பெரியதாவும், அகலமான தாகவும் இருந்தது. அப்படியிருக்கும்போது இந்த மனிதன் எப்படி அந்தப் பாறையில் மோதி விபத்துக் குள்ளாகலாம்?

கூயே (Coue) என்னும் மனஇயல் வல்லுநர் மனிதனின் சராசரி மனம் "எதிர் விளைவு விதி" (Law of reverse effect) என்னும் விதியால் ஆளப்படுகிறது என்று கூறுகிறார். எதிலிருந்து நம்மைக் காப்பாற்றிக் கொள்ளவேண்டும் என்று நினைக்கிறோமோ அந்தப் பொருளின் மீதே நாம் மோதி விடுகிறோம். ஏனென்றால் நாம் பயப்படுகின்ற அந்தப் பொருள் நமது சுய அறிவின் மையமாக ஆகிவிடுகிறது. இதேப் போன்றுதான் மனிதனும் கடந்த ஐயாயிரம் ஆண்டுகளாகத் தன்னை காமத்திலிருந்து காப்பாற்றுவதற்கு முயற்சி செய்து கொண்டிருக்கிறான். அதன் விளைவு என்னவெனில் எங்கு பார்த்தாலும். மூலை முடுக்குகளில் எல்லாம் காமத்தினுடைய பல்வேறு உருவங்கள் அவனுக்கு எதிர்படுகின்றன. "எதிர் விளைவு விதி" மனிதனின் ஆன்மாவை பிடித்துக் கொண்டுவிட்டது.

மனதில் எந்த விஷயத்தை நீங்கள் தவிர்க்க வேண்டும், விலக்கவேண்டும் என்று நினைக்கிறீர்களோ அந்த விஷயத்தில் தான் மனமானது அதிக அளவில் கவர்ந்திழுக்கப்படுவதையும், வசியப்படுத்தப்படுவதையும் நீங்கள் ஒருபோதும் கவனித்த தில்லையா? மனிதனை காமத்திற்கு எதிராக இருக்கும்படி கற்றுக்கொடுத்த மக்கள்தான், அதே மனிதன் காமத்தைப் பற்றியே எப்போதும் எண்ணிக் கொண்டிருப்பதற்கு பொறுப்பாளிகள் ஆகின்றனர். மனிதனிடம் காணப்படும் இந்த அதிதீவிர காமவேட்கைக்கு நாம் வழிதவறிய போதனைகளைத்தான் குற்றம் சொல்லவேண்டும்

இன்று நாம் செக்ஸைப் பற்றி பேசுவதற்குக் கூட பயப்படுகிறோம். நாம் ஏன் அந்த விஷயத்தைக் கண்டு பயப்பட வேண்டும்? அதற்கு காரணம் செக்ஸைப் பற்றி பேசுவதாலேயே மனிதன் காமுகன் ஆகிவிடுவான் என்று நாம் ஏற்கனவே எண்ணிக்கொண்டிருப்பதுதான். இந்த நோக்கம் முற்றிலும் தவறானது. காமத்திற்கும், காமப்பித்துடன் அலைவதற்கும் அதிக வித்தியாசம் உள்ளது. நாம் செக்ஸைப் பற்றி பகுத்தறிவு டனும், ஆரோக்கியமான வழியிலும் பேசுகின்ற தைரியத்தை எப்போது அபிவிருத்தி செய்துகொள்கிறோமோ, அப்போதுதான் நமது சமுதாயம் இந்த செக்ஸ் என்னும் பேயிடமிருந்து விடுதலை பெற முடியும்.

செக்ஸை அதன் எல்லா பரிமாணங்களிலும் நாம் புரிந்துகொள்வதால் மட்டுமே நாம் செக்ஸைத் தாண்டி அதற்கு மேலே செல்ல முடியும். நீங்கள் வெறுமனே உங்கள் கண்களை மூடிக்கொள்வதால் நீங்கள் உங்களை ஒரு பிரச்சனையிலிருந்து விடுவித்துக் கொள்ள முடியாது. தான் தனது கண்களை மூடிக் கொள்வதால் தனது எதிரி ஒழிந்துவிடுவான் என்று பைத்தியக்கார மனிதன் மட்டும்தான் நினைப்பான். பாலைவனத்தில் உள்ள நெருப்புக்கோழி இவ்விதமாகத்தான் எண்ணும். நெருப்புக்கோழி தனத தலையை மண்ணுக்குள் புதைத்துக் கொண்டு அதன் எதிரியை அது பார்க்க முடியாததால், தன்னுடைய எதிரி அங்கு

இல்லை என்று நினைத்துக் கொள்ளுமாம். இந்த மாதிரி எண்ணுவதை நெருப்புக்கோழியைப் பொருத்தமட்டில் நாம் மன்னித்து விடலாம். ஆனால் மனிதனிடம் இது மன்னிக்க முடியாதது.

செக்ஸைப் பொருத்தவரை மனிதன் அந்த நெருப்புக் கோழியை விட ஒன்றும் சிறந்தவனாக நடக்கவில்லை. தனது கண்களை மூடிக்கொள்வதன் மூலம், அதை புறக்க ணிப்பதன் மூலம் காமம் ஒழிந்துவிடும் என்று அவன் நினைக்கிறான். இந்த மாதிரி அற்புதங்கள் நடக்குமெனில் வாழ்க்கை எவ்வளவோ எளிதாகிவிடும். ஆனால் அந்தோ பரிதாபம்! நாம் கண் இமைகளை மூடிக்கொள்வதால் ஒன்றுமே மறைந்து விடுவ தில்லை. இதற்கு நேர் எதிர்மாறாக செக்ஸைக் கண்டு நாம் எந்த அளவுக்கு பயப்படுகிறோம் என்பதற்கும், நமது எதிர்ப்பைவிட அதனது கவர்ச்சி எவ்வளவு அதிக சக்தி வாய்ந்ததாக உள்ளது என்பதற்கும் நாம் அதைப் பார்த்து கண்களை மூடிக் கொள்வதே நிரூபணமாகி விடுகிறது. காமத்தை நம்மால் வெற்றிக்கொள்ள முடியாது என்பதனால்தானே நாம் நமது கண்களை மூடிக் கொள்கிறோம்.

ஒருவன் கண்களை மூடிக்கொள்வதென்பது அவனது பலவீனத்தைத்தான் காட்டுகிறது. மேலும் இந்த மனித இனம் முழுவதும் காமத்தைக் குறித்து ஒருவித குற்ற உணர்வு கொண்டுள்ளது. மனிதன் செக்ஸைக் கண்டு வலுக்கட்டாயமாக தனது கண்களை மூடிக்கொண்டது மட்டுமல்ல அதைக் குறித்து எண்ணிலடங்காத உட்பூசல்களையும் அவனுக்குள் உருவாக்கி விட்டான். இப்படி காமத்தோடு மனிதன் தொடுத்துள்ள போரின் விளைவாக ஏற்பட்ட பாழான பலன்கள், நாம் இங்கே எண்ணிக்கையிட்டு கூறுமளவுக்கு எல்லோரும் அறிந்தவைதான். 98 சதவீத மன நோய்களுக்கு, மன விவகாரங்களுக்கு நாம் காமத்தை அடக்கி வைப்பதுதான் காரணமாகிறது. ஹிஸ்டீரியா மற்றும் இதுபோன்ற நோய்களில் கஷ்டப்படும் பெண்களில் 99 சதவீதம் செக்ஸினால் ஏற்படும் குழப்பத்தினால்தான் கஷ்டப்

படுகின்றனர். தற்கால மனிதனிடத்தில் உள்ள பயம், சந்தேகம், மனக்கவலை, மன இறுக்கம், மனச்சுளுக்கு இவைகளுக்கு காமத்தின் அழுத்தம் அதிகமாக இருப்பதுதான் காரணம். மனிதன் தனக்குள் உறைந்து கிடக்கும் பலம் வாய்ந்த தூண்டுதலுக்கு தனது முதுகை காட்டிவிட்டான். செக்ஸைப் பற்றி புரிந்துகொள்ளாமல், பயத்தின் காரணமாக நாம் அதைப் பார்க்காமல் கண்களை மூடிக்கொண்டு விட்டோம். உண்மை யாகவே அதன் விளைவுகள் பெரும் ஆபத்தை உண்டாக்கி விட்டன.

இந்த உண்மையைக் கண்டுகொள்ள வேண்டுமெனில் மனிதனின் மனதைப் பிரதிபலிக்கும் கண்ணாடிகளை, இலக்கியங்களை நாம் நுட்பமாக ஆராய்ந்து பார்த்தால்தான் தெரியும். நிலவில் இருந்தோ அல்லது செவ்வாய் கிரகத்தில் இருந்தோ யாராவது ஒரு மனிதன் இங்கே வந்து நமது புத்தகங்களையும், கவிதைகளையும் படிக்கவோ, நமது ஓவியங்களை பார்க்கவோ நேர்ந்தால் அவன் ஆச்சரியப் படுவான். நமது கலைகளும், இலக்கியங்களும் ஏன் காமத் தையே மையங்கொண்டு உள்ளன என்று அவன் ஆச்சரியப் படுவான். மனிதனின் கவிதைகள், நாவல்கள், பத்திரிகைகள் எல்லாம் செக்ஸ் கதைகளில் ஏன் ஊறிப்போய் விட்டன? ஒவ்வொரு பத்திரிகையின் அட்டையிலும் அரை நிர்வாணப் பெண் ஒருத்தியின் படம் இருப்பது ஏன்? ஒவ்வொரு திரைப்படமும் ஏன் செக்ஸைப் பற்றியதாக இருக்கிறது? என்று அவன் கேட்பான்.

அவன் போய்விடுவான். மனிதன் செக்ஸைத் தவிர மற்றவைகளைப் பற்றி ஏன் எண்ணுவதில்லை என்று அந்த வெளிக் கிரக விருந்தாளி எண்ணி ஆச்சரியமடைவான். இதைவிட இன்னும் ஒரு மனிதனை சந்தித்து அவனிடம் அந்த அடுத்த கிரகத்தின் ஆள் பேச ஆரம்பித்தால், இன்னும் குழம்பிப் போய்விடுவான். ஏனென்றால் அவன் சந்திக்கும் அந்த மனிதன், செக்ஸைப் பற்றி தனக்கு ஒன்றுமே தெரியாத சூதுவாதற்றவன்

என்று தன்னைப் பற்றி நிரூபிப்பதற்கு மிக மிக கஷ்டப்படுவான். அவன் சந்திக்கும் அந்த மனிதன் ஆன்மாவைப் பற்றி, கடவுளைப் பற்றி, மோட்சத்தைப் பற்றி, அடக்கி வைத்தலைப் பற்றி பேசுவானேயொழிய செக்ஸைப் பற்றி ஒருவார்த்தை கூட பேசமாட்டான். மனிதன் தனக்குள் அமுத்தி உள்ள ஒரு ஆசையை திருப்திப்படுத்துவதற்கு எப்படி ஆயிரக்கணக்கான வழிகளைக் கற்று வைத்துக் கொண்டுள்ளான் என்று அறிந்து அவன் அதிர்ச்சியடைந்து போவான். அந்த ஆசையைப் பற்றி மனிதன் மூச்சுக்கூட விடாததைக் கண்டு ஆச்சரியப்படுவான்.

மரணத்தை குறியாகக் கொண்டுள்ள மதங்கள்தான் மனிதனை காமம் நிறைந்த மனதினை உடையவனாக ஆக்கி விட்டன. அது மனிதனை வேறு ஒரு கோணத்திலும் நெறி கோணச் செய்துவிட்டது. அந்த மதங்கள் பிரம்மச்சரியத்தின் தங்கமயமான சிகரத்தை அவனுக்கு காட்டுகின்றன. ஆனால் அவன் முதல் படியில் கால் வைப்பதற்கு, அடிப்படையை புரிந்து கொள்வதற்கு, அவன் செக்ஸைப் பற்றி தெரிந்து கொள்வதற்கு எந்தவிதமான வழிகாட்டுதல்களையும் கொடுப்பதில்லை.

எனவே முதலில் நாம் இந்த காமத்தைப் பற்றி புரிந்து கொள்ள வேண்டும். இந்த ஆரம்ப உந்துதலைப் பற்றி நாம் விவரமாக கிரகித்துக் கொள்ள வேண்டும். அதன் பிறகு தான் நாம் அதைத் தாண்டி அதற்கப்பால் செல்வதற்கு, அதைப் புடம் போடுவதற்கு கஷ்டப்பட்டு முயற்சி செய்தால்தான் நாம் பிரம்மச்சரியம் என்ற நிலையை அடைய முடியும். மனிதனின் இந்த அடிப்படை உயிர்ச்சத்தை அதன் எல்லா உருவங்களிலும், எல்லா முகங்களிலும் புரிந்து கொள்ளாமல் அதை வெறுமனே அடக்குவதிலும், அதை எதிர்த்தலும் ஆகிய முயற்சிகள் மனிதனை மீண்டும் பலவீனமானவனாக, ஒரு நோயாளியாக, ஒன்றுமே புரியாத பைத்தியமாக மாற்றிவிடும். ஆனால் நாம் இந்த அடிப்படையில் நோயில் கவனம் செலுத்தாமல் பிரம்மச்சரியத்தின் உயர்க்கருத்துக்களை வாய் கிழியப் பேசுகிறோம். மனிதன் இந்த அளவுக்கு நோயாளியாக,

கீழ்த்தரமானவனாக, சந்தோஷமற்றவனாக ஒருபோதும் இருந்ததில்லை. மனிதன் முற்றிலும் நெறி தவறிப்போய் விட்டான். அவன் வேரிலேயே விஷமிடப்பட்டு விட்டான்.

ஒருமுறை நான் ஒரு ஆஸ்பத்திரிக்குச் சென்றிருந்தேன். அங்கு ஒரு போர்டில் "தேள் கடித்த மனிதனுக்கு இங்கு சிகிச்சை அளிக்கப்படுகிறது" என்று எழுதியிருந்தது. அவன் ஒரே நாளில் குணப்படுத்தப்பட்டு வீட்டிற்கு அனுப்பப்பட்டான்.

மற்றொரு அறிவிப்பில் "ஒருவனை பாம்பு கடித்து விட்டது. அவனுக்கு சிகிச்சை அளித்து மூன்றே நாட்களில் அவன் சந்தோஷத்துடன் வீடு திரும்பிவிட்டான்" என்று இருந்தது.

நான்காவதாக ஒரு அறிக்கை இருந்தது. "ஒரு மனிதனை இன்னொரு மனிதன் கடித்து விட்டான். இது பல வாரங்களுக்கு முன்பு நடந்தது. அவன் சுயநினைவில்லாமல் கிடக்கிறான். அவன் பிழைப்பதற்கான சந்தர்ப்பங்கள் குறைவு" என்று அதில் எழுதியிருந்தது.

நான் ஆச்சரியமடைந்தேன். மனிதனை மனிதன் கடித்தது இந்த அளவுக்கு விஷமுள்ளதாக ஆக முடியுமா? கூர்ந்து கவனித்தால் மனிதனுள் எக்கச்சக்கமான விஷத்தன்மை தேங்கிக் கிடப்பதை நாம் காணலாம். ஒருவேளை இதற்கு அவனது முட்டாள்தனமான டாக்டர்களும் காரணமாக இருக் கலாம். ஆனால் எல்லாவற்றிற்கும் முதலான காரணம் மனிதன் அவனுக்குள் இயற்கையாக இருக்கின்ற ஒன்றை ஏற்றுக்கொள்ள அவன் மறுப்பதுதான். அவனது அடிப்படை உயிரை அவன் ஏற்றுக்கொள்ள தடுப்பதற்கும், ஒழிப்பதற்கும் வீணாக முயற்சி செய்துவிட்டோம். அவைகளை உருமாற்றம் செய்ய அவைகளை மேல்நிலைக்கு கொண்டு செல்ல எந்த விதமான முயற்சிகளும் எடுக்கப்படவில்லை. அந்த சக்தியை தவறான வழியில் நாம் கட்டுப்படுத்த நமக்கு நாமே நிர்பந்தம் செய்து கொண்டு விட்டோம். அந்த சக்தியானது எரிமலையின் உள்ளே உருகிய

பாறை லாவா (Lava) கொதித்து கொப்பளிப்பது போல் நமக்குள்ளே கொப்பளித்துக் கொண்டுள்ளது. அது எப்போதும் உள்ளுக் குள்ளேயிருந்து அழுத்திக் கொண்டே இருக்கிறது. நாம் கவனமாக இருக்கவில்லையெனில் அது எந்த நேரத்திலும் நம்மை கவிழ்த்து விடும். அது லேசாக வெளிப்பட ஆரம்பித்தாலே போதும். அதனால் என்ன நடக்கும் என்று உங்களுக்குத் தெரியுமா?

இதை ஒரு உதாரணத்தின் மூலம் நான் விளக்குகிறேன்.

ஒரு விமான விபத்து நடந்து விட்டது. நீங்கள் அருகில் இருக்கிறீர்கள். எனவே அந்த இடத்திற்கு ஓடுகிறீர்கள். அந்த் அழிவுகளுக்கு நடுவில் ஒரு பிணத்தைப் பார்த்தால் உடனே உங்கள் மனதில் எழும் கேள்வி என்ன?

இந்த ஆள் இந்துவா அல்லது முஸ்லீமா? என்றா நினைப்பீர்கள்.

கிடையாது.

இந்த ஆள் இந்தியனா அல்லது சீன தேசத்தவரா? என்றா நினைப்பீர்கள்.

அந்த பிணத்தைப் பார்த்த அடுத்த வினாடியே முதலில் நீங்கள் அது ஒரு ஆணின் உடலா அல்லது பெண்ணின் உடலா என்றுதான் பார்ப்பீர்கள்.

உங்கள் மனதில் ஏன் இந்தக் கேள்வி முதலில் எழுகிறது என்று நீங்கள் சிந்தித்ததுண்டா? இதற்கு காரணம் உங்களுக்குள் இன்னும் அடக்கி வைக்கப்பட்டுள்ள பாலுணர்வுதான். உங்க ளுக்குள் அடக்கி வைத்துள்ள காமம் தான் உங்களை ஆணுக்கும், பெண்ணுக்கும் வித்தியாசத்தை பாராட்ட வைக்கிறது. யாருடைய பெயரையாவது, முகத்தையாவது, நாட்டையாவது நீங்கள் மறந்துவிட சந்தர்ப்பம் உள்ளது. அதாவது நானே உங்களை எப்போதாவது பார்த்திருந்தால்,

உங்களது பெயரை நான் மறந்துவிடலாம். உங்களது முகத்தை, உங்களது ஜாதியை, உங்களது வயதை, உங்களது தகுதியை, உங்களைப் பற்றிய எல்லாவற்றையும் மறந்து போகலாம். ஆனால் நீங்கள் ஆணா அல்லது பெண்ணா என்று ஒருபோதும் மறக்க முடியாது. சந்தித்தவர் ஆணா அல்லது பெண்ணா என்று நீங்கள் ஒருபோதும் மறந்ததில்லை. போனமுறை ரெயிலில் டெல்லி சென்றபோது நம்மோடு பேசிக்கொண்டு வந்தவர் ஆணா, பெண்ணா என்று நீங்கள் எப்போதாவது சந்தேகப் பட்டிருக்கிறீர்களா?

ஏன்? அந்த மனிதனைப் பற்றிய மற்ற எல்லா விவரங் களையும் மறந்து போன நீங்கள் ஏன் அவர் ஆணா அல்லது பெண்ணா என்கிற அந்தக் கருத்தை மட்டும் உங்கள் ஞாபகத்தில் இருந்து அழிக்க முடியவில்லை. அதற்கு காரணம் பால் வேற்று மையை பற்றிய உணர்வு மனிதனின் மனதில், அவனது எண்ணங்களின் வழிமுறையில், பலமாக வேரூன்றி இருப்பது தான். செக்ஸ் என்பது எப்போதும் உங்களிடத்தில் உள்ளது; எப்போதும் சுறுசுறுப்பாகவும் உள்ளது.

ஆணுக்கும், பெண்ணுக்கும் இடையே இந்த இடைவெளி, இந்த இரும்புத்திரை இருக்கும்வரை இந்த சமூகமோ அல்லது இந்த பூமியோ ஆரோக்கியமானதாக இருக்கப்போவதில்லை. தனக்குள் எரிந்து கொண்டிருக்கும் இந்த தீவிரமான நெருப்பின் மீது உட்கார்ந்து அதை அமுக்கிக் கொண்டு இருக்கும்போது மனிதன் எப்படி அமைதியாக, சாந்தமாக இருக்க முடியும்? அவன் ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு கணமும் அதை அடக்குவதற்கு கஷ்டப்பட்டு முயன்றுதான் ஆகவேண்டும். அந்த நெருப்பு நம்மை வாட்டி வதைக்கிறது. அது நம்மை பொசுக்கிக் கொண்டிருக்கிறது. அப்படியிருந்தும் கூட நாம் அதைக் கவனிப்பதற்கு, அதை எதிர்கொள்வதற்கு தயாராக இல்லை.

அந்த நெருப்பு என்ன?

அது பகைவனுமல்ல, அது நண்பனுமல்ல.

அந்த நெருப்பின் இயல்புதான் என்ன?

ஒருமுறை இந்த நெருப்பைப் பற்றி நீங்கள் தெரிந்து கொண்டால் அது ஒருபோதும் உங்கள் பகைவனாக இருக்காது. அது உங்கள் நண்பனாக மாறிவிடும் என்பதை நான் உங்களுக்கு கூற விரும்புகிறேன். அந்த நெருப்பை நீங்கள் புரிந்து கொண்டால் அது உங்களை சுட்டுப் பொசுக்காது. அது உங்களது வீட்டை கதகதப்பாக்கும். அது உங்களுக்காக சமையல் செய்யும், அது உங்களுக்கு இறுதி நாள் வரை நண்பனாக இருக்கும்.

பல இலட்சம் ஆண்டுகளாக மின்சாரம், இடி என்னும் பெயரில் வானத்தில் ஏற்படுகிறது. சில வேளைகளில் அது மனிதர்களைக் கொன்றும் உள்ளது. ஆனால் அதே சக்தி நமது மின் விசிறிகளை சுற்றும் என்றோ, அல்லது நமது வீட்டின் விளக்குகளை எரிய வைக்கும் என்றோ யாரும் அப்போது நினைக்கவில்லை. இதெல்லாம் சாத்தியமாகக் கூடியது என்று அப்போது ஒருவருக்கும் தெரியாது.. ஆனால் இன்று அதே மின்சாரம் நமது நண்பனாக ஆகிவிட்டது. எப்படி? நாம் அதை நோக்கி நமது கண்களை மூடிக்கொண்டிருந்தால் நாம் அதன் இரகசியங்களை அறிந்து கொண்டிருக்க முடியாது. நாம் அதை ஒருபோதும் உபயோகப்படுத்தியிருக்க முடியாது. அது நமக்கு விரோதியாக இன்னும் இருந்திருக்கும். நாம் கண்டு பயப்படுகிற ஒரு பொருளாகவே அது இன்னும் இருந்திருக்கும். ஆனால் மனிதன் மின்சாரத்தைக் குறித்து ஒரு நட்பு போக்குக் கொண்டு விட்டான். அதை அவன் புரிந்து கொள்வதற்கு முற்பட்டான். அதை அறிந்துகொள்ள முற்பட்டான். போகப் போக பிரிக்க முடியாததொரு நட்பு இப்போது ஏற்பட்டு விட்டது. மின்சாரம் கண்டுபிடிக்கப் படவில்லையெனில் இன்று நாம் சமாளிப்பது மிகவும் கடினமாக இருந்திருக்கும்.

மனிதனுக்குள் இருக்கும் செக்ஸ், இந்த காமம், மின்சாரத்தை விட சக்தி நிறைந்தது. ஹிரோஷிமா நகரத்தில் இருந்த பல்லாயிரக்கணக்கான மக்களை மிக நுண்ணிய அணு

ஒன்று அழித்துவிட்டது. ஆனால் மனித சக்தியின் ஒரு அணுவால் ஒரு புதிய உயிரை, ஓர் புதிய மனிதனை உருவாக்க முடியும். செக்ஸ் என்பது அணுகுண்டை விட சக்தி வாய்ந்தது. இந்த உயிர்சக்தியினால் என்னென்ன செய்ய முடியும் என்றும், இந்த சக்தியை நல்ல மனித இனத்தை உருவாக்க எப்படி மாற்றியமைக்க முடியும் என்றும் நீங்கள் எப்போதாவது சிந்தித்ததுண்டா? ஒரு கரு காந்தியாக, மகாவீரராக, புத்தராக, கிறிஸ்துவாக ஆக முடியும். அதிலிருந்து ஒரு ஐன்ஸ்டீன் வர முடியும். ஒரு நியூட்டனைப் பெற முடியும். பலமடங்கு சிறிதான காம சக்தியின் அணுவினால் கோபுரம் போன்று உயர்ந்ததொரு காந்தியை வெளிக்கொணர முடியும்.

ஆனால், நாம் அதைப் பற்றி புரிந்து கொள்வதற்குக் கூட மனதை அதன்பக்கம் திருப்புவதில்லை. அதைப்பற்றி பொது மேடைகளில் பேசுவதற்குக்கூட நாம் நிறைய தைரியத்தை வரவழைக்க வேண்டியுள்ளது. இந்த உலகம் முழுவதும் எந்த சக்தியில் இருந்து தோன்றியுள்ளதோ, அந்த அரிய சக்தியைப் பற்றி நாம் தெரிந்து கொள்ளக்கூடத் தயாராக இல்லாத அளவிற்கு நம்மை, தொற்று நோயைக் கண்டு பயப்படுவதைப் போல பயம் கொள்ளச் செய்வது எந்த வகையில் சேர்ந்தது? ஏன் இந்த பயம்? செக்ஸ் ஏன் நம்மை இந்த அளவுக்கு அலற வைக்கிறது?

பம்பாயில், போன கூட்டத்தில் நான் செக்ஸ் பற்றி பேசியதைக் கேட்டு மக்கள் அதிர்ச்சி அடைந்தனர். இந்த மாதிரி நான் பேசக்கூடாது என்றும், இந்த விஷயத்தைப் பற்றி நான் பேசவேக் கூடாது என்றும், கோபத்துடன் எழுதிய பல கடிதங்கள் எனக்கு வந்தன. ஏன் ஒருவர் இந்த விஷயத்தை பற்றி பேசக்கூடாது என்று எனக்கு ஆச்சரியமாக உள்ளது? செக்ஸ் என்னும் தூண்டுதல் நம்முள் உறைந்து கிடக்கும் போது ஏன் நாம் அதைப் பற்றி பேசக் கூடாது? அதன் நடவடிக்கைகளை நாம் புரிந்து கொள்ளாமல், அதை அலசி ஆராயாமல் எப்படி அதை நாம் உயர்ந்த நிலைக்கு எடுத்துச் செல்ல முடியும்? அதைப் பற்றி தெரிந்து கொள்வதன் மூலம் அதை நாம் மாற்றியமைக்க முடியும்.

அதை நாம் வெற்றிக்கொள்ள முடியும். அதை நாம் புடம்போட முடியும். அவ்வாறு இல்லையெனில் நாம் இறந்தாலும் நம்மை இந்த செக்ஸின் பிடியிலிருந்து விடுவித்துக் கொள்ள நாம் த்குதியில்லாதவர்களாக ஆகிவிடுவோம்.

எனது கருத்து என்னவெனில், யார் இப்படி செக்ஸ் பற்றி பேசுவதற்கு தடை விதிக்கிறார்களோ அதே ஆட்கள்தான் மனித வர்க்கத்தை செக்ஸ் என்னும் படுபாதாளத்தில் தள்ளி விட்டவர்கள். செக்ஸைக் கண்டு பயந்து, அதனால் செக்ஸ் என்றால் தனக்கு ஒன்றும் தெரியாதென்று தங்களை தாங்களே சமாதானப்படுத்திக் கொள்பவர்களெல்லோரும் பைத்தியக் காரர்கள். இந்த உலகத்தையே ஒரு மாபெரும் பைத்தியக்கார நிலையமாக ஆக்குவதற்கு அவர்கள் கூடி சதி செய்கின்றனர்.

மதம் என்பது மனித சக்தியை மாற்றியமைப்பதில் கவனம் செலுத்துவது. மதமானது மனிதனை ஒருங்கிணைந் தவனாக, அதாவது அவனது பரிசுத்தமான ஆசைகள், அடிப்படைத் தூண்டுதல்கள் ஆகிய இரண்டையும் ஒருங்கி ணைப்பதுதான் மதத்தின் குறிக்கோள். மனிதனை கீழ்நிலை யிலிருந்து மேல் நிலைக்கு, இருளில் இருந்து வெளிச்சத்திற்கு, பொய்யிலிருந்து உண்மைக்கு, நிலையற்றதில் இருந்து என்றும் நிலையானவற்றிற்கு கூட்டிச் செல்வதற்கு மதம்தான் வழிகாட்ட வேண்டும் என்பது உண்மைதான். ஆனால் எங்கேயாவது செல்ல வேண்டுமெனில் முதலில் ஒருவன் எங்கிருந்து ஆரம்பிக்க வேண்டும் என்று அறிந்து கொள்ளவேண்டும். நாம் எங்கு நிற்கிறோமோ அங்கிருந்துதான் ஆரம்பிக்க வேண்டும் என்று அறிந்து கொள்ளவேண்டும். முதல் கட்டமாக இதை நாம் அறிந்து கொள்வது தட்ட முடியாதது. நாம் போய்ச் சேர வேண்டிய இடத்தைவிட இதுதான் முதலில் முக்கிய உண்மை நிலை. அதுதான் சத்தியம். செக்ஸ்தான் ஆரம்ப இடம். ஆனால் கடவுள்? கடவுள் இங்கிருந்து வெகுதொலைவில் இருக்கிறார். நாம் நமது பிரயாணத்தை ஆரம்பிக்க வேண்டிய இடத்தைப்

பற்றி புரிந்து கொண்டால்தான் நாம் கடவுள் என்னும் சத்தியத்தை சென்றடைய முடியும். இல்லையெனில் நம்மால் ஓர் அங்குலம் கூட நகர முடியாது. நாம் வழி தவறிவிடுவோம். குடை ராட்டினம் போல் எங்குமே போய்ச் சேர மாட்டோம்.

நான் முதல் கூட்டத்தில் உங்களிடம் பேசியபோது நீங்கள் வாழ்க்கையின் அடிப்படை உண்மைகளைச் சந்திக்க தயாராக இல்லை என்பதை என்னால் உணர்ந்து கொள்ள முடிந்தது. அதை விட்டுவிட்டு நாம் என்னதான் செய்ய முடியும்? நாம் என்ன சாதிக்க முடியும். அப்படியானால் கடவுளைப் பற்றியும், ஆன்மாவைப் பற்றியும் நாம் போடும் கூச்சல்கள் எல்லாம் ஒன்றும் அர்த்தமில்லாதவை. அவைகளெல்லாம் வெறும் நம்பிக்கைகள்தான். அவைகளெல்லாம் வெறும் பொய்ப் பேச்சுக்கள்தான்.

எது ஒன்றைப் பற்றியும் நாம் உண்மையான அறிவை பெற்றுக்கொண்டால் தான் அதற்கு மேல் நாம் எழுந்து நிற்பதற்கு முடியும். உண்மையில் அறிவுதான் நாம் தாண்டிச்செல்ல, கடந்து செல்ல உதவும். முதலில் காமத்தில்தான் மனிதன் பிறந்துள்ளான் என்கிற அந்த ஒரு உண்மையை முழுவதும் கிரகித்துக் கொள்ள வேண்டும். அவன் காமச் செயல்களில் ஈடுபடுவதன் மூலம்தான் அவனது முழு உயிரும் இருக்கிறது. மனிதன் காம சக்தியினால் நிரம்பியுள்ளான். உயிர்ச்சக்தியே காமச் சக்தியாகத்தான் உள்ளது.

இந்தக் காமச்சக்தி என்பது என்ன? இது நமது வாழ்வில் நமக்கு அதிகம் தொந்தரவு கொடுக்கும் சக்தியாக ஏன் உள்ளது? நமது உயிர் முழுவதும் இது பரவி இருப்பது ஏன்? நாம் சாகும்வரை அதைச் சுற்றியே நமது வாழ்வை ஓட்டுவது ஏன்? இந்த தூண்டுதலின் மூலக்காரணம் என்ன?

துறவிகளும், அறிஞர்களும் பல்லாயிரக்கணக்கான வருடங்களாக காமத்தைப் பற்றி தரக்குறைவாக எவ்வளவோ பேசிவிட்டனர். ஆனால் மனிதன் இன்னும் திருப்தியடைய வில்லை. நாம் செக்ஸை புறக்கணிக்க வேண்டும், அதைப்

பற்றிய எல்லா எண்ணங்களையும் நாம் அழிக்க வேண்டும். இந்த மாயையில் இருந்து. இந்த கற்பனை உலகில் இருந்து நாம் விடுபடுவதற்கு நாம் காம இச்சைகளை அழிக்க வேண்டும் என்று காலங்காலமாக அவர்கள் போதித்து வருகின்றனர். என்றாலும் மனிதனால் தனது விலங்குகளை தகர்த்தெறிய முடியவில்லை. இதனால் நீங்கள் செக்ஸில் இருந்து விடுபட முடியாது. இந்த அணுகுமுறையே தவறானது.

நான் சந்திக்கும் விபச்சாரிகள் எல்லாம் ஒருபோதும் செக்ஸ் பற்றி பேசுவதில்லை. அவர்கள் ஆன்மாவைப் பற்றியும், கடவுள் பற்றியும்தான் கேட்கிறார்கள். அதேபோல் நான் அநேக துறவிகளையும், சந்நியாசிகளையும் சந்திக்கிறேன். அவர்கள் அனைவரும் நாங்கள் தனியாக இருக்கும்போது செக்ஸைத் தவிர வேறு எதையும் கேட்பதில்லை. செக்ஸிற்கு எதிராகப் பேசுகின்ற சந்நியாசிகள் எல்லோரும் செக்ஸினால் பீடிக்கப்பட்டு இருப்பதை அறிந்து நான் ஆச்சரியமடைந்தேன். அவர்கள் செக்ஸில் ஆர்வமாக உள்ளனர். அதனால் கலக்கம் அடைந்துள்ளனர். அதைப் பற்றி மனதில் எப்போதும் சிந்திக்கின்றனர். அதோடு அவர்கள் மதத்தைப் பற்றியும். மனிதனிடம் உள்ள மிருக இயல்புகளைப் பற்றியும் உபதேசிக்கின்றனர். ஆனால் செக்ஸ் என்பது மிகவும் இயற்கையானது.

ஆனால் நாம் இந்தப் பிரச்சனையைப் பற்றி புரிந்து கொள்வதற்கு விரும்பவும். முயற்சிக்கவும் இல்லை. செக்ஸ். என்றால் நாம் ஏன் கவர்ந்திழுக்கப்படுகிறோம் என்று நாம் ஒருபோதும் பகுத்தறிவில் ஆய்ந்தது இல்லை.

யார் உங்களுக்கு செக்ஸை கற்றுத் தருகிறார்கள்?

அதை கற்று கொடுப்பதற்கு இந்த முழு உலகமும் எதிர்ப்பு தெரிவிக்கிறது. குழந்தைகள் அதைப் பற்றி அறிந்துகொள்ள அனுமதிக்கப்படக்கூடாது என்று பெற்றோர்கள் கருதுகின்றனர். ஆசிரியர்களும் அவர்களோடு ஒத்துப் போகிறார்கள். புனித நூல்கள் எல்லாம் அதையேத்தான்

சொல்கின்றன. செக்ஸ் பற்றி கற்பிப்பதற்கு ஒரு பள்ளியோ அல்லது பல்கலைக்கழகமோ இல்லை. செக்ஸ் பற்றிய அறிவை எல்லா கல்வி நிலையங்களும் தடை செய்துள்ளன. ஆனால் வாலிப பருவத்தில் ஒவ்வொரு இளைஞனும் அவனது முழு உயிரும், பிராணன் முழுவதும் செக்ஸ் பற்றி தெரிந்து கொள்வதில் மிகவும் ஆவலுடன் இருப்பதை தனக்குத்தானே கண்டு கொள்கிறான். அப்போது இந்த பன்னெடுங்காலமான முன்னெச்சரிக்கைகள் யாவும் தோற்றுப்போகின்றன. காமம் வெற்றி பெறுகிறது. இது எப்படி நடக்கிறது. அன்பும், சத்தியமும்தான் போதிக்கப்படுகின்றன. ஆனால் உபதேசங் களால் தாக்குப்பிடிக்க முடியவில்லை.

செக்ஸ் என்பது நமது உயிரின் மையத்தில் பலமாக வேர் கொண்டுவிட்டது. ஆனால் செக்ஸ் எங்கே தனது நங்கூரத்தை பாய்ச்சியுள்ளது? இந்த இயற்கையான ஈர்ப்பு சக்தியின் மையம், பலம் வாய்ந்ததும், ஆழமானதுமான இந்த ஈர்ப்பு சக்தியின் மையம் எங்கே உள்ளது? அங்கு தான் மர்மமே உள்ளது. எனவே அந்த மர்மத்தை முதலில் புரிந்து கொள்ளுதல் வேண்டும். அதன் பிறகுதான் நாம் அதை தாண்டிச்செல்ல முடியும்.

அடிப்படையில் எது நம்மை செக்ஸை நோக்கி கவர்ந்திழுக்கிறது என்று உணருகிறோமோ, அது உண்மையில் செக்ஸிற்கான கவர்ச்சி அல்ல.

பெண்ணுடன் கூடி மகிழ்ந்து உச்சக்கட்ட பரவச நிலையை அடைந்த பின் ஒவ்வொரு முறையும் ஆண் எதையோ இழந்தவனாக, வெறுமையானவனாக, சோர்வு கொள்கிறான். அவனது உள்ளத்தில் எரிச்சலும், கஷ்டமும் கொண்டு அதற்காக வருந்துகிறான். இனிமேல் இந்தப் பழக்கத்தை விட்டுவிட வேண்டும் என்று எண்ணுகிறான். எனவே இது போன்ற மனநிலைக்கு அடிப்படை மூலக்காரணம் என்ன? அவனது ஆசை வெறும் உடலளவில் திருப்தியடையாமல் வேறு ஏதோ ஒன்றை பற்றியதாக உள்ளதுதான்.

உடலுறவுச் செயல் பூர்த்தியாகும் போது அடைகின்ற உயிரின் ஆழத்தை மனிதன் சாதாரணமாக அடைய முடியாது. சாதாரண வாழ்க்கையில், தினசரி நடவடிக்கைகளில் மனிதன் பல்வேறுபட்ட அனுபவங்களை அடைகிறான். அவன் கடைக்குச் செல்கிறான், வியாபாரம் செய்கிறான். தனது சம்பாத்தியத்தைத் தேடுகிறான். ஆனால் உடலுறவுதான் அவனுக்கு ஆழ்ந்த அனுபவத்தை வெளிப்படுத்துகிறது. ஆனால் இந்த அனுபவம்தான் மிகவும் ஆழ்ந்த மத பரிமாணங் கள் கொண்டுள்ளது. அந்த இடத்தில் மனிதன் தனக்கப்பால் செல்கிறான். அங்கு அவன் தன்னையே தாண்டிச் செல்கிறான்.

அந்த ஆழ்ந்த நிலையில் இரண்டு விஷயங்கள் நடக்கின்றன. புணர்ச்சி கொள்ளும்போது முதலில் "நான்" என்னும் அகந்தை அழிகிறது. ஆணவமற்றத் தன்மை உருவாக் கப்படுகிறது. அந்த கொஞ்ச நேரத்திற்கு அங்கு "நான்" என்பது இருப்பதில்லை. அந்த கொஞ்ச நேரத்திற்கு ஒருவனுக்கு தன்னைப் பற்றிய ஞாபகம் இருப்பதில்லை. அதே போலத்தான் மத அனுபவத்திலும் அந்த "நான்" என்பது கரைந்து போவதை நீங்கள் அறிவீர்களா? மத அனுபவத்தில் அந்த ஆணவம் ஒன்றுமில்லாமல் போவதை நீங்கள் அறிவீர்களா? உடலுறவுச் செய்கையின் போது "நான்" என்பது வெளிறிப்போகிறது. உடலுறவின் உச்சக்கட்ட பரவசநிலை தன்னையே மறந்துவிடும் நிலை.

செக்ஸ் அனுபவத்தின் இரண்டாவது விஷயம் அந்த கொஞ்ச நேரத்திற்கு நேரம் போவது தெரிவதில்லை. காலமில் லாமை உருவாக்கப்படுகிறது. ஞானவிழிப்பு பற்றி இயேசு கிறிஸ்து கூறியதைப் போல், "அங்கு காலம் என்பது இருக்காது". அந்தப் ஞானவிழிப்பு நிலையில் காலத்தைப் பற்றிய நினைவு இருக்காது. அங்கு கடந்த காலமும் இருக்காது, எதிர் காலமும் இருக்காது. அப்போதிருக்கும் அந்தக் கணநேரம்தான் தெரியும். நிகழ்காலம் மட்டும் இருக்கும். மனிதனின் செக்ஸ்

அனுபவத்தின் போது இதுதான் இரண்டாவதாக நடக்கிறது. கடந்தகாலமோ, எதிர்காலமோ அங்கு இருப்பதில்லை. ஒரு கணப் பொழுதுக்கு காலமே மறைந்து விடுகிறது. காரணமாகும். காம உணர்ச்சி என்பது ஆண் பெண்ணின் உடலுக்கோ அல்லது பெண் ஆணின் உடலுக்கோ ஏங்கித் தவிப்பது அல்ல. உண்மையில் காம உணர்ச்சியானது வேறு ஏதோ ஒன்றிற்காக ஆணவமற்ற நிலைக்காக, காலமில்லா நிலைக்குத்தான்.

உடலுறவின் உச்சக்கட்ட பரவசநிலைக்காக ஒருசில நொடிகளே நிலைத்து நிற்கிறது. ஆனால் அந்த மிகச்சிறு பொழுதிற்காக மனிதன் தனது சக்தியின், உயிராற்றலின் கணிசமான அளவை இழக்கிறான். அதன்பின் அதற்காக மனம் வருந்துகிறான். பிராணிகளில் சில இனங்களில் ஒரு தடவை உடலுறவு கொண்டபின் சில ஆண் இனங்கள் செத்துப் போகின்றன. ஆப்பிரிக்காவில் உள்ள ஒரு குறிப்பிட்ட இனம் ஒரேயொரு முறைதான் உடலுறவு கொள்ளும். அதன் உயிர்ச் சக்தி மேலெழுந்து அந்த ஒரு உடலுறவுச் செயலுடனேயே முடிந்தும் போகிறது. உடலுறவினால் தனது சக்தி குறைகிறது. பலம் குறைகிறது. உயிர்ச்சக்தி குறைந்து விரைவில் மரணத்தைக் கொண்டுவருகிறது என்பது மனிதன் உணராமல் இல்லை. ஒவ்வொரு தடவை அனுபவித்த பின்னர் அவன் அந்த அனுபவத்திற்காக வருந்துகிறான். ஆனால் விரைவிலேயே மீண்டும் காம உணர்ச்சி கொள்கிறான். எனவே நமது கண்ணுக்குத் தெரிவதை விட நிச்சயமாக மனிதனின் இந்த நடவடிக்கைக்கு வேறு ஏதோ ஒரு ஆழ்ந்த அர்த்தம் இருந்தாக வேண்டும். நமது வழக்கமான உடல் அளவிலான புணர்ச்சி அனுபவத்தில் நமது கண்ணுக்குப் புலப்படாத மட்டத்தில் ஏதோ ஒன்று இருந்தாக வேண்டும். இந்த செக்ஸ் விழைவுக்குப் பின்னால் அங்கு ஓர் ஆன்மீகவய அனுபவம் உள்ளது. நம்மால் இதை உணர்ந்துகொள்ள முடிந்தால் நம்மால் செக்ஸைக் கடந்து செல்ல முடியும். அப்படி முடியாவிட்டால் நீங்கள் செக்ஸில் உழன்று செக்ஸிலேயே சாக வேண்டியது தான்.

இரவின் இருளில்தான் மின்னல் மின்னுகிறது. ஆனால் இருள் என்பது மின்னலின் ஒரு பகுதி அல்ல. இரவில் மட்டும்தான், இருளில் மட்டும்தான் மின்னல் தெரிகிறது என்பதுதான் இரண்டிற்கும் உள்ள ஒரேத் தொடர்பு. அதே போன்றுதான் காமத்திலும் உடலுறவின் மூலம்தான் அந்த ஒளி மின்னுகிறது. அந்த தெளிவான உணர்வு ஏற்படுகிறது. ஆனால் அந்த உணர்வு ஏற்படுவது உடலுறவில் இருந்து அல்ல. அதோடு அது சம்பந்தமுடையதாக இருந்தாலும் அது அதன்மூலம் நமக்கு கிடைக்கின்ற ஒரு உபபொருள்தான். உச்சக்கட்ட பரவச நிலையின் போது மின்னுகின்ற அந்த ஒளி காமத்திற்கு அப்பாற் பட்டது. அது அதைக் கடந்துள்ள ஒன்றிலிருந்து வருவது. எனவே இப்படிக் காமத்திற்கு மேலெழுந்த ஒன்றிலிருந்துதான் இந்த அனுபவம் நமக்கு வருகிறது என்பதை நீங்கள் கிரகித்துக் கொண்டால்தான் நீங்கள் காமத்தின் மேல் எழுந்து செல்ல முடியும். இல்லையெனில் ஒருபோதும் நம்மால் முடியாது.

செக்ஸை எதிர்ப்பவர்கள் எல்லோரும் இக்கருத்துக்களை அதன் முறையான கண்ணோட்டத்தில் ஒருபோதும் பாராட்டு வதில்லை. தீர்க்க முடியாத இந்த காமப்பசிக்கான காரணத்தை, காமத்திற்கான இந்த ஏக்கத்தின் காரணத்தை அவர்கள் ஒரு போதும் அலசி ஆராய்வதில்லை. இப்படி செக்ஸிற்காக அடிக்கடி பலமாக நாம் கவர்ந்திழுக்கப்படுவது சமாதி நிலையை அந்த கண நேரத்தில் நாம் தெளிவாக அறிந்து கொள்வதற் காகத்தான் என்று வலியுறுத்திக் கூற விரும்புகிறேன்.

செக்ஸில் ஈடுபடாமலேயே அந்த சமாதி நிலையை அடைவதற்கு நீங்கள் கற்றுக்கொள்ள முடிந்தால் நீங்கள் உங்களை செக்ஸிலிருந்து விடுவித்துக் கொள்ள முடியும். ஆயிரம் ரூபாய் மதிப்புள்ள ஒரு பொருளை வாங்க விரும்பும் ஒருவனிடம் அந்தப் பொருள் இலவசமாக கிடைக்குமிடம் காண்பிக்கப்படுமானால் அவன் அதை விட்டு விட்டு மீண்டும் சந்தைக்கு போய் அதிக விலை கொடுத்து அந்தப் பொருளை

வாங்குவானேயானால், அவனுக்கு மீட்பு இல்லை என்றுதான் அர்த்தம். காமத்தில், உடலுறவில் அடைகின்ற அதேக் களிப்பை வேறு வழிகளில் இன்னும் அதிக அளவில் எப்படிப் பெறுவது என்று நாம் ஒரு மனிதனுக்கு காட்டி விட்டால், அவனது மனது தானாகவே செக்ஸை நோக்கி ஓடுவதிலிருந்து நின்றுவிடும். அவனது மனம் எதிர்திசையில் ஓட ஆரம்பித்துவிடும்.

மனிதன் சமாதி மனமின்மை (no-mind) அல்லது அதிஉன்னத மெய்யுணர்வு (Super Consciousness) நிலையின் முதல் அனுபவத்தை செக்ஸில் தான் தெளிவாக உணர்ந்தான். ஆனால் காமம் என்பது விலையுயர்ந்தது. ரொம்பவும் விலையுயர்ந்தது. ஆனால் அந்த இன்பம் நிலைத்து நிற்பதோ கொஞ்சக் கணநேரம் மட்டுமே. அந்த கொஞ்ச நேர உச்ச பரவச நிலைக்குப் பின் நாம் நமது பழைய நிலைக்கு மீண்டும் வந்து விடுகிறோம். ஒரு வினாடி நேரத்திற்கு வேறு ஏதோ ஒரு உலகத்தை நாம் அடைகிறோம். ஒரு வினாடி நேரத்திற்கு நாம் அளவு கடந்த திருப்தியின் உச்சியை நோக்கிச் செல்கிறோம். ஆனால் உடனேயே நாம் மீண்டும் புறப்பட்ட இடத்தில் விழுந்து விடுகிறோம். ஒரு அலையானது ஆகாயத்தை தொடுவதற்கு முயற்சிக்கிறது. ஆனால் அது குறிப்பிடத்தக்க தூரம் எழுவ தற்குள் மீண்டும் கீழே விழ ஆரம்பித்துவிடுகிறது. நாமும் அதேப் போன்றுதான். அந்தப் பேரின்பத்திற்காக, அந்த சந்தோ ஷத்திற்காக, அந்த தெளிவான உணர்விற்காக நாம் சக்தியை அப்போதைக்கப்போது சேகரிக்கிறோம். பின் மீண்டும் ஏற ஆரம்பிக்கிறோம். நாம் கிட்டதட்ட அந்த கண்ணுக்கு புலப்படாத மட்டத்தை தொடுகிறோம், அந்த உயர்ந்த இடத்தை தொடுகிறோம். ஆனால் கணிசமான அளவு சக்தியையும், பலத்தையும் இழந்துவிட்டு மீண்டும் நமது பழைய நிலைக்கு விழுந்து விடுகிறோம்.

மனிதனின் மனம் செக்ஸ் என்னும் இந்த ஆற்றில் மூழ்கியிருக்கும் வரை அவன் திரும்பத் திரும்ப எழுந்து மீண்டும் எழுந்து கொண்டுதான் இருப்பான். வாழ்க்கையானது

ஆணவமற்ற நிலையை நோக்கி, காலமற்ற நிலையை நோக்கி நாம் அறிந்தோ அறியாமலோ தொடர்ந்து நம்மைத்தள்ளிக் கொண்டிருக்கிறது. நமது ஆன்மாவின் தீவிர ஆசை அதைத் தெரிந்து கொள்வதுதான், உண்மையை, அசலானதை, எப்போதும் இருப்பதை, காலமற்ற அந்த மூலத்தை அறிந்து கொள்வதுதான். காலத்திற்கு அப்பாற்பட்ட அந்த ஒன்றோடு இணைவதும், சுத்தமாக ஆணவமற்ற நிலையை அடைவதும்தான் அதன் ஆசை. ஆன்மாவின் அறியாத இந்த அக ஆசையை நிறை வேற்றுவதற் காகத்தான் இந்த உலகம் காலம் என்னும் அச்சில் சுழன்று கொண்டிருக்கிறது.

ஆனால் நம்மிடம் உள்ள இந்த இயற்கை இயல்பை மறுத்து விடுவோமேயானால் நமக்குள்ள எல்லாவற்றையும் சூழ்ந்து கொண்டிருக்கும் இந்தக் கருத்தை மறுப்போமேயானால் அந்தத் தெள்ளிய உணர்வுடன் சுமூகமான உறவை புரிந்து கொள்ளவோ அல்லது அபிவிருத்தி செய்யவோ நம்மால் எப்படி முடியும்? நாம் எவ்வளவு வேகமாக செக்ஸில் ஈடுபடுகிறோமோ, அவ்வளவு வேகமாக அதை எதிர்க்கும் போது கண்டிப்பாக செக்ஸ்தான் நமது சுய நினைவின் மையமாக ஆகிவிடும். நாம் அதிலிருந்து விடுபட முடியாது. நாம் அதோடு பிணைக்கப்பட்டு விடுவோம். "எதிர் விளைவு விதி" தனது நாடகத்தை காண்பிக்க ஆரம்பித்து விடும். நாம் அதற்கு இரையாகிவிடுவோம். நாம் செக்ஸிலிருந்து விலகி ஓடுவதற்கு முயற்சிக்கிறோம். ஆனால் நாம் எவ்வளவுக்கெவ்வளவு அதிலிருந்து விடுபட எண்ணு கிறோமோ அவ்வளவுக்கவ்வளவு நாம் அதில் மாட்டிக் கொள்கிறோம்.

ஒருவனுக்கு உடல்நலம் சரியில்லை. அவனுக்கு பசி எடுப்பதுதான்அவனது சுகவீனம். உண்மையில் அவனுக்கு எந்தவிதமான நோயும் இல்லை. வாழ்வை துறப்பதுதான் விடுதலை பெறுவதற்கான வழி, ஆச்சாரம்; என்றும் சாப்பிடுவது பாவச் செயல் என்றும் அவன் கற்றிருந்தான். மேலும் உண்ப தென்பது வன்முறையைப் போன்றது. எனவே அது அஹிம்சை

கொள்கைக்கு எதிரானது என்றும் அவனுக்கு சொல்லப் பட்டிருந்தது.

எனவே சாப்பிடுவதை பாவச் செயல் என்று அவன் நினைத்து நினைத்து அவன் தனது பசியை அடக்கி வந்தான். அதனால் இப்போது அவனது பசியும் அதிக பலத்தை சேகரித் துக்கொண்டது. அவன் மூன்று நான்கு நாட்கள் தொடர்ந்து சாப்பிடமால் உபவாசம் இருப்பான். அதன் பின் அடுத்தநாள் கையில் எது கிடைத்தாலும் ஒரு சாப்பாட்டு ராமனைப் போல் சாப்பிடுவான்., சாப்பிட்ட பிறகு, தனது சபதத்தை மீறி விட்ட தற்காக அவன் வருந்துவான். அதோடுக் கூட அவன் அவளக்கு அதிகமாக தின்றது அதன் வேலையைச் செய்ய வேறு ஆரம்பித் துவிடும். எனவே மீண்டும் அதைச் சரிகட்ட அவன் அடுத்து கொஞ்ச காலத்திற்கு விரதம் இருப்பான். அதன்பின் மீண்டும் அவன் சாப்பிடுவான்.

இறுதியாக தன்னால் வீட்டில் இருக்கும்வரை இந்த தர்மத்தின் பாதையில் செல்ல முடியாது என்று தீர்மானித்து இந்த உலகத்தை துறந்து காட்டிற்குச் சென்று அங்கு ஒரு குன்றில் ஏறி அதில் உள்ள ஒரு குகையில் தனியாக வாழ ஆரம்பித்தான். வீட்டில் எல்லோரும் கவலை கொண்டனர். அவன் மனைவி தனது கணவன் தனிமை வாழ்க்கையில் அதிகமாக உண்ணும் நோயில் இருந்து விடுபட்டிருப்பார் என்று எண்ணிக்கொண்டு அவனுக்கு மலர்ச்செண்டு ஒன்றை அனுப்பினாள். அவன் விரைவில் குணமடைந்து சீக்கிரம் திரும்பிவர அவள் வாழ்த்தி யிருந்தாள்.

அதற்கு அந்தமனிதன், "நீ மலர்களை அனுப்பியதற்கு நன்றி, அவைகள் மிகவும் ருசியாக இருந்தன" என்று தனது மனைவிக்கு சீட்டு அனுப்பினான், அவன் அந்தப் பூக்களை யெல்லாம் தின்றுவிட்டான். உணவிற்கு பதிலாக பூக்களைத் தின்னும் ஒரு மனிதனை நாம் கற்பனை பண்ணிப் பார்க்க முடியாது. ஏனெனில் நாமும் அந்த மனிதன் இருந்ததைப்

போன்று விரதத்தை கடைபிடிப்பதில்லை. சாப்பாட்டில் கவனம் செலுத்துபவர்கள் ஒருவேளை அவனது தர்மசங்கடத்தை புரிந்து கொள்வார்கள். கிட்டத்தட்ட அதே போன்றுதான் செக்ஸைக் குறித்தும் நாம் ஒவ்வொருவரும் நடந்து வருகிறோம்.

மனிதன் காமத்திற்கு எதிராக ஒரு போரையே உருவாக்கியுள்ளான். அந்தப் போரின் விளைவுகளை நாம் சரியாக கணிப்பது கடினம். ஓரினச் சேர்க்கை என்பது மனிதனின் நாகரீகமடைந்த இந்த உலகத்தை தவிர வேறு எங்காவது உண்டா? பின்தங்கிய பகுதியில் வாழும் பழங்குடி மக்களி டையே ஒரு ஆண் மற்றொரு ஆணிடம் உடலுறவு கொள்வது என்பதைக் கற்பனைக் கூட பண்ணிப் பார்க்க முடியாது. நான் பழங்குடி மக்களிடம் தங்கியுள்ளேன். அவர்களிடம் நாகரீக மடைந்த மக்களின் இந்தப் பழக்கத்தைப் பற்றி கூறியபோது அவர்கள் அதிர்ச்சியடைந்தனர். அவர்களால் இதை நம்ப முடியவில்லை. ஆனால் மேலை நாடுகளில் ஓரினச் சேர்க் கைக்காக சங்கங்கள் உள்ளன. பெரும்பாலான மக்கள் ஓரினச் சேர்க்கை பழக்கமுள்ளவர்களாக இருக்கும்போது அதைத் தடுப்பது ஜனநாயகமற்றது என்று அந்த சங்கங்கள் வாதாடு கின்றன. ஓரினச் சேர்க்கையை ஒழிப்பதற்கு சட்டம் இயற்றுவது மனிதனின் அடிப்படை உரிமையையே எதிர்ப்பதாகும் என்று அவைகள் கூறுகின்றன. அது சிறுபான்மையினர் மீது பெரும் பான்மையினர் ஆதிக்கம் செலுத்துவது போலாகிறது என்கின் றனர். தன் இனச் சேர்க்கைக்கான இந்த மனோபலம் பிறப்பதற்கு செக்ஸோடு நாம் கொண்டுள்ள போர்தான் காரணம்.

அதே போன்று நாகரீகம் எந்த அளவுக்கு முன்னேறி யுள்ளதோ அதே அளவுக்கு விபச்சாரமும் அதிகமாகி விட்டது. முதலில் இந்த விபச்சாரத் தொழில் ஏன் ஏற்படுகிறது என்று யாராவது சிந்தித்துப் பார்த்ததுண்டா? மலைகளில் வாழும் பழங்குடி மக்களிடம் ஒரு விபச்சாரியையாவது காட்ட முடியுமா? முடியாது. அங்கு வாழும் அந்த மக்களால், தனது கற்பை

விற்கின்ற பெண்கள் இருக்கிறார்கள் என்றோ, காசுக்காக உடலுறவிற்கு செல்லும் பெண்கள் இருக்கிறார்கள் என்றோ, கற்பனை பண்ணிக்கூட பார்க்க முடியாது. ஆனால் மனிதனின் நாகரீக முன்னேற்றத்தினால் காமத்தின் இந்த நெரிசல்களும் ஏற்பட்டு விட்டன. இது மலர்களைத் தின்னும் அந்தச் செயலுக்கு ஒப்பானது. மேலும் செக்ஸினால் ஏற்படும் ஏனைய நெறி கோணல்களை நாம் முற்றிலும் கணக்கில் எடுத்துப் பார்த்தால், செக்ஸின் அசிங்கமான வெளிப்பாடுகளின் முழு வரிசையையும் பரிசோதித்துப் பார்த்தால் நாம் இன்னும் அதிகமாக அதிர்ச்சிதான் அடைவோம்.

மனிதனுக்கு என்ன நேர்ந்துவிட்டது. இந்த அசிங்கங்களுக்கும், விபச்சாரத்திற்கும் யார் பொறுப்பாளிகள்? செக்ஸைப் பற்றி மனிதன் புரிந்து கொள்வதற்கு பதிலாக அதை அடக்கி வைக்க வேண்டும் என்று கற்பித்தவர்கள் தான் இதற்குப் பொறுப்பாளிகள். அப்படி அடக்கி வைத்ததினால் தான் மனிதனின் காம சக்தியானது தவறான வழிகளின் வழியாக ஒழுகிக் கொண்டிருக்கிறது. மனித சமுதாயம் முழுவதும் நோயுற்று, கீழ்த்தரமாக உள்ளது. இந்த புற்று நோயால் பீடிக்கப் பட்டுள்ள சமுதாயம் மாற்றியமைக்கப்பட வேண்டுமெனில், காம சக்தியானது தெய்வீகமானது, காமத்தை நோக்கி கவர்ந்திழுக்கப் படுவது இயற்கையானதே என்று ஏற்றுக்கொள்ள வேண்டியது அவசியம்.

செக்ஸை நோக்கி ஏன் அவ்வளவு பலமாக நாம் இழுக்கப்படுகிறோம்? நிச்சயமாக அது பலம் வாய்ந்தது. காமத்தின் அடிப்படை மட்டங்களை நாம் கிரகித்துக் கொண்டால் நாம் மனிதனை காமத்தினை காமத்தில் இருந்து வெளியே தூக்க முடியும். அதன்பின்பு மட்டுமே "காம" உலகில் இருந்து "ராம" உலகம் வெளிப்படும். அதன் பின்புதான் காமம் நிறைந்த இந்த உலகில் இருந்து கருணை வெளிப்படும்.

நண்பர்களின் கூட்டத்துடன் நான் கஜுராஹோவில்

உள்ள பிரசித்த பெற்ற கோவிலைக் காணச் சென்றிருந்தேன். அந்தக் கோவிலின் வெளிச்சுவர், கோவிலின் சுற்றுச் சுவர் முழுவதும் உடலுறவுச் செயல்களின் காட்சிகளால் அலங்கரிக்கப் பட்டு இருந்தன. அநேக காட்சிகளின் சிற்பங்கள் இருந்தன. எல்லாம் உடலுறவின் பல்வேறுபட்ட காட்சிகள்தான். என்னுடைய நண்பர்கள், கோவிலில் ஏன் இந்த விதமான சிற்பங்கள் அலங்காரத்திற்காக வைக்கப்பட்டுள்ளன? என்று கேட்டனர்.

அந்தக் கோவிலை நிர்மாணித்த கட்டிட வல்லுநர்கள் மிக உயர்ந்த அறிவுக்கூர்மையுள்ளவர்கள் என்று நான் அவர்களிடம் கூறினேன். வாழ்வில் வெளிப்புறத்தில் காமமும், மோகமும் இன்னும் இருக்கின்றன என்று அவர்கள் அறிந்துள்ளார்கள். எனவே இன்னும் காமத்தின் பிடியில் சிக்கியுள்ளவர்கள் அந்தக் கோவிலுக்குள் செல்லுவதற்கு தகுதியற்றவர்கள் என்று அவர்கள் நம்பினார்கள்.

நாங்கள் உள்ளே நுழைந்தோம். உள்ளே கடவுளுக்கு சிலை இல்லை. சிலை இல்லாததைக் கண்டு எனது நண்பர்கள் ஆச்சரியமடைந்தனர். வாழ்க்கையின் வெளிச்சுவற்றில் இன்னும் நமக்கு காமம், மோகம் இவைகள் இருக்கின்றன. ஆனால் கடவுளின் ஆலயம் உள்ளே இருக்கிறது என்று நான் அவர்களுக்கு விளக்கினேன். இன்னும் காமத்தில் மகிழ்ச்சியாக இருப்பவர்கள் உள்ளேயுள்ள கடவுளின் ஆலயத்தை அடைய முடியாது. அவர்கள் வெறுமனே வெளிச்சுவரையே சுற்றிச் சுற்றி வர வேண்டியதுதான்.

இந்தக் கோயிலை கட்டிய மக்கள் மிகவும் ஞானம் உள்ளவர்கள். அந்தக் கோயில் ஒரு தியான கேந்திரம். வெளிப்புறத்தைச் சுற்றிலும் காமாந்தகம், ஆனால் மையத்தில், நடுவில், அமைதியும், மௌனமும்தான். அவர்கள் சாதகர் களிடம் முதலில் செக்ஸைப் பற்றி தியானம் செய்யச் சொல்லு

வார்கள். அந்த வெளிச் சுவர்களில் செதுக்கப்பட்டுள்ள உடலுறவுச் சிற்பங்களை முழுவதும் சிந்தனை செய்யச் சொல்வார்கள். அவர்கள் முழுமையாக செக்ஸை பற்றி புரிந்து கொண்டபின். அவர்களின் மனம் காமத்திலிருந்து விடுதலை பெற்றுவிட்டது என்று அவர்கள் நிச்சயமாக தெரிந்து கொண்டபின் அவர்கள் அதனுள் இருக்கும் கடவுளைக் காணமுடியும்.

ஆனால் மதத்தின் பெயரால் நாம் செக்ஸைப் பற்றி புரிந்து கொள்வதை அழித்துவிட்டோம். நாம் செக்ஸின் மீது. நமது அடிப்படை சுபாவத்தின் மீது போர் ஒன்றைத் தொடுத்து விட்டோம். ஆனால் இப்போதுள்ள பொதுவான விதி என்னவெனில் கோவிலுக்கு வெளியே இருக்கும் அந்த சிற்பங்களைப் பார்க்காமல் கண்களை மூடிக் கொண்டு குருடனைப் போல் உள்ளே இருக்கும் கடவுளைத் துழாவ வேண்டும் என்பதுதான். ஆனால் யாராவது. கண்ணை மூடிக்கொண்டு எங்காவது ஒழுங்காக போய் சேர முடியுமா? அப்படியே நீங்கள் உள்ளே சென்றாலும் உங்களால் மூடிய கண்களுடன் கடவுளைக் காண முடியாது. அதற்குப் பதிலாக எந்தப் பொருளில் இருந்து தப்பிக்க வேண்டும் என்று கண்களை மூடிக்கொண்டீர்களோ. அந்தப் பொருள்தான் உங்கள் கண்களில் நிழலாடும்!

சிலபேர் செக்ஸிற்கு பிரச்சாரம் செய்பவன் நான் என்று எண்ணுகின்றனர். தயவு செய்து அவர்களிடம் நான் சொல்வதை சரியாகக் கேட்கவில்லை என்று கூறுங்கள். இந்த பூமியில் என்னைப்போல் செக்ஸிற்கு எதிரான ஒருவரைக் காண்பது இந்த நாளில் கடினம். மக்கள் நான் கூறுவதை எந்தவிதமான பாரபட்சமும் இல்லாமல் கவனமாக கேட்க முடியுமெனில் மனிதன் செக்ஸில் இருந்து விடுபடுதல் சாத்தியப்படும். ஒரு நல்ல மனிதவர்க்கம் உருவாக இது ஒன்றுதான் சிறந்த மார்க்கம். தாம் செக்ஸின் எதிரிகள் என்று எண்ணிக்கொண்டிருக்கும்

பண்டிதர்கள் எல்லோரும் செக்ஸின் எதிரிகள் அல்ல, அவர்கள்தான் அதை பரப்புவார்கள். அவர்கள்தான் செக்ஸிற்கு இந்த அளவு கவர்ச்சியை ஏற்படுத்தியவர்கள். அவர்களின் பலமான எதிர்ப்புதான் செக்ஸிற்கு இந்த அளவிற்கு பைத்தியக்காரத்தனமான கவர்ச்சியை உருவாக்கிவிட்டது.

ஆட்சேபம், சவால், ஆத்திரமூட்டுதல் இவைகளெல்லாம் இல்லாமல் கிடைக்கின்ற எந்த ஒன்றின் மீதும் தனக்கு ஆர்வம் இருப்பதில்லை என்று ஒருவன் என்னிடம் கூறினான். கடையில் வாங்கி வந்த பழத்தைவிட திருடிச் சாப்பிடுகின்ற பழத்திற்கு ருசி அதிகம் என்பது நாம் எல்லோரும் அறிந்ததே. அதானல்தான் அண்டை வீட்டுக்காரனின் மனைவி அழகாக தெரிவது போன்று தன்னுடைய மனைவி ஒரு நாளும் அழகாகத் தெரியவதில்லை. அடுத்தது என்பது திருடப்பட்ட கனியைப் போன்றதாகத் தெரிகிறது. அடுத்தது என்பது தடை செய்யப்பட்ட விருந்தாகத் தெரிகிறது. அதே தகுதியைத்தான் நாம் செக்ஸிற்கும் கொடுத்து விட்டோம். அதனால் அது நம்மை தீமை செய்யத் தூண்டுகிறது. அதன் மீது பொய்யான வர்ணங்கள் பூசப்பட்டு விட்டதால் அது மிகவும் தீவிரமான கவர்ச்சியாக ஆகிவிட்டது.

விக்டோரியாவின் காலத்தில், தான் ஒரு சிறுவனாக இருந்தபோது பெண்களின் கால்களை பொது இடங்களில் நாம் பார்க்க முடியாது என்று பெர்ட்ரண்ட்ரஸ்ஸல் எழுதுகிறார். அவர்கள் அணியும் ஆடைகள் அவர்களின் கால்களை முழுவதும் மறைத்துக் கொண்டு தரையில் புரண்டு செல்லும். அப்படியே தப்பித் தவறி ஒரு பெண்ணின் காலின் பெருவிரல் தெரிந்துவிட்டால் உடனே ஆண் அதை கடைக்கண்ணால் பார்ப்பான். அது அவனது காமத்தை எழுப்பி விடும். ஆனால் இன்றைய பெண்கள் கிட்டத்தட்ட அரை நிர்வாணமாக கால்கள் முழுவதும் எல்லோருக்கும் தெரியும்படியாக செல்கின்றனர். ஆனால் நாம் அதனால் அதிகம் பாதிக்கப்படுவதில்லை என்றும் ரஸ்ஸல் எழுதுகிறார். இதிலிருந்து என்ன தெரிகிறது என்றால்

எதையும் மூடி மறைக்க மறைக்கத்தான் அதை நாம் பார்க்க வேண்டும் என்ற பேராவல் ஏற்படும் என்று ரஸ்ஸல் எழுதுகிறார்.

எனவே காமத்தில் இருந்து உலகம் விடுபட வேண்டுமெனில் அதற்கான முதல் வேலையாக நாம் நமது வீடுகளில் சிறு குழந்தைகளை எவ்வளவுக்கெவ்வளவு அம்மணமாக இருக்க அனுமதிக்க முடியுமோ அவ்வளவுக் கவ்வளவு நல்லது. இன்னும் முடியுமெனில் குழந்தைகளை, சிறுவர், சிறுமியர் இருவரையும் அம்மணமாக விளையாட அனுமதித்தல் இன்னும் நல்லது. அதனால் அவர்கள் ஒருவர் மற்றவர்களின் உடலைப் பற்றி நன்றாக அறிந்து கொள்ள முடிகிறது. அதன்பின் அவர்கள் கூட்டத்தில் ஒருவரையொருவர் தவறானவகையில் தொட்டுக் கொள்ள வேண்டியதிருக்காது. அப்போது புத்தகங்களில் நிர்வாணப் படங்களை பிரசுரிக்க வேண்டியதிருக்காது. அவர்கள் மற்றவர்களின் உடலோடு அந்த அளவுக்குத் தெரிந்துவிட்டிருக்கும். அதனால் எதிர் காலத்தில் நெறிதவறிய கவர்ச்சிகளுக்கு இடமே இருக்காது.

ஆனால் இந்த உலகின் வழி அதற்கு நேர் எதிராக உள்ளது. எந்த மக்கள் தங்களது உடலை முழுமையாக மறைத்துக்கொண்டு அலைகிறர்களோ, அவர்கள் அறியா மலேயே அதன்மீது அதிகக் கவர்ச்சியை ஏற்படுத்தி விடுகின்றனர். இது நமது மனதிற்கு புரிந்தாலும் அதன் முழுத் தாக்குதல்களையும் இன்னும் நாம் உணரவில்லை. எனவே குழந்தைகள் அம்மணமாக இருக்க வேண்டும். நீண்ட நேரத்திற்கு அவர்கள் அம்மணமாக விளையாட அனுமதிக்கப் பட வேண்டும். அதனால் அவர்களின் வாழ்வின் பிற்பகுதியில் காமப் பைத்தியத்தின் விதைகள் தொற்றிக் கொள்ளாமல் காப்பாற்றலாம்.

ஆனால் ஏற்கனவே நோய் பரவி விட்டது. அது அதிகமாகிக் கொண்டே வருகிறது. கட்டுக்கட்டாக ஆபாச இலக்கியங்கள் பிரசுரிக்கப்படுவதிலிருந்தே நாம் அந்த நோய் எந்த அளவுக்கு பரவியுள்ளது என்று கண்டு கொள்ளலாம்.

மக்கள் ஆபாச இலக்கியங்களை பகவத் கீதை, அல்லது பைபிளின் அட்டையின் கீழ் ஒளித்து வைத்துக் கொண்டு படிக்கின்றனர். ஆபாச புத்தகங்களுக்கு தடை விதிக்க வேண்டும் என்று நாம் கூச்சல் போடுகிறோம். ஆனால் அந்த ஆபாசப் புத்தகங்களை படிக்கின்ற மனிதன் எங்கிருந்து வருகிறான் என்று கொஞ்ச நேரம் நின்று யோசிப்பதில்லை. நிர்வாணப் படங்களை வெளியில் வைக்கக் கூடாது என்று எதிர்ப்பு தெரிவிக்கிறோம். ஆனால் அந்தப் படங்கள் ஏன் பார்வைக்கு வைக்கப்படுகின்றன என்று நாம் ஒருபோதும் நின்று கேட்பதில்லை.

காமம் என்பது இயற்கையானது. காமாந்தகம் என்பது காமத்திற்கு எதிரான போதனைகளின் விளைவு. இதுபோன்ற போதனைகள் பின்பற்றப்படுமேயானால், மனிதனின் ஆன்மா முழுவதும் காமத்தால் நிரம்பிவிடும். அது கிட்டத்தட்ட நிரம்பிவிட்டது. எனவே மனிதன் செக்ஸ் என்பது என்ன? அதன் மூலக்கவர்ச்சி என்ன? அது ஏன் விகாரம்டைந்துள்ளது? என்னும் இந்த மூன்று விஷயங்களை சரியாகப் புரிந்து கொள்வானாகில் அவனால் அதற்கு மேல் எழுந்து நிற்க முடியும். அவன் அதற்கு மேல் எழுந்து நின்றுதான் ஆக வேண்டும். அவன் அதற்கு மேலோங்கி நிற்பது அவசியம்.

இந்நாள் வரை நமது முயற்சிகள் எல்லாம் தவறான பலன்களைத் தந்துள்ளன. ஏனென்றால் நாம் செக்ஸை நமது நண்பனாக்கிக் கொள்ளாமல் அதன் மீது ஒரு போரைத் தொடுத்து விட்டோம். செக்ஸ் பிரச்னைகளைத் தீர்ப்பதற்கு அதை அடக்கி வைத்தலையும், அதைப் புரிந்துகொள்ளாமல் இருக்கும் வழிகளையும் கடைப்பிடித்து விட்டோம். ஒரு மனிதன் செக்ஸைப் பற்றி எந்த அளவுக்கு ஆழமாகத் தெரிந்து கொள்கிறானோ, அந்த அளவுக்கு அவன் வளர்ந்தோங்க முடியும். ஒருவன் எந்த அளவுக்கு அதை சரியாகப் புரிந்து கொள்ளவில்லையோ, அந்த அளவுக்கு அதிகமாக அவன் செக்ஸை அடக்க முயற்சி செய்ய வேண்டியதிருக்கும். மேலும் அடக்கி வைத்தலின் விளைவுகள் ஒரு போதும் நல்ல

பலன்களை, ஒருபோதும் நிம்மதியை, ஒருபோதும் ஆரோக்கியத்தை அளித்ததில்லை.

செக்ஸ்தான் மனிதனின் மிகவும் துடிப்புள்ள சக்தி. ஆனால் அதனுடன் நாம் அப்படியே நின்று விடக் கூடாது. செக்ஸ் மனிதனை அவனது ஆன்மாவை நோக்கி அழைத்துச் செல்ல வேண்டும். அவனது இலட்சியம் காமத்திலிருந்து மெய்யுணர்வை நோக்கிச் செல்வதாக இருக்க வேண்டும்.

அதிஉன்னத காமத்தைப் புரிந்துகொள்வதால் பிரம்மச்சரியம் நம்மை வந்தடையும். செக்ஸைப் பற்றி அறிந்து கொள்வதுதான் அதிலிருந்து விடுபட, அதைத் தாண்டிச் செல்ல வழி செய்யும். ஆனால் தனது வாழ்நாள் முழுவதும் செக்ஸை அனுபவித்தும் ஒரு மனிதன் உடலுறவானது தனக்கு சமாதி நிலையின் க்ஷணக் காட்சி மிகச்சிறிய அதிஉன்னத மெய்யுணர்வின் (SuperConsciousness) அனுபவத்தை மட்டும் கொடுக்கிறது என்று கண்டு கொள்ள முடியாமல் இருக்கிறான். அதுதான் செக்ஸின் மாபெரும் ஈர்ப்பு சக்தி ஆகும். அதுதான் செக்ஸின் வசீகரத்திற்கு மூல காரணம். அதுதான் எல்லா வற்றிற்கும் மேலான உங்களை விடாமல் கவர்ந்து இழுக்கிறது. நீங்கள் இக்கண நேர சமாதி நிலை அனுபவத்தை புரிந்து கொள்ள தியானம் செய்ய வேண்டும். அதன் மீது உங்கள் விழிப்புணர்வை குவிக்க வேண்டும்.

செக்ஸைத் தவிர சமாதி நிலையை அனுபவிப்பதற்கு வேறு எளிய வழிகளும் உள்ளன. தியானம், யோகா, பக்தி ஆகியவை மாற்று வழிகள். ஆனால் காமத்தின் இந்த வழிதான் மனிதனின் மீது அதிக சக்தி வாய்ந்த வசீகரச் சக்தியுடையதாக உள்ளது. ஒரே லட்சியத்தை அடைவதற்குண்டான பல வழிகளைப் பற்றி அலசி ஆராய்வது மிகவும் முக்கியமாகும்.

ஒரு நண்பர் எனது பேச்சு அவரை தர்ம சங்கடமான நிலைக்கு தள்ளி விட்டதாக எழுதியுள்ளார். ஒரு தாய் தனது மகளுடன் இங்கு உட்கார்ந்திருந்தால் அவளது நிலைமையும், ஒரு தாய் தனது மகனுடன் எனது பேச்சைக் கேட்பதற்கு

வந்திருந்தால், அவர்களது நிலையையும் கற்பனை பண்ணிப் பார்க்கும்படி என்னை கேட்டுள்ளார். மேலும் எல்லோர் முன்னிலையிலும் இதுபோன்ற விஷயங்களை விவாதிக்கக் கூடாது என்றும் எனக்கு அறிவுரை கூறியுள்ளார்.

அவரது மறுப்புகள் எல்லாம் ஆதாரமற்றவை என்றும் அவர் அந்த மனநிலையை விட்டு வெளிவர வேண்டும் என்றும் நான் அவருக்கு பதிலளித்தேன். ஒரு தாய் அறிவுள்ளவளாக இருந்தால் அவள் தனது செக்ஸ் அனுபவங்களை தக்க சமயத்தில் தனது மகளுக்கு விளக்க வேண்டும். மகள் செக்ஸ் என்னும் பாதாளத்தில் விழுவதற்கு முன், அவள் அறியாத அந்த ஒன்றில் பக்குவமற்ற வழிகளில் தன்னை இழப்பதற்கு முன்னால், தாய் அவளுக்கு விளக்க வேண்டும். ஒரு தந்தை பொறுப்புள்ள பெற்றோராக தனது கடமையைச் செய்ய நினைத்தால் அவர் தனது மகன் மற்றும் மகளுடன் அந்த விஷயத்தைப் பற்றி சுதந்திரமாக விவாதிக்க வேண்டும். அவர்களை சாதாரணமாக ஏற்படுகின்ற தவறுகளில் இருந்தும், எதிர் காலத்தில் அவர்கள் நெறி தவறி செல்வதிலிருந்தும் அவர்களின் வாழ்க்கையைக் காப்பாற்ற வேண்டும்.

ஆனால் இதில் வேடிக்கையான விஷயம் என்னவெனில் அந்தத் தாயோ அல்லது தந்தையோ கூட இந்த விஷயத்தைப் பற்றி ஆழ்ந்த அறிவுப்பூர்வமான அனுபவம் பெற்றதில்லை என்பதுதான். அவர்களே இன்னும் உடலளவிலான செக்ஸிற்கு மேல் எழுந்து செல்லவில்லை. எனவேதான் அவர்கள் தங்கள் பிள்ளைகளும் அதே மட்டத்தில் மாட்டிக் கொள்வார்களோ என்று அஞ்சுகின்றனர். ஆனால் நான் உங்களிடம் கேட்கிறேன். யாராவது உங்களுக்கு வழி காட்டினார்களா? நீங்களாகவேதான் மாட்டிக் கொண்டீர்கள். அதேபோல் உங்களது குழந்தைகளும் கண்டிப்பாக அவர்களாகவே மாட்டிக் கொள்வார்கள். இதே கதை இரண்டு, மூன்று தலைமுறைகளாகவும் அதற்கு மேலும் தொடரும். ஆனால் உங்களது பிள்ளைகளிடம் இதைப் பற்றி பேசி, அவர்களுக்கு இதைக் கற்பித்து, அவர்களாகவே

சுதந்திரமாக இதைப் பற்றி சிந்திக்க அனுமதித்து, அவர்களை தங்களின் சக்திகளை இழப்பதிலிருந்து ஏன் காப்பாற்றக்கூடாது? அவர்கள் தங்களது சக்தியை சேமித்து வைக்க முடியும். அவர்கள் அதை மாற்றியமைக்க முடியும்.

நாம் எல்லோரும் கரியை அநேக முறை பார்த்துள்ளோம். சில ஆயிரக்கணக்கான ஆண்டுகளில் கரியானது வைரமாக மாறுகிறது என்று விஞ்ஞானிகள் கூறுகின்றனர். மேலும் கரித்துண்டிற்கும், வைரத்திற்கும் அமைப்பிலும், இரசாயனத்திலும் எந்தவிதமான மாற்றமும் இல்லை. வைரம் என்பது கரித்துண்டின் மாற்றியமைக்கப்பட்ட வெளிப்பாடுதான். வைரம் வெறும் கரிதான்.

அதைப்போல் காமம் என்பது கரி என்றும், பிரம்மச்சரியம்தான் வைரம் என்றும் நான் கூறுகிறேன். பிரம்மச் சரியம் என்பதும் காமம்தான். பிரம்மச்சரியம் என்பது காமத்தின் உருமாற்றம். பிரம்மச்சரியமும் அடிப்படையில் கரிதான். ஆனால் அது சில மாற்றங்களை அடைந்து விட்டது. இந்த இரண்டு எதிர் துருவங்களுக்கும் இடையில் விரோதம் இல்லை. எனவே காமத்திற்கு எதிரானவர் ஒருபோதும் பிரம்மச்சரியத்தை அடைய முடியாது.

பிரம்மச்சரியம் என்றால் அர்த்தம் என்ன? அது பிரம்மத்தோடு சரிசமன் கொள்ளல்; அதாவது கடவுளோடு கலந்து கொள்ளுதல். அது தெய்வீக அனுபவத்தை, கடவுளின் அனுபவத்தை தெளிவாக அறிந்து கொள்ளுதல். எனவே பகுத்தறிவுடன் புரிந்து கொண்டு பிரயோகித்தால் ஒருவன் தனது காம சக்தியை அந்தப் பாதையில், கடவுளின் பாதையில் திருப்பிச் செலுத்த முடியும்.

நான் உங்களிடையே "காம" அனுபவத்தை "அதிஉயர் மெய்யுணர்வுவய " (Super Consciousness) அனுபவமாக, ஒளி அனுபவமாக எப்படி மாற்றி மேம்படுத்துவது என்பது பற்றிப் பேச இருக்கிறேன். நான் கூறுவதை கவனமாக கேளுங்கள், அப்போதுதான் அதை வேறுவிதமாக நீங்கள் புரிந்து கொள்ள

முடியாது. உங்கள் மனதில் எந்தவிதமான கேள்விகள் எழுந்தாலும் அவைகளை நேர்மையுடன் கேளுங்கள். அவைகளை எழுதி எனக்கு அனுப்புங்கள். அப்போதுதான் நான் அவைகளைப் பற்றி இன்னும் சிலதினங்களில் உங்களுடன் நேரடியாக பேச முடியும். உங்கள் மனதில் எழும் கேள்விகளை மறைக்க வேண்டிய அவசியம் இல்லை. உண்மையை மறைக்க வேண்டிய அவசியம் இல்லை. இதிலிருந்து தப்பித்து ஓட நினைப்பது அர்த்தமற்றது. நாம் நமது கண்களை மூடிக் கொண்டாலும், மூடாவிட்டாலும் உண்மை உண்மைதான். உண்மையை சந்திக்க தைரியம் உள்ளவர்கள்தான் மதப் பற்றுள்ளவர்கள். யார் பலவீனமானவர்களாயும், கோழைகளாக வும் உள்ளனரோ அவர்களும் மேலும் வாழ்க்கையின் உண்மை களை நேருக்கு நேர் சந்திக்க ஆண்மையற்றவர்களும் ஒரு போதும் மதப்பற்றுள்ளவர்களாக ஆக முடியாது.

இனிவரும் நாட்களில் நீங்கள் நான் கூறிய விஷயங்களைப் பற்றி தீவிரமாக சிந்திக்குமாறு நான் உங்களை வேண்டுகிறேன். இதைப் பற்றி உங்களது வயதான துறவிகளும், சந்நியாசிகளும் பேசுவார்கள் என்று நீங்கள் எதிர்பார்க்க முடியாது. அதேபோல் நீங்கள் இதுபோன்ற சொற்பொழிவு களைக் கேட்டு பழக்கப்படாதவர்கள். உங்களது மனம் பயத்தில் பின்வாங்கலாம். ஆனால் நீங்கள் பொறுமை யுடனும், கவனமுடனும் நான் கூறுவதைக் கேட்குமாறு உங்களைத் தூண்டுகிறேன். காமத்தைப் பற்றி நீங்கள் புரிந்து கொண்டால் அது உங்களை உங்களது உயர்மெய்யுணர்வின் ஆலயத்திற்கு அழைத்துச் செல்லக் கூடும்.அதுதான் எனது பேரவா.

உய்விருப்பு (existence) இந்த ஆசையை நிறைவேற்றுவதாகுக.

இவ்வளவு அன்புடனும் அமைதியாகவும் செவி மடுத்தற்கு நன்றி. உங்களுள் பதியும் தெய்வீகத்திற்கு நான் தலைவணங்குகிறேன்.

******

நான் ஒரு சிறிய கதையுடன் எனது பேச்சை ஆரம்பிக்கிறேன். அநேக வருடங்களுக்கு முன்பு ஒரு தேசத்தில் ஒரு புகழ் பெற்ற இளம் ஓவியன் இருந்தான். அவன் உண்மையிலேயே மிகப் பெரிய ஓவியத்தை, கடவுளின் சந்தோஷத்தால் முழுவதும் நிரம்பியுள்ள, உயிரோட்டமுள்ள, என்றென்றைக்கும் அமைதி ஒளிவீசும் கண்களைக் கொண்ட ஒருவனது ஓவியத்தை உருவாக்க தீர்மானித்தான்.

அந்த ஓவியன் கிராமம் கிராமமாக, காடுகள் முழுவதும் தனது ஓவியத்திற்கு வேண்டிய ஆளைத்தேடி திரிந்தான். இறுதியில் அவன், ஒளி பொருந்திய கண்களுடனும், சொர்க்கத்தின் எல்லா அம்சங்களும் அமையப்பெற்ற முகத்துடனும் கூடிய ஒரு ஆடு மேய்ப்பவனைக் கண்டான். ஒரு முறை அவனைப் பார்த்தால் போதும் கடவுள் அந்த இளைஞனிடம் குடியிருக்கிறார் என்று நிச்சயமாகச் சொல்லி விடலாம்.

அந்த இளம் ஆடு மேய்ப்பவனின் உருவத்தை அந்த ஓவியன் வரைந்தான். அந்த ஓவியத்தின் பல இலட்சம் பிரதிகள் எடுக்கப்பட்டு எல்லா இடங்களிலும் விற்பனையாயிற்று. அந்த ஓவியத்தை தங்கள் வீட்டுச் சுவர்களில் தொங்க விடுவதில் மக்கள் மிகவும் மகிழ்ச்சி அடைந்தனர்.

அதன்பின் ஒரு இருபது ஆண்டுகள் கழித்து, அந்த ஓவியனுக்கு கொஞ்சம் வயதானவுடன் அவன் மீண்டும் இன்னொரு ஓவியத்தை வரைய தீர்மானித்தான். வாழ்க்கையில் எல்லாம் நல்லவையல்ல என்றும் வாழ்வில் சாத்தானும் இருக்கிறான் என்றும் அவரது வாழ்க்கை அனுபவம் காட்டிற்று. எனவே சாத்தானைப் போல் ஒரு ஓவியத்தை வரைய வேண்டும்

என்ற எண்ணம் அவனுக்குள் இருந்தது. அவன் இதையும் வரைந்து முடித்து விட்டால். இரண்டு ஓவியங்களும் ஒன்றுக்கொன்று ஈடு செய்து விடும். அது ஒரு முழு மனிதனைக் காட்டிவிடும் என்று எண்ணினான். அவன் ஏற்கனவே கடவுள் தன்மை நிறைந்த ஒரு ஓவியத்தை வரைந்துவிட்டான். இப்போது பிசாசின் அவதாரம் ஒன்றை வரைய விரும்பினான்.

அவனுக்கு மனிதனைப் போல் அல்லாமல் சாத்தானைப் போலவே உள்ள ஒரு ஆள் தேவைப்பட்டான். அவன் சூதாடும் இடங்களுக்கும், மதுக்கடைகளுக்கும், பைத்தியக்கார விடுதிகளுக்கும் சென்று பார்த்தான். அவன் ஓவியம் தீட்ட வேண்டிய ஆளிடம் நரகத்தின் நெருப்பு நிறைந்திருக்க வேண்டும். அவனது முகம் கெட்டவைகளையெல்லாம் காட்ட வேண்டும். துக்கம் நிறைந்ததாகவும் அசிங்கமானதாகவும் இருக்கவேண்டும்.

நீண்ட நாட்களாக தேடிய பின்னர் இறுதியாக அவன் ஜெயிலில் ஒரு கைதியை சந்தித்தான். அந்தக் கைதி ஏழு கொலைகளைச் செய்தவன். இன்னும் சில தினங்களில் தூக்கிலடப்பட இருப்பவன். அவனது கண்களில் நரகம் நன்றாக தெரிந்தது. அவைகள் வெறுப்பை வெளிப்படுத்தின. யாருமே காணாத அளவுக்கு அவனது முகம் அசிங்கமாக இருந்தது. அந்த ஓவியன் அவனை வரைய ஆரம்பித்தான்.

அவன் அந்த ஓவியத்தை பூர்த்தி செய்தவுடன் அவன் முன்பு வரைந்த ஓவியத்தை எடுத்து வந்து வித்தியாசம் காட்டுவதற்காக அதன் அருகில் வைத்தான். ஓவியனின் பார்வையில் எது சிறந்த ஓவியம் என்று மதிப்பிட முடியாத அளவுக்கு இரண்டுமே அற்புதமாக இருந்தன. அவன் அந்த இரண்டு ஓவியங்களையும் கூர்ந்து பார்த்துக் கொண்டு நின்றான். அப்போது அவன் யாரோ தேம்பித் தேம்பி அழும் சத்தத்தைக் கேட்டான். திரும்பிப் பார்த்தபோது அந்த சிறைக் கைதி அழுது கொண்டிருந்தான். ஓவியன் திகைத்துப் போனான். அவன்

கைதியிடம், நண்பனே ஏன் அழுகிறாய்? இந்தப் படங்கள் உன்னை கலக்கமடைய செய்து விட்னவா? என்று கேட்டான்.

அதற்கு அந்தக் கைதி, இதுவரை நான் உங்களிடமிருந்து ஒரு விஷயத்தை மறைத்து வந்தேன். ஆனால் இன்று என்னால் தாங்க முடியவில்லை. அந்த முதல் ஓவியமும் என்னுடையது தான் என்பதை நீங்கள் அறிந்திருக்க நியாயமில்லை. இரண்டு ஓவியங்களுமே என்னுடையவைதான். மலைச்சரிவில் இருபது ஆண்டுகளுக்கு முன்பு சந்தித்த அதே ஆடு மேய்ப்பவன்தான் நான். கடந்த இருபது ஆண்டுகளில் நான் இப்படிப்பட்ட கீழ்நிலைக்கு வந்ததை எண்ணி அழுகிறேன். நான் சொர்க்கத்திலிருந்து நரகத்தில் விழுந்து விட்டேன். கடவுளிடமிருந்து சாத்தானாக ஆகிவிட்டேன் என்று கூறினான்.

இந்தக் கதை எந்த அளவுக்கு உண்மையானது என்று எனக்குத் தெரியாது. ஆனால் ஒன்று மட்டும் நிச்சயம். ஒவ்வொரு மனிதனின் வாழ்க்கையிலும் தலைகீழான இரண்டு பக்கங்கள் உள்ளன. ஒருவரிடமே இரண்டு ஓவியங்களும் சாத்தியமாகி விடுகின்றன. ஒவ்வொரு மனிதனுக்குள்ளும் கடவுளும், சாத்தானும் இருக்கிறார்கள். ஒவ்வொரு மனிதனுக்குள்ளும் சொர்க்கமும் உள்ளது, நரகமும் உள்ளது. மனிதனுக்குள் ஒரு கொத்து ரோஜா மலர்களும் மலர முடியும். அவனுள் ஒரு குவியல் சேறும் இருக்க முடியும். வெவ்வேறு எல்லைகளுக்கும் இடையில் ஊஞ்சலாடுகிறான். மனிதன் இதில் எந்த ஒரு எல்லையை வேண்டுமானாலும் அடைய முடியும். ஆனால் பெருவாரியான மக்கள் நரகம் போன்ற நிலைக்குத்தான் சாய்கின்றனர். என்றும் நிலைத்து நிற்பதைக் குறித்துத் தேடுபவர்களும், தங்களுக்குள் கடவுள் தன்மையை வளர அனுமதிப்பவர்களும் மிக மிக அபூர்வம். நாம் நமது வாழ்க்கையை கடவுள் குடியிருக்கும் கோயிலாக ஆக்குவதில் வெற்றி பெற முடியுமா? கடவுள் தன்மை நிறைந்த அந்த ஓவியத்தைப் போல் நாமும் ஆக முடியுமா?

இந்தக் கேள்வியோடு இன்றைய சொற்பொழிவை நான் துவக்குகிறேன். கடவுளின் பிரதிபலிப்பாக மனிதன் எப்படி மாற முடியும். மனித வாழ்வை சொர்க்கமாக நறுமணம் நிறைந்ததாக, அழகுள்ளதாக, இணக்கமுள்ளதாக ஆக்குவது எப்படி? மரணமேயில்லாத ஒன்றை மனிதன் அறிந்து கொள்வது எப்படி? கடவுளின் ஆலயத்தில் மனிதன் பிரவேசிப்பது எப்படி?

இந்த சந்தர்ப்பத்தில் நமது வாழ்வின் உண்மைகள், இதுவரை நமது முன்னேற்றமானது எதிர் திசையில் இருந்துதான் வருகிறது என்பதை நமக்குக் காட்டுகின்றன. குழந்தைப் பருவத்தில் நாம் எல்லோரும் சொர்க்கத்தில் இருப்பது போல் இருக்கும். ஆனால் வயது ஆக ஆக, மெல்ல மெல்ல நாம் நரகத்தில் இறங்க ஆரம்பிக்கிறோம். நமது குழந்தைப் பிராயத்து உலகம் சூதுவாதற்றதாக, வெள்ளை உள்ளம் நிறைந்ததாக உள்ளது. ஆனால் படிப்படியாக பொய்களும், துரோகங்களும் பதிக்கப்பட்ட பாதையில் நாம் நடக்க ஆரம்பித்து அதில் நாம் பக்குவம் அடையும்போது வயதானவர்களாக ஆகிவிடுகிறோம். உடலளவில் மட்டுமல்ல, ஆன்மீக மட்டத்திலும் கூட நமது உடல் பலவீனமடைந்து போவதோடு கூட நமது ஆன்மாவும் அழியும் நிலையை அடைந்து விடுகிறது. ஆனால் இதை நாம் அப்படியே ஏற்றுக் கொள்கிறோம். காரியம் அத்தோடு முடிந்து போகட்டும் என்று நாம் அப்படியே விட்டு விடுகிறோம்; அதோடு நாம் நம்மை முடித்துக் கொள்கிறோம். இப்படி நாம் விழுந்து போவதை, சொர்க்கத்திலிருந்து நரகத்திற்கு செல்வதைக் குறித்து மதங்கள் அது நமது விதி என்கிறது. ஆனால் இந்தப் பயணம் கண்டிப்பாக பின்னோக்கிச் செலுத்தப்பட வேண்டும். நமது வாழ்க்கைப் பயணம் ஒரு வெகுமதியுடையதாக, துக்கத்திலி ருந்து சந்தோஷத்திற்கும், இருளிலிருந்து ஒளிக்கும், அழிவிலிருந்து அழிவற்றத் தன்மைக்கும் நம்மை அழைத்துச் செல்ல வேண்டும். மரணத்திலிருந்து மரணமில்லாத உள்ளுக் குள் உள்ள உந்துதல். அதுதான் மனிதன் உள்ளிருக்கும் ஆன்மாவின் தாகம். இருளிலிருந்து வெளிச்சத்திற்கு வருவது

ஒன்றுதான் மனித ஆன்மாவின் ஒரே தேடுதல் நமது ஆதி சக்தியின் அடிப்படை ஓட்டம் அசத்திலிருந்து சத்தியத்தை அடைவதுதான்.

ஆனால் அந்தப் பயணத்திற்கு மனிதன் தனது சக்தியை சேமிக்க வேண்டும். அவன் தனது சக்தி வளர்ச்சியடைய அனுமதிக்க வேண்டியது அவசியமாகிறது. சத்தியத்தை அடைவதற்கு, ஆன்மாவை அடைவதற்கு மனிதன் எல்லையற்ற பலம் நிறைந்த ஒருவனாக மாற வேண்டும். அதன் பின்தான் ஒருவன் அழிவற்ற ஒன்றை அடைய முடியும். சொர்க்கம் என்பது பலவீனர்களுக்கு அல்ல.

மீண்டும் கூறுகிறேன், சொர்க்கம் என்பது பலவீன மானவர்களுக்கு அல்ல. தங்களது சக்தியை விரயம் செய்பவர் களும், தங்களை பலவவீனமடைய அனுமதிப் பவர்களும் ஒருபோதும் வாழ்வின் உண்மையைத் தெரிந்து கொள்ள முடியாது. வாழ்வின் சக்திகளை வீணாக விரயம் பண்ணுகிறவர் களும், தங்களுக்குள் ஊக்கமும், ஆண்மையும் அற்றவர்களும் இந்தத் துணிகரப் பயணத்தை மேற்கொள்ள முடியாது. உச்சியை அடைவதற்கு அதிக சக்தி தேவை.

எனவே சக்தியை பாதுகாத்தல்தான் சமயநெறியின் அடிப்படைத் தேவை. ஆனால் நாமோ பலவீனமான நோயுற்ற பரம்பரையைச் சேர்ந்தவர்கள். மேலும் மேலும் சக்திகளை வீணாக்குவதன் மூலம் நாம் மேலும் மேலும் பலவீனமடைந்து வருகிறோம். நமது உயிர்ச் சக்தி முழுவதும் வெளியேற்றப்பட்டு விட்டதால் நமக்குள் வெறும் உலர்ந்து போன தேன் கூட்டின் சிறு அறைகள்தான் அடுக்கடுக்காக உள்ளன. அங்கே பயங்கரமான வெறுமையைத்தவிர வேறொன்றும் இல்லை. நமது வாழ்க்கை முழுவதும் நஷ்டம் என்கிற ஒரே ஒரு சோகக் தொடர்கதைதான் உள்ளது. நமது வாழ்வு வளமானதாக இல்லை.

வசீகரமற்ற இந்தச் சூழல் ஏன் உள்ளது? நாம் நமது சக்தியை எவ்வாறு இழக்கிறோம்?

காமம்தான் மனிதசக்தி வெளியேறும் மிகப்பெரிய வடிகால். காமத்தில்தான் சக்தி தொடர்ந்து வடிந்து செல்கிறது. அது நிறுத்தப்பட வேண்டும். யாரும் எதையும் எப்போதும் இழக்க விரும்புவதில்லை. ஆனால் நான் முன்பு கூறியது போல் மனிதன் ஏன் தனது சக்தியை அளவுக்கு அதிகமாக செலவழிக்கிறான் என்பதற்கான தவிர்க்க முடியாத காரணங்கள் உள்ளன. உடலுறவின்போது கிடைக்கின்ற அந்த அழகான கண நேர அனுபவத்திற்காக அவன் விரும்பினாலும், விரும்பா விட்டாலும், மீண்டும், மீண்டும் அவன் கவர்ந்திழுக்கப்படுகிறான். காமத்தின் மூலம் வருகின்ற பிரகாசமான, ஆனால் தற்காலிக மான அந்த அதிசந்தோஷத்தின் கவர்ச்சியானது, மனிதன் எல்லாவற்றிற்கும் அடிப்படையான ஒன்றை இழந்து விட்டு தலைகீழாக விழுவதற்கு காரணமாகிறது.

அதேவிதமான பரவசம், அதி சந்தோஷம் வேறு ஏதாவது வழிகளில் கிடைக்குமானால் ஒருவன் காமத்தின் மூலம் தனது சக்திகளை வீணாவதை நிறுத்துவானா? அதே அனுபவத்தைப் பெறுவதற்கு வேறு வழிகள் ஏதேனும் உள்ளதா? ஆன்மாவின் ஆழத்தைக் காண்கின்ற அதே அனுபவத்தை, நமது இருப்பின் உச்சநிலையை தொடுகின்ற அந்த அனுபவத்தை, தூய சந்தோஷமும் கண்ணுக்குப் புலப்படாத பரவச நிலையையும் நமக்களிக்கும் அதே அனுபவத்தை, எல்லா விசாரணைகளும், எல்லா வரைமுறைகளும் இல்லாமல் போகின்ற அந்த நிலையை அறிந்து கொள்ள வேறு ஏதேனும் வழிகள் உள்ளனவா? நமக்குள்ளேயிருக்கிற அமைதியான பள்ளத்தாக்கில் நாம் குதிப்பதற்கு வேறு ஏதேனும் தொழில் நுணுக்கங்கள் உள்ளனவா? நம் எல்லோருக்குள்ளும் இருக்கின்ற அழிவற்ற அமைதி, சந்தோஷம் இவைகளின் மூலக்காரணமான ஒன்றோடு நாம் இணைவதற்கு வேறு ஏதேனும் செயல் முறைகள் உள்ளனவா?

இதைப் பற்றிய அறிவு மனிதனுக்குள் மாற்றம்

ஏற்படுவதற்கான திடீர்த் தூண்டுதல் ஆகிவிடும். அதன்பின் அவன் காமத்திற்கு தனது முதுகைக் காட்டிவிட்டு தெய்வீகத்தை நோக்கித் திரும்பிவிடுவான். அதன்பின் அவனது பயணம் காமத்திலிருந்து அதிஉயர்மெய்யுணர்வை நோக்கி திருப்பி விடும். அதன்பின் ஒரு அகப்புரட்சி ஏற்பட்டுவிடும். ஒரு புதிய வாசல் திறக்கப்பட்டுவிடும்.

மனிதனுக்கு ஒரு புதிய வாசல் காட்டப்படவில்லையெனில் அவன் மீண்டும் மீண்டும் செக்கு மாட்டைப் போல் அதே வட்டத்தில் சுற்றிவிட்டு தன்னை அழித்துக் கொள்வான். ஆனால் காமத்தைப் பற்றி மனிதனின் கீழான கருத்துக்கள் அவன் வேறு உயர்ந்த வழிகளைப் பற்றி சிந்திக்கக் கூட விடாமல் செய்து விட்டன. அவனது வாழ்வில் மாபெரும் குழப்பம் உருவாக்கப்பட்டு விட்டது.

இயற்கை மனிதனுக்கு் காமம் என்கிற ஒரே ஒரு வழியைத்தான் கொடுத்துள்ளது. ஆனால் வேறு வழியைத் திறக்கவில்லை அந்த வழியை மூடும்படியும் அதன் வழியாக சக்தி வெளியேற பல நூற்றாண்டுகளின் போதனைகள் போதுமான வடிகால்கள் இல்லாத போது மனிதனுக்குள் சுழன்று கொண்டிருக்கும் சக்தியானது அவனுக்குள்ளேயே சுற்றிச் சுற்றி வந்து அவனது தனிமனிதத் தன்மையை பிளவுப்படுத்தி, அவனை பயித்தியமாக்கி விடுகிறது.

மேலும் இதுபோல் பிளவுப்பட்ட. நரம்பு மண்டலம் பாதிக்கப்பட்ட ஒரு மனிதன் தனது இயற்கையான வழியாகிய காமத்தையும் சரியானபடி பயன்படுத்த முடியாது. அவனுக்குள்ளியிருந்து பொங்கி எழுகின்ற சக்தியானது அவனது உள் உயிரின் சுவர்களையும், ஜன்னல்களையும் சேதப்படுத்திவிடுகிறது. அந்த சக்தி வெடித்தெழுவதனால் மனிதன் கீழே விழுந்து மண்டையை உடைத்து கொள்கிறான். மனிதனின் காம சக்தி வெளியேறும் இயற்கையான வழி அடைக்கப்பட்டு விட்டதாலும், இயற்கைக்கு மேலுள்ள வாசல்

திறக்கப்படாததாலும் மனிதனின் காமசக்தி செயற்கையான வடிகால்களில் வழிந்தோட ஆரம்பிக்கிறது. இது மனிதனுக்கு ஏற்பட்டுள்ள மிகப்பெரிய துரதிருஷ்டம். புதிய வாசல் இன்னும் திறக்கப்படவில்லை. ஆனால் பழைய வாசலோ ஏற்கனவே மூடப்பட்டு விட்டது.

இதனால்தான் காமத்திற்கு எதிரான, காமத்தை அடக்குகின்ற, அதன் மீது விரோம் பாராட்டுகின்ற பாரம்பரிய போதனைகளை நான் பலமாக எதிர்க்கிறேன். அப்படிப்பட்ட பழைய போதனைகளினால் காமம் மனிதனுக்குள் வளர்ச்சி யடையாமற் போனதோடல்லாமல் அது நெறி கோணிச் செல்லவும் ஆரம்பித்து விட்டது. இதற்குரிய பரிகாரம் என்ன? இதற்கு வேறு மாற்று வழியே கிடையாத?

நாம் இந்தச் சூழ்நிலையை கவனமாக உற்று நோக்குவோம். உடலுறவின் உச்சக்கட்ட பரவச நிலையின் போது நாம் இரண்டு விஷயங்களை அறிகிறோம். அவை, நான் என்னும் அகந்தை அப்போது இல்லாதிருத்தல், அதோடு நேரம் என்று ஒன்று இல்லாததன்மை. காலமும், நேரமும் நான் என்னும் அகந்தையும் அந்த உச்சக்கட்ட நேரத்தில் ஆவியாகிப் போய்விடுகின்றன. நான் என்னும் ஆணவம் இல்லாமல் போய்விடுவதாலும், காலமும் நேரமும் நின்று விடுவதாலும் ஒருவன் தனது சுயமான தன்மையை, தனது உண்மையான சுயத்தை தெளிவாகப் பார்க்க முடிகிறது. ஆனால் அந்த மகிமை க்ஷண நேரமே நீடிக்கிறது. மீண்டும் நாம் நமது பழைய வழித்தடத்தில் திரும்ப வந்து சேர்ந்து விடுகிறோம். இதற்கிடையில் நாம் கணிசமான அளவு சக்தியையும் இழந்துவிடுகிறோம்.

மீண்டும் அந்த ஒளிவீச்சுக்காக மனம் ஆவலோடு காத்திருக்கிறது. மனம் மீண்டும் அதை கிரகிக்க ஏங்குகிறது. ஆனால் அந்த ஒளி, அந்த உணர்வு தற்காலிகமாக உள்ளதால் அதை நாம் க்ஷண நேரம் உணர்வதற்குள் அது மறைந்து

விடுகிறது. அதனால்தான் அதே அனுபவத்தை மீண்டும் பெறுவதற்கான ஆழ்ந்த ஆர்வம், வெறி, ஒருவித உந்துதல் ஏற்படுகிறது. மனிதன் தனது வாழ்நாள் முழுவதும் மீண்டும் மீண்டும் அந்த க்ஷண நேர அனுபவத்தை, உற்சாகமூட்டுகின்ற அந்த அனுபவத்தை அடைய முயற்சி செய்கிறான். ஆனால் அது ஒருபோதும் ஒரு கணப்பொழுதுக்குமேல் கிட்டுவதில்லை.

அப்படிப்பட்ட அந்த அதி உன்னதக்காட்சியை தியானத்தினால் பெறலாம். நமது அக ஆன்மாவின் மெய் யுணர்வை (Conscious) அடைவதற்கு இரண்டு வழிகள் உள்ளன. அவை காமமும், தியானமும் ஆகும்.

காமம் என்பது இயற்கையால் நமக்களிக்கப்பட்ட பாதை யாகும். காமம்தான் இயற்கையான வழி. மிருகங்கள் அதைக் கொண்டுள்ளன. பறவைகள் அதைக் கொண்டுள்ளன. தாவரங்கள் அதைக் கொண்டுள்ளன. மனிதனும் அதைக் கொண்டுள்ளான். மனிதன் தனது இயற்கையான பாதையைப் பயன்படுத்திக் கொண்டே இருக்கும் வரை அவன் கண்டிப்பாக மிருக இனத்திற்கு மேலெழுந்து நிற்க முடியாது. அவைகளுக்கும் அதே வழிதான் உபயோகமாக உள்ளது. மனிதன் என்றைக்கு ஒரு புதிய வாசலைக் கண்டுபிடிக்கிறானோ அந்த நாள்தான் அவனுள் மனிதத்தன்மை உதயமானதாக கருதப்படும் நாள். அதற்கு முன்வரை நாம் எல்லோரும் மனிதர்கள் அல்ல. அதற்கு முன்வரை நமது மையமும், மிருக இனத்தின் மையமும் ஒன்றாக உள்ளது. இதற்கு மேல் எழுந்து நாம் நிற்காத வரையில், நிச்சயமாக உண்மையாக நாம் மிருக இனத்தின் மட்டத்திலேயே இருந்து விடுகிறோம். தோற்றத்தில்தான் நாம் மனிதர்கள், நாம் மனிதர்களைப் போல் உடை உடுத்திக் கொள்கிறோம். நாம் மனிதனின் பாஷைகளைப் பேசுகிறோம். ஆனால் நமக்குள், நமது மையத்தில், நாம் மிருகங்களைப் போன்றே இருக்கிறோம். மேலும் நம்மால் மிருகங்களைப் போல் இல்லாமலும் இருக்க முடியாது. அதனால்தான் சந்தர்ப்பம் கிடைக்கும்போது நமக்குள்

இருக்கும் மிருகத்தனம் முந்திக் கொண்டு வெளி வருகிறது.

இந்தியாவிலிருந்து பிரிந்து பாகிஸ்தான் உருவானபோது ஏற்பட்ட கிளர்ச்சியின் போதுதான் நாம். மனிதன் என்ற முகமூடிக்குள் புலால் உண்கின்ற மிருகங்கள் மறைந்துள்ளன என்பதை அறிந்து கொள்ள முடிந்தது. பள்ளிவாசல்களில் தொழுகை செய்து கொண்டும். கோவில்களில் கீதையை உச்சரித்துக்கொண்டும் இருந்த மக்கள் என்னென்ன செய்வார்கள் என்பதை அப்போது நாம் கண்டு கொள்ள முடிந்தது. அவர்கள் கொள்ளையடித்தனர். அவர்கள் கொலை செய்தனர். அவர்கள் கற்பழித்தனர். பிரிவினைக்கு ஒருநாள் முன்பு வரை மசூதிகளிலும், கோவில்களிலும் பிரார்த்தனை செய்து வந்த அதே மக்கள் தெருக்களில் கற்பழித்துக் கொண்டு வந்தனர். அவர்களுக்கு நேர்ந்தது என்ன?

மனிதன் தனது கட்டுப்பட்ட கடமை நிலையிலிருந்து தவறுவதற்கு சிறிதளவே சந்தர்ப்பம் கிடைக்கும்போதெல்லாம் கூட அவன் தனது மனிதாபிமானத்திற்கு விடுமுறை அளித்து விடுகிறான். அப்போது அவனுக்குள் எப்போதும் தயாராக இருக்கும் மிருகத்தனம் வெளிப்பட ஆரம்பிக்கிறது. மிருகம் எப்போதும் தனது லகானில் இருந்து விடுபடத்தான் ஆர்வப்படும். ஆனால் அவனுக்குள் இருக்கும் இந்த மிருகத்தை அடக்கிக் கொடுண்டு, அதை சங்கிலியால் கட்டிப் போட்டுக் கொண்டு மனிதன் எப்போதும் பரபரப்புடன் இருக்கிறான்.

கூட்டமாக இருக்கும்போது. கும்பலாக இருக்கும்போது ஒரு மனிதன் தான் பெற்றுள்ள மனிதாபிமானம் என்கிற பிரத்யேக ஆடையை வீசி எறிந்துவிட்டு தன்னை மறந்து விடுவதற்கு சந்தர்ப்பத்தைக் கண்டு கொள்கிறான். கூட்டத்திலிருக்கும்போது மனிதன் தன்னை மறந்து விடுவதற்கான தைரியத்தை விருத்தி செய்து கொள்ள முடிகிறது. அவன் அடக்கி வைத்துக் கொண்டிருக்கும் தனது உண்மைத் தன்மையை மறந்து போக முடிகிறது. அப்போது அவனுள் இருக்கும் மிருகம்

வெளிப்படுகிறது. கூட்டமாக இருக்கும்போது மனிதன் அதிக அளவில் பாவச் செயல்கள் செய்வதைப் போல் அவன் தனியொரு மனிதனாக இருக்கும்போது ஒருபோதும் செய்வதில்லை. ஒரு தனி மனிதன் தன்னை யாராவது பார்த்து விடுவார்களோ என்று கொஞ்சம் பயப்படுவான். ஒரு தனி மனிதன் தான் என்ன செய்யப் போகிறோம் என்று முதலில் சிந்திப்பான். மற்றவர்கள் தன்னை ஒரு மிருகம் என்று அழைத்து விடுவார்களோ என்று பயப்படுவான். ஆனால் அதே மனிதன் ஒரு கூட்டத்திலிருக்கும்போது அவன் தனது தனிதன்மையை இழந்து விடுகிறான். தான் தனியாக இனம் கண்டு கொள்ளப்படுவோம் என்கிற கவலை அவனுக்கு அப்போது ஏற்படாது. அப்போது அவன் அந்த மக்கள் கூட்டத்தின் ஒரு பகுதியாக ஆகிவிடுகிறான். அப்போது அவன் தன்னைச் சுற்றியுள்ள மக்கள் என்ன செய்கிறார்களோ அதையே அவனும் செய்கிறான்.

அப்போது அவன் செய்வது என்ன? அவன் கற்களை வீசுகிறான். தீ வைக்கிறான், கற்பழிக்கிறான், கூட்டத்தின் ஒரு பகுதியாக அவன் இருக்கும்போது அவன் தனக்குள் இருக்கும் மிருகத்தை சுதந்திரமாக அவிழ்த்து விடுகிறான். அதன் காரணமாகத்தான் ஐந்து அல்லது பத்து ஆண்டுகளுக்கு ஒருமுறை மனிதன் ஏதாவது போர் வராதா என்று ஆவலுடன் இருக்கிறான். ஏதாவது கலகம் ஏற்படும் என்ற நம்பிக்கையில் அவன் எப்போதும் காத்துக் கொண்டிருக்கிறான். அது இந்து முஸ்லிம் பிரச்சினை என்றாலும் அதில் ஈடுபடுகிறான். அது இல்லையெனில் ஏதாவது குஜராத்தி - மராத்தி பிரச்சினை அவனது நோக்கத்தை ஈடு செய்கிறது. அப்படி குஜராத்தி - மராத்தி பிரச்சினை அவன் கலகம் செய்ய சரியானதாக இல்லையெனில் இந்தி பேசும் மக்களுக்கும், இந்தி பேசாத மக்களுக்கும் இடையில் ஏற்படும் கலகம் அவனது எண்ணத்தை நிறைவேற்றுகிறது. அவனுக்குத் தேவை ஏதாவது ஒரு சாக்குப் போக்கு, எந்தவிதமான சாக்குப் போக்கானாலும் சரி, அதன்

மூலம் அவன் தனக்குள் பசியோடு இருக்கும் மிருகத்தை சுதந்திரமாக வெளியே விட சந்தர்ப்பம் கிடைத்தால் போதும்.

மனிதனுள் இருக்கும் மிருகத்தனம் தொடர்ந்து அடக்கப்பட்டு வருவதால், அது அதன் அடிமைத் தளைகளை அறுத்தெறிந்து வெளியே வரத் துடிக்கிறது. ஆனால் இந்த மிருகத்தனமானது மறையாமல், அழிந்து போகாமல், மனிதனின் உள்ளுணர்வு (Consciousness) ஒருபோதும் இந்த மிருகத் தனத்திற்கு மேலே எழுந்து செல்ல முடியாது.

நமது இயல்பான, ஆனால் மிருகவயமான, நமது உயிர்ச்சத்தானது, நமது சக்தியானது ஒரேயொரு வடிகாலைத்தான் பெற்றுள்ளது. அதுதான் காமம். அந்த வடிகாலை அடைத்து விடுதல் பல பிரச்சினைகளை உருவாக்குகிறது. ஆகவே அந்த வடிகாலை அடைப்பதற்கு முன்பு மனிதனின் அந்த உயிர்ச் சத்தானது ஒரு புதிய திசையில் திருப்பி விடப்படுவதற்கு ஒரு புதிய வாசல் திறக்கப்பட வேண்டியது அவசியமாகிறது. இது சாத்தியப்படும். ஆனால் இதுவரை அம்மாதிரி நடக்கவில்லை. அதற்குக் காரணம் அந்த சக்தியின் பாதையை மாற்றி அதை செலுத்துவதை விட அதை அடக்கி வைத்தல் நமக்கு சுலபமாகத் தெரிகிறது. எந்த ஒரு விஷயத்தையும் அதை சமாளிப்பதை விட, அதை மாற்றியமைப்பதை விட அதை மூடி மறைப்பது அல்லது அது தெரியாதபடி அதன் மீது உட்கார்ந்து கொள்வது சுலபமானது. ஏனெனில் அதை மாற்றியமைப்பதற்கு தடுமாற்றமில்லாத தியானத்தோடு கூடிய செயல்கள் அடங்கிய சாதனா என்னும் முயற்சி தேவை. எனவேதான் நாம் நமக்கள்ளேயே காமத்தை அடக்கி வைப்பதைத் தேர்ந்தெடுத்துக் கொண்டு விட்டோம்.

அதேவேளையில் எதையும் அடக்கி வைப்பதால் அதை நாம் ஒருபோதும் அழித்துவிட முடியாது என்று நமக்குத் தெரியவதில்லை. அதற்கு மாறாக அடக்கி வைப்பது பின்னால் மிகுந்த பலத்துடன் எதிர்த்து செயல்பட ஆரம்பித்தவிடும்.

மேலும் எதை நாம் அடக்கி வைக்கிறோமோ அதன் மீதுதான் நமக்கு அதிக ஆசை ஏற்படும் என்பதையும் நாம் மறந்து விட்டோம். நாம் அடக்கி வைக்கின்ற ஒன்று நமது உணர்வின் மையமாக ஆவதோடு மட்டுமில்லாமல் நமது ஆழ்மனதின் அடிமட்டத்தில் மூழ்கிச் செல்கிறது. நாம் நன்றாக விழிப்புணர்வுடன் இருக்கும்போது வேண்டுமானால் அதை அடக்கி வைக்கலாம். ஆனால் இரவில் அது நமது கனவில் திடீரென்று பிரகாசிக்கும். ஏதாவது ஒரு சிறிய சந்தர்ப்பம் கிடைத்தாலும் அதன் மூலம் வெளிப்படுவதற்காக அது நமக்குள் ஆவலுடன் காத்துக் கொண்டிருக்கும்.

எனவே அடக்கி வைப்பதென்பது எதிலிருந்தும் மனிதனை விடுதலை பெறச் செய்யாது. அதற்கு மாறாக அதன் வேர்கள் மனிதனின் ஆழ்மனதில் ஆழமாகச் சென்று அதன் விளைவுகளுக்கு மனிதனை சிக்க வைத்து விடும். செக்ஸை ஒழிக்க வேண்டும் என்ற முயற்சியில் மனிதன் அதில் தன்னை சிக்க வைத்துக் கொண்டான். அவன் அதில் மாட்டிக் கொண்டான்.

ஆனால் மிருகங்களுக்குக்கூட அதற்கென்று வரைமுறைகளும். அவைகளுக்கென்று குறிப்பிட்ட காலங்களும் உள்ளன. ஆனால் மனிதனுக்கு எதுவுமே கிடையாது. வருட முழுவதும் ஒவ்வொரு மணிநேரமும் மனிதன் காமத்தில் இருக்கிறான். எந்தவிதமான விதிவிலக்கும் இல்லாமல், எந்த ஒரு மிருகமும் இந்த அளவுக்கு காம வேட்கை கொண்டிருப்ப தில்லை. மிருகங்கள் அதற்கென்று குறிப்பிட்ட நேரம், காலம், பருவநிலை இவற்றில்தான் காமச் செயல்களில் ஈடுபடுகின்றன. அந்தப் பருவ நிலைகள் வரும்போது அந்த எண்ணமும் வருகிறது. அந்தப் பருவநிலை போகும்போது அந்த எண்ண மும் அவைகளை விட்டுப் போய்விடுகிறது. அதன் பிறகு அந்த மிருகங்கள் காமத்தைப் பற்றி மீண்டும் நினைத்துக் கூடப் பார்ப்பதில்லை. ஆனால் இந்த மனிதனுக்கு மட்டும் என்ன நேர்ந்துள்ளது என்று பாருங்கள். மனிதன் எந்த விஷயத்தை அடக்கி வைப்பதற்கு, கட்டுப்படுத்தி வைப்பதற்கு முயற்சி

செய்தானோ அது அவனது வாழ்நாள் முழுவதும் வெடித்துக் கிளம்பிக் கொண்டே இருக்கிறது. அது எப்போதும் எரிந்து கொண்டிருக்கும் எரிமலையாகி விட்டது.

எந்த ஒரு மிருகமும் சதாசர்வகாலமும் காமவேட்கை யுடன் இருப்பதில்லை. ஆனால் மனிதன் மட்டும் எந்த ஒரு சூழ்நிலையிலும் காம வேட்கையில் சரிந்து போகிறான் என்பதை நீங்கள் எப்போதாவது சிந்தித்துப் பார்த்ததுண்டா? அவனது வாழ்க்கையில் செக்ஸ்தான் எல்லாம் என்பது போல் காம வேட்கையானது மனிதனுக்குள் புகைந்து கொண்டிருக்கிறது. இந்த நெறி கோணல் எப்படி ஏற்பட்டது? இந்த பேராபத்து எப்படி ஏற்பட்டது! இது ஏன் எந்த ஒரு மிருகத்திற்கும் ஏற்படவில்லை? அதற்கெல்லாம் ஒரே ஒரு காரணம்தான். காமத்தை அடக்குவதற்கு மனிதன் தன்னால் ஆன முயற்சி களையெல்லாம் செய்து விட்டான். ஆனால் காமமோ மனிதனின் வாழ்க்கை முழுவதும் அதே அளவில் வெளிப்பட ஆரம்பித்து விட்டது.

நாம் செக்ஸை அடக்குவதற்கு என்னென்ன செய்து வந்துள்ளோம் என்று சிந்தித்துப் பாருங்கள்! நாம் அதைக் குறித்து ஒரு கெட்ட எண்ணத்தை விருத்தி செய்துவிட்டோம். அதை நாம் தரக்குறைவானதாக கருத வேண்டியதாகி விட்டது. அதை நாம் திட்ட வேண்டியதாகி விட்டது. அதை நாம் பாவச் செயல் என்று அழைக்க வேண்டியதாகி விட்டது. "செக்ஸ் ஒரு பாவச் செயல்" என்று நாம் கூரைகள் மீதேறி கத்த வேண்டியதாகி விட்டது. நாம் செக்ஸை அடக்கி வைப்பதை நியாயப்படுத்துவதற்காக செக்ஸிற்கு கணக்கிடலங்காத தரக்குறைவான பெயர்களை கண்டுபிடிக்க வேண்டியதாயிற்று. ஆனால் அந்த அவப்பெயர்களும், நமது மறுப்புக்களும் ஒரு நாள் நமது உயிருக்கே விஷமாகிவிடும் என்று நாம் ஒருபோதும் கவலைப்பட்டது கிடையாது.

நீட்சே ஒருமுறை அர்த்தமுள்ள ஒரு விஷயத்தைக்

கூறினார். மதமானது காமத்திற்கு விஷம் வைத்து அதைக் கொல்ல முயன்றாலும் காமம் மரணமடைந்து விடவில்லை. அதற்கு மாறாக அது இன்னமும் உயிருடனும், முழுவதும் விஷம் நிறைந்ததாகவும் உள்ளது என்று அவர் கூறினார். காமம் இறந்து போயிருந்தால் நன்றாக இருந்திருக்கும். ஆனால் அது அப்படி ஆகவில்லை. அதற்கு விஷம் வைக்கப்பட்டது என்றாலும் அது உயிர் வாழ்ந்து வருகிறது. நமது வழிகள் குறி தவறிச் சென்று விட்டன. இன்று நம்மைச் சுற்றி நாம் காணுகின்ற காம வேட்கையானது விஷமாக்கப்பட்ட காமமாகி விட்டுள்ளது.

செக்ஸ் என்பது மிருகங்களிடத்திலும் உள்ளது. ஏனெனில் செக்ஸ்தான் உயிர்ச்சக்தி. ஆனால் காமவெறி மனிதனிடம் மட்டுமே உள்ளது. காமவெறி என்பது மிருகங்களிடம் இல்லை. மிருகங்களின் கண்களைப் பாருங்கள். நீங்கள் அதில் காமத்தைக் காண முடியாது. ஆனால் நீங்கள் ஒரு மனிதனின் கண்களைப் பார்த்தால் அதில் காமத்தைத் தவிர வேறெதையும் காணமுடியாது; காமத்திற்கான மொத்த ஆசையைத் தவிர வேறெதையும் காண முடியாது. எனவே இன்றைய தினத்தில் மிருகங்கள் ஒருவிதத்தில் அழகாக உள்ளன. ஆனால் பைத்தியக்காரத் தனமாக காமத்தை அடக்கி வைக்கின்ற இந்த மனிதனின் அசிங்கத்திற்கு ஒரு முடிவே இல்லாமல் இருக்கிறது.

எனவே காமவெறியிலிருந்து மனிதனை விடுவிப்பதற்கான முதல் படியாக நான் நேற்று கூறியதைப்போல் குழந்தைகள், சிறுவர்கள், சிறுமியர்கள் இருபாலருக்கும் செக்ஸ் பாடம் கற்றுக் கொடுக்கப்பட வேண்டும். அவர்களுக்கு இந்த செக்ஸ் பற்றிய அறிவை கொடுப்பதோடு அவர்களுக்கு இடையில் ஏற்படுத்தப்பட்டுள்ள செயற்கையான இடைவெளி அழிக்கப்பட வேண்டும். உண்மையில் அவர்கள் இன்னும் நெருக்கமாக கொண்டு வரப்படவேண்டும். இப்போது நாம் பிரித்து வைத்திருப்பது முற்றிலும் செயற்கைத்தனமானது.

ஆணும், பெண்ணும் முற்றிலும் வேறுபட்ட இரு உயிரினங்களைப் போல் ஆக்கப்பட்டு விட்டனர். ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையில் மனிதனால் இப்படி உருவாக்கப்பட்டுள்ள பிரிவினையை உற்று நோக்கினால் அவர்கள் இருவரும் ஒரே இனத்தைச் சேர்ந்தவர்கள்; அவர்கள் இருவரும் மனித இனத்தின் ஒரு பகுதிதான் என்று கூட நம்மால் நம்புவதற்கு கடினமாக உள்ளது. சிறுவர்களும், சிறுமியர்களும் அவர்கள் விரும்பிய பொழுதெல்லாம் ஆடைகளின்றி வீட்டைச் சுற்றிவர அனுமதிக்கப்படுவார்களேயானால் அவர்களின் பிற்காலங்களில் அவர்கள் மனதில் ஏற்படும் இயற்கைக்கு மாறான ஆசைகளையும், ஆபாசத்தையும் முளையிலேயே கிள்ளி எறிந்து விடலாம். குழந்தைகள் ஒருவர் மறறொருவரின் உடலைப் பற்றி அறிந்து கொள்ள மிகவும் ஆவலுள்ளவர்களாக இருப்பது நாம் அனைவரும் அறிந்ததே. நாகரீகமடைந்தவர்களின் குழந்தைகள் எல்லாம் "டாக்டர்" விளையாட்டு விளையாட ஆசைப்படுவதை நாம் அனைவரும் பார்க்கிறோம்.

இதைவிட இன்னும் ஒரு விஷயம் என்னவெனில், அமெரிக்க சமுதாயத்தில் மதத்தின் காவலர்கள் என்று தங்களை அழைத்துக் கொள்பவர்கள் புதிதாக ஒரு பிரிவை ஆரம்பித்துள்ளனர். அவர்களின் முக்கிய நோக்கம் என்னவெனில், நாய், பூனை, குதிரை மற்றும் ஏனைய மிருகங்களை ஆடையின்றி வெளியே வருவதைத் தடுப்பதுதான். அந்த மிருகங்களை அவர்கள் தெருவில் அழைத்து வெளியே எடுத்து வரும்போது அவைகளுக்கு ஆடைகள் அணிவித்துத்தான் எடுத்து வர வேண்டும் என விரும்புகின்றனர். ஆடையில்லாத அந்த மிருகங்களைப் பார்த்தால் அம்மணமாக இருக்கும் ஒரு மிருகத்தைப் பார்த்தால் குழந்தை கெட்டுவிடும் என்று அவர்கள் கருத்து எவ்வளவு வேடிக்கையாக உள்ளது! ஆனால் எப்படியோ அவர்கள் சங்கமே ஆரம்பித்துள்ளார்கள். மனித வர்கத்தைக் காப்பதற்கு

என்னென்ன நடவடிக்கைகளெல்லாம் எடுக்கப்படுகின்றன வென்று பார்த்தீர்களா!

மனித இனத்தின் காவலர்கள் என்று கூறிக் கொண்டு திரியும் இவர்கள்தான் மனிதனை கெடுத்துக் கொண்டிருக்கிறார்கள். ஆடைகள் இல்லாமல் மிருகங்கள் எவ்வளவு அழகாகவும், அற்புதமாகவும் இருக்கின்றன என்று நீங்கள் ஒருபோதும் கவனித்ததில்லையா? அவைகளின் நிர்வாணத்திலும் கூட அவைகள் கள்ளம் கபடமற்றவைகளாக, எளிமையானவைகளாக, வஞ்சகமின்றி இருக்கின்றன. மிருகங்கள் அம்மணமாக இருப்பதைப் பற்றி நாம் யாரும் சிந்திப்பதே இல்லை. மேலும் நீங்கள் உங்களது அம்மணமான நிலையை உங்களுக்குள் மறைத்து வைத்துக் கொண்டிருப்பதால்தான் மிருகங்கள் அம்மணமாக இருப்பது உங்கள் கண்களுக்கு பளிச்சென்று தெரிகிறது. ஆனால் தங்களின் நிர்வாண நிலையைக் குறித்து பயப்படுகிறவர்களும், கோழைகளும் அதை ஈடு செய்ய எதை வேண்டுமானாலும் செய்வதற்கு முயற்சிப்பார்கள். இப்படிப்பட்ட பரிகாரங்களையெல்லாம் புதிது புதிதாக கண்டுபிடிப்பதால்தான் மனித இனம் நாளுக்கு நாள் சீரழிந்து கொண்டு வருகிறது.

மனிதன் எளிமையாக இருக்க வேண்டுமெனில், அவன் ஆடையின்றி, நிர்வாணமாக, கள்ளம் கபடமற்ற பேரானந்தம் நிறைந்து இருக்கலாம். மகாவீரரைப் போன்றவர்கள் ஆடையின்றி இருந்தனர். அதுபோல ஒவ்வொரு மனிதனும் தானும் ஆடையின்றி இருக்க முடியும் என்கிற மனப்பக்குவத்தை அடைய வேண்டும். மதவாதிகள் மகாவீரர் ஆடைகளைத் தவிர்த்து விட்டார் என்றும், ஆடைகள் அணிவதை அவர் விட்டு விட்டார் என்றும் கூறுகின்றனர். ஆனால் நான் இதை மறுக்கிறேன். அவரது சித்தம், அவரது உள்ளுணர்வு அந்த அளவுக்குத் தெளிவாகவும், அந்த அளவுக்கு கள்ளம் கபடமற்றதாகவும் ஒரு குழந்தையின் உள்ளத்தைப் போல்

தூய்மையானதாக ஆகிவிட்டதால்தான், அவர் நிர்வாணமானதாக் ஆகிவிட்டதால்தான். அவர் நிர்வாணமாக இந்த உலகத்தை சந்தித்தார். தன்னிடம் மறைப்பதற்கு எதுவுமே இல்லையென்று ஒரு மனிதன் எண்ணும்போது. அவன் நிச்சயம் அம்மணமாக இருக்க முடியும்.

தனக்குள் மறைத்து வைத்துக் கொள்ள ஏதோ ஒன்று இருக்கிறது என்று மனிதன் உணர்வதால்தான் அவன் ஆடைகளை அணிகிறான். ஆனால் மறைப்பதற்கு ஒன்றுமில்லை என்னும்போது அவன் ஆடைகள் அணிய வேண்டிய அவசியமில்லை. ஒவ்வொரு தனிமனிதனும் எந்தவிதமான குற்ற உணர்வுமில்லாமல் தூய மனத்தோடு, தெளிவான மனத்தோடு ஆடைகளை நிராகரிக்கும் தகுதியை அடைகின்றதொரு புதிய உலகம் அவசியம் தேவை. அதில் தவறு எங்கே உள்ளது? அம்மணமாக இருப்பதில் என்ன குற்றம் உள்ளது?

வேறு ஏதாவது காரணங்களுக்காக ஆடைகளை அணிந்து கொள்வதென்பது வேறு விஷயம். ஆனால் தான் அம்மணமாக இருப்பதற்கு பயந்து கொண்டு மட்டுமே உடைகள் அணிவது கர்வத்தைத்தான் காட்டுகிறது. அம்மணமாக இருப்பதற்கு பயந்து ஆடைகள் அணிவது உங்களது நிர்வாணத்தை இன்னும் அதிகப்படுத்தி, உங்களது மாசுபடுத்தப் பட்ட மனதிற்கு ஒரு ஆதாரமாக அது இருப்பதைத் தான் குறிக்கிறது. ஆனால் இன்றோ நாம் ஆடைகளை அணிந்தும் கூட நமக்குள் உள்ள நிர்வாணத்தை ஒழிக்க முடியாமல் குற்ற உணர்வுடன்தான் இன்னமும் வாழ்ந்து வருகிறோம்.

இப்படி நான் கூறுவதால் தயவுசெய்து நான் ஆடைகள் அணிய வேண்டாம் என்று கூறுவதாக முடிவு கட்டி விடாதீர்கள். வெறும் பயத்தினால் நமது நிர்வாணத்தை மறைப்பதற்காக ஆடைகளை அணிந்து கொள்வது ஒருபோதும் நமது நிர்வாணத்தை மறைத்ததாக ஆகாது என்பதை நான் கூறுவதற்கு

தயங்கவில்லை. நிர்வாணத்தைப் பற்றிய இந்தச் செயற்கைத் தனமான நம் உணர்வு நமக்கு வெறுப்பூட்டுவதாகவும், பலமிழக்கச் செய்வதாகவும் உள்ளது. ஆனால் இந்த உணர்வு ஒரு நீண்ட சமூக பாரம்பரியத்திலிருந்து வந்து விட்டது.

ஆடைகள் அணிந்தும் ஒருவன் அம்மணமாகத் தெரியலாம். அதேபோல் அம்மணமாக இருந்தும் ஒருவன் ஆடை அணிந்தவனைப் போலும் தெரியலாம். ஆண்களும், பெண்களும் உடம்போடு ஒட்டி அணிகின்ற நவநாகரீக உடைகளை நீங்கள் பார்த்தப் பின்னரும் கூட நான் இதைக் குறித்து இன்னும் விளக்கமாகக் கூற வேண்டுமா? மற்றவர்கள் தங்களை கடைக்கண்ணால் பார்க்க வேண்டும் என்கிற திருப்தியடையாத ஆசைகளின் வெளிப்பாடுதான் இன்றைய நவநாகரீக உடைகள். ஆணும், பெண்ணும் ஒருவர் மற்றொருவரின் உடலைப் பார்த்து பழகிவிட்டால் அதன் பின்னர் உடலைப் பாதுகாப்பதற்காக மட்டுமே நாம் உடைகள் அணிய வேண்டும் என்கிற நோக்கம் தானாகவே வந்து விடும். ஆனால் அந்தோ பரிதாபம்! நவீன காலங்களில் ஆடைகள் காமவெறியைத் தட்டி எழுப்புவதற்கென்றே திட்டமிட்டு தயாரிக்கப்படுகின்றன.

ஆடைகள் வெறும் ஆடைகளாக இல்லாமல், மனிதனின் காமவெறியைத் தூண்டும் சாதனங்களாக மாறிக் கொண்டு வருவதால், மனிதனின் நாகரீக வளர்ச்சி எங்கே போய்க் கொண்டிருக்கிறது? இதனால்தான் நான் ஒரு குறிப்பிட்ட வயது வரை குழந்தைகளையெல்லாம் அம்மணமாக இருக்க அனுமதிக்க வேண்டும் என்று கூறுகிறேன். நமது பாலுணர் விற்காக உடலை மறைக்க வேண்டிய தேவையில்லை. வேறு காரணங்களுக்காகத்தான் உடைகள் தேவை என்பதை அவர்கள் புரிந்து கொள்ள வேண்டும்.

கள்ளம்கபடமற்ற, எளிமையான மனதிற்கு நிர்வாணம் என்பது குற்றமாகத் தெரியாது. அது அழகாகத் தெரியும்.

ஆனால் இதுவரை மனிதன் விஷமூட்டப்பட்டு விட்டான். நாட்கள் செல்லச் செல்ல அந்த விஷம் மெல்ல மெல்ல மனித வாழ்க்கை முழுவதிலும் பரவி விட்டது.

சிறுவயதிலிருந்தே ஒரு பெண்ணுக்கு அவளுடைய கணவனை கடவுளாக நினைக்கச் சொல்லித்தருகிறோம். செக்ஸ் ஒரு பாவச்செயல் என்று சொல்லி வருகிறோம். திருமணமான பின் உடலுறவுகொள்ள அழைக்கும் கணவனை அவள் எப்படி மதிக்க முடியும்.

பாரதீய வித்யா பவன் ஆடிட்டோரியத்தில் முதல் கூட்டத்தில் நான் இந்தத் தலைப்பில் பேசியபோது ஒரு பெண்மணி என்னிடம் வந்து, "நான் மிகவும் நிலைகுலைந்து போய்விட்டேன். உங்கள் மீது எனக்குக் கோபம் வருகிறது. செக்ஸ் என்பது மானக்கேடான விஷயம். காமம் என்பது பாவச் செயல். அதைப் பற்றி நீங்கள் ஏன் இவ்வளவு விரிவாகப் பேசுகிறீர்கள்? நான் உண்மையிலேயே செக்ஸை நிந்திக்கிறேன்" என்று கூறினார்.

இப்போது அந்தப் பெண்மணிக்கு திருமணம் ஆகி மகன்கள், மகள்களோடு இருந்தபோதிலும், அந்தப் பெண்மணி செக்ஸை நிந்திப்பதைப் பாருங்கள். அவளை செக்ஸ் என்னும் அந்தப் பாவச் செயலுக்கு அழைத்துச் செல்கின்ற அவளுடைய கணவனை அவள் எப்படி உண்மையிலேயே நேசிக்க முடியும்? செக்ஸ் என்னும் பாவச் செயலின் மூலம் பிறந்த அந்தக் குழந்தைகள் மீது உண்மையிலேயே எப்படி அன்பு செலுத்த முடியும்? வாழ்க்கையைப் பற்றிய அவளுடைய நோக்கத்தில் விஷம் தெளிக்கப்பட்டு விட்டது. ஆகையால் அவளது அன்பும், நேசமும் விஷமானதாகத்தான் இருக்கும். எனவே நிச்சயமாக அந்தப் பெண்மணிக்கும், அவளது கணவருக்கும் இடையில் அடிப்படையிலேயே பிளவு ஏற்பட்டு விட்டது. அவளுக்கும், அவளது குழந்தைகளுக்கும் இடையில் இருப்பது நிச்சயம் முள்வேலியாகத்தான் இருக்க முடியும். ஏனென்றால்

அவளது எண்ணப்படி குழந்தைகள் பாவத்தின் பழங்கள். அவளுக்கும், அவளது கணவருக்குமிடையே உள்ள உறவு ஒரு பாவச் செயலுக்காகத்தான் உள்ளது என்கிற குற்ற உணர்வு அந்தப் பெண்மணியின் ஆழ் மனதில் அடிக்கடி நடமாடிக் கொண்டிருக்கும். பாவச் செயலோடு யாராவது இணக்கமாக வாழ முடியுமா?

செக்ஸைப் பழித்துக் கூறுபவர்கள்தான் நம் ஒவ்வொருவரின் மண வாழ்க்கையையும் குலைத்து விட்டனர். காமத்தின் மீது மதிப்பு வைப்பதற்குப் பதிலாக அதற்கு எதிராக, பலவந்தமாக அதை ஒழிக்கும் எண்ணமானது அநேக தீய விளைவுகளை ஏற்படுத்தி விட்டது. தனக்கும், தனது மனைவிக்கும் இடையே கண்ணுக்குப் புலப்படாத ஒரு தடையை வைத்துக் கொண்டு, அவளோடு கூடுகின்ற எந்த ஒரு ஆணும் தன் மனைவியுடன் மட்டும் திருப்தி அடைய முடியாது. அவன் நிச்சயமாக அடுத்தப் பெண்களைத் தேடித் திரிவான். அவன் விபச்சாரிகளிடம் செல்வான். அவன் தனது வீட்டில் திருப்தி அடைந்திருந்தால் இந்த உலகத்தில் உள்ள பெண்கள் எல்லோரும் அவனுக்குத் தங்கைகளாவும், தாய்மார்களாகவும் தென்படுவர். ஆனால் இப்போது அவன் தனது மனைவியிடம் திருப்தி இல்லாததால், பார்க்கின்ற எல்லாப் பெண்களையும் தன் மனைவியாக பாவிப்பான். எப்போதும் எதன் பின்னாலாவது போய்க் கொண்டிருப்பான். ஆனால் இது இயற்கைதான். இப்படித்தான் நடக்கும். எதன் மூலம் மனிதன் பேரானந்தம், மகிழ்ச்சி, அமைதி இவைகளைப் பெற்றிருக்க வேண்டுமோ, அவைகளை அவன் விஷமாகவும், எதிரானதாகவும், பாவச் செயல் என்றும் கூறுகிறான். வீட்டில் அவனது அடிப்படைத் தேவை பூர்த்தி செய்யப்படவில்லை. எனவேதான் அவன் கண்ட இடங்களிலெல்லாம் சுற்றுகிறான். தனக்கு திருப்தி கிடைக்காதா என்று மூலை முடுக்குகள் எல்லாம் தேடித் திரிகிறான். அவனது அந்த அடிப்படைத் தேவையை நிவர்த்தி செய்ய மனிதன் என்னென்ன யுக்திகளை கண்டுபிடித்துள்ளான் தெரியுமா! அவன்

கண்டுபிடித்துள்ள வழி முறைகளை பட்டியல் போட்டால் நீங்களே ஆச்சரியமடைவீர்கள்.

அநேகவிதமான தந்திரங்களை கண்டுபிடிக்க, கண்டுபிடிக்க மனிதன் தனது பாதையை விட்டு விலகிச் சென்று விட்டான். ஆனால் அவன் அதனால் ஏற்படும் தீமையை ஒருபோதும் கவனமாக சிந்தித்ததில்லை. எனவே கடலைப் போல் இருந்த அன்பானது இப்போது ஒரு காமக் குட்டையைப் போல் ஆகிவிட்டது. மேலும் அந்தக் குட்டை விஷமாக்கப் பட்டுவிட்டது. தான் செய்தது பாவம், விஷமானது என்கிற மெல்லிய உணர்வு இருக்கும்போது ஒரு கணவன், மனைவி இருவரிடையேயும் ஒருவித தயக்கம் இருக்கும்போது, இந்தவிதமான குற்ற உணர்வுடன் ஒருவரையொருவர் அணுகும் போது அவர்கள் இருவரின் வாழ்விலும் வளர்ச்சியை நிறுத்திவிடுகிறது.

நான் புரிந்துகொண்டவரையில், ஒரு கணவனும் மனைவியும் ஒன்று சேர்ந்து காமத்தைப் பாராட்டி, ஒருவருக்கொருவர் புரிந்துகொண்டு அன்பு செலுத்தி, அதிக சந்தோஷமாகவும், எந்தவிதமான துக்கமும் இல்லாமல் இருப்பார்களேயானால் இன்று இல்லையென்றாலும் நாளை அவர்களின் உறவு மாறிமேம்பட்டுவிடும். அவர்கள் உயர்ந்த நிலைக்கு செல்லமுடியும். அப்படி நடந்த பின் அதே மனைவிதான் அப்போதும் இருப்பாள். ஆனால் அவள் ஒரு தாயின் உருவில் இருப்பாள்!

அன்னை கஸ்தூரிபாய் ஒருமுறை காந்தி மற்றும் அவரது கூட்டத்தினருடன் இலங்கைக்குச் சென்றார். அவர்களுக்கு வரவேற்பு அளித்தவர், தனது வரவேற்பு உரையின்போது காந்தியோடு இந்தப் பயணத்தில் கலந்துகொண்டு அவருக்குப் பின் அமர்ந்திருக்கும் காந்தியின் தாயாரை காண்பதற்கு நாங்கள் எவ்வளவு அதிர்ஷ்டம் செய்திருக்க வேண்டும் என்று கூறினார். காந்தியின் செயலாளர் அதிர்ச்சியடைந்தார். அது அவருடைய

தவறுதான். அந்தக் கூட்டம் ஆரம்பிக்கும் முன்பே காந்தியின் செயலாளர், காந்தியோடு வந்தவர்களை அந்தக் கூட்டத்தை ஏற்பாடு செய்தவர்களுக்கு முதலிலேயே அறிமுகப்படுத்தி யிருக்க வேண்டும். ஆனால் இப்போது ஒன்றும் செய்ய முடியாது. தவறான அறிமுகம் நடந்து விட்டது. அப்போது காந்தி மைக்கின் அருகில் தனது பேச்சை ஆரம்பிப்பதற்காகச் சென்றார். காந்திஜி தன்னை திட்டமாட்டார் என்பதை அந்த வரவேற்பாளர் அறிந்திருக்கவில்லை. ஏனென்றால் கணவனிடம் மனைவியின் ஸ்தானத்திலிருந்து தாய் ஸ்தானத்திற்கு மாறுகின்ற பெண்கள் மிக மிக அபூர்வம்.

காந்திஜி அவரது பேச்சின்போது, "என்னை அறிமுகப்படுத்திய நண்பர் தவறுதலாக உண்மையைச் சொன்னது குறித்து சந்தோஷமடைகிறேன். கடந்த சில வருடங்களாக கஸ்தூரிபா உண்மையிலேயே எனது தாயாக மாறிவிட்டாள். ஒரு காலத்தில் அவள் எனது மனைவியாக இருந்தாள். ஆனால இப்போது அவள் எனது 'தாய்'" என்றார்.

இருவரும் சேர்ந்தால் இது சாத்தியப்படும். ஒரு கணவனும், மனைவியும் தங்களின் உடலின்ப வாழ்க்கையைப் பற்றி ஆராய்வதற்கு சிறிதளவு முயற்சி எடுத்தாலே போதும். அவர்கள் இருவரும் நண்பர்களாகி அந்த காம சக்தியை மாற்றமடையச் செய்ய ஒருவருக்கொருவர் உதவமுடியும். ஒரு கணவனும், மனைவியும் காம சக்தியை மாற்றியமைப்பதில் என்றைக்கு வெற்றி பெறுகிறார்களோ, அன்றிலிருந்து அவர்களுக்கு இடையில் நன்றியுணர்ச்சி பொங்கி எழும். ஆனால் இன்றைய தினமோ கணவன் மனைவிகளுக்கு இடையில் கண்ணுக்குப் புலப்படாத, அவர்களோடு பிறந்த விரோத மனப்பான்மைதான் உள்ளது. அவர்களுக்கிடையில் அமைதியான நட்பு இல்லை; எப்போதும் சண்டைதான் உள்ளது.

ஒருவர் மற்றொருவரின் காம இச்சைகளை திருத்தி யமைக்கும் ஒரு கருவியாக மாறிவிடும்போது கணவன்,

மனைவியினிடையே ஒருவித ஆழ்ந்த திருப்தி உணர்வு ஏற்படுகிறது. காமத்தின் மேலெழுந்து செல்வதில், காமத்தைக் கடந்து அதற்கு மேல் செல்வதில் இருவரும் கூட்டாளிகள் ஆகிவிடும்போதுதான் அவர்களுக்கிடையே உண்மையான நட்பு மலர்கிறது. அந்த நாளில்தான் ஆண் பெண்ணுக்கு மரியாதை கொடுக்க ஆரம்பிப்பான். ஏனென்றால் அவன் காமத்திலிருந்து விடுதலை பெறுவதற்கு அந்தப் பெண்தானே உதவினாள். அதேப்போன்று அந்த நாளில்தான் பெண்ணும் ஆணைப் பற்றி மரியாதை நிறைந்தவளாக ஆவாள். ஏனென்றால் ஆண்தான் அவ்வளை காமத்திலிருந்து விடுவித்தவனாகிறான். அன்றைய தினத்திலிருந்துதான் அவர்கள் இருவரும் காமக்கலப்பு இல்லாத தூய்மையான அன்பு இணக்கத்துடன் வாழ ஆரம்பிக்கின்றனர்.

மனைவிக்கு கணவன் கடவுளாகவும், கணவனுக்கு மனைவி தெய்வமாகவும் மாறுகின்ற அந்தப் பயணத்தின் ஆரம்பம் அதுதான். ஆனால் இப்போது நடக்க முடியாதபடி விஷம் தூவப்பட்டு விட்டது.

என்னைப் போல் செக்ஸிற்கு எதிரான ஒருவரைக் காண முடியாது என்று நேற்று நான் கூறினேன். அதனால் நான் செக்ஸை திட்டுவதாகவும், அதை எதிர்ப்பதாகவும் அர்த்த மில்லை. செக்ஸைக் கடந்து அதற்கப்பால் செல்வதற்கான வழியைக் காட்டத்தான் செக்ஸ் எப்படி மேம்படுத்தி அமைக்கலாம் என்பதை சுட்டிக் காட்டுவதற்காகத்தான் நான் அப்படிச் சொன்னேன். ஒரு விதத்தில் நான் செக்ஸின் விரோதிதான். ஏனென்றால் கரியானது வைரமாக மாற்றப்பட வேண்டும் என நான் சிபாரிசு செய்கிறேன். செக்ஸை மாற்றி மேம்படுத்த வேண்டுமென நான் விரும்புகிறேன்.

அதை எப்படிச் செய்வது? அதற்கான வழிமுறை என்ன? அதற்கு மற்றொரு கதவு, ஒரு புதிய வாசல் திறக்கப்பட வேண்டும் என்று முன்பே கூறினேன். குழந்தை பிறந்தவுடன்

அதனிடம் செக்ஸ் உடனே தலைக்காட்டுவதில்லை. குழந்தையின் உடல் சக்தியை சேகரிக்கிறது. செல்கள் பலத்தைப் பெறுகின்றன. மேலும் அதன் உடல் முழு அளவில் வளர்ச்சியடைவதற்கு இன்னும் அதிக காலம் தேவைப்படுகிறது. சக்தியடைவதற்கு இன்னும் அதிக காலம் தேவைப்படுகிறது. சக்தியெல்லாம் ஒன்று திரண்டு முதல் 14 ஆண்டுகளாக மூடியிருந்த ஒரு வாசலைத் திறக்கிறது. இதுதான் காம உலகில் குழந்தையை அறிமுகப்படுத்தும் வேளை. எனவே இந்த ஒரு வாசல் திறந்து விட்டால் மற்றொரு புதிய வாசலைத் திறப்பது மிகவும் கடினம். ஏனென்றால் ஒருவனின் உயிர்ச்சத்தானது. அது எந்த வழியை வலுக்கட்டாயமாகத் திறந்ததோ அந்தத் திசையிலேயேதான் பாய்ந்து செல்ல முயலுவது இயற்கையின் நியதி. கங்கை நதியானது ஒருமுறை தனது பாதையை அமைத்து விட்டால் அது தொடர்ந்து அந்தப் பாதையில்தான் பாய்ந்து செல்லும். அது ஒவ்வொரு நாளும் ஒரு புதிய பாதையைத் தேடுவதில்லை. தினமும் புது வெள்ளம் வந்து சேரலாம் என்றாலும், அது தொடர்ந்து அதே வாய்க்காலில்தான் பாய்ந்து செல்லும். அதேப்போன்று, மனிதனின் உயிர்ச்சத்தும் தனக் கென்று ஒரு வழியைத் தேடிக்கொண்டு அந்த வழியிலேயே தொடர்ந்து பயணம் செய்கிறது.

எனவே மனிதன் இந்தக் காமவேட்கையிலிருந்து குணப்படுத்தப்பட வேண்டுமெனில், அவனுக்கு செக்ஸின் முதல் கதவு, காமத்தில் முதல் வாசல் திறப்பதற்கு முன்பே வேறொரு புதிய வாசலைத் திறந்துவிட வேண்டியது அவசியமாகிறது. அந்தப் புதிய வாசல்தான் "தியானம்".

எனவே ஒவ்வொரு குழந்தைக்கும் அதன் இளம் வயதிலேயே தியானம் கற்றுக் கொடுக்கப்பட வேண்டும். தியானத்தைப் பற்றி சொல்லிக் கொடுக்க வேண்டும். செக்ஸைப் பற்றி தவறான போதனைகளை அதற்கு அளிப்பதை ஒழித்துக் கட்ட வேண்டும். தியானம் அதற்கு கற்றுக் கொடுக்கப்பட வேண்டும். தியானம்தான் நேரான வாசல். அதுதான் உன்னதமான

வாசல். தியானம், செக்ஸைப் பற்றி தப்பான எண்ணங்களைக் கூறாதீர்கள். அதற்கு மாறாக குழந்தைகளுக்கு தியானம் செய்ய கற்றுக் கொடுங்கள்.

குழந்தைகளுக்கு செக்ஸ் பற்றி போதிப்பதை எதிர்ப்பது, குழந்தைகள் மேலும் அவர்கள் வாழ்க்கையில் அதில் அதிக ஆர்வம் காட்டத்தான் தூண்டுகிறது. எனவே அது முற்றிலும் தவறான அணுகுமுறை. பின்னால் அது அவர்களைப் பக்குவப்படாத, நெறி கோணிச் செல்கின்ற செக்ஸ் நடவடிக்கைகளுக்கு இட்டுச் செல்கிறது. ஆனால் அவர்களின் இளம் வயதில் எந்த ஒரு வாசலும் திறக்காதபோது, இரண்டு வாசல்களும் மூடியிருக்கும்போது, அவர்களது சக்தியானது பத்திரமானதாக இருக்கும்போது எந்த வாசலை வேண்டுமானாலும் திறக்க முடியும். ஆனால் தொடர்ந்து நாம் செக்ஸைப் பற்றியே திரும்பத் திரும்பப் பேசுவது செக்ஸின் கதவுகளை நாமே தட்டுவது போலாகி விடுகிறது. வளர்ந்தபிறகு தியானத்தை ஆரம்பிப்பது கடினம்.

ஒரு இளம் செடியை நாம் எந்த திசையில் வேண்டுமானாலும் வளைக்க முடியும். அதுவும் நாம் விரும்பியபடி பணிவுடன் வளைந்து கொடுக்கும். ஆனால் அதை விட்டு விட்டு பின்னால் நீங்கள் அதை வளைக்க முயன்றால் அது ஒடிந்துதான் போகும். இதே கதைதான் குழந்தைகளுக்கும் பொருந்தும்.

வயதாகிவிட்ட ஒருவர் தியான நிலையை அடைவது மிகவும் கடினம். வயதானவர்கள் தியானம் செய்ய முயற்சிப்பது, பருவம் முடிந்த பின் விதை விதைப்பதைப் போன்றது. தியானம் என்னும் விதையை குழந்தைகளிடம் மிக எளிதில் விதைக்க முடியும். ஆனால் இப்போதிருக்கும் மனிதனோ அவனது வாழ்க்கையின் இறுதி காலத்தில்தான் தியானத்தின் மீது ஆர்வம் காட்டுகிறான். அவன் தனது சக்தியெல்லாம் வடிந்த பின்பு, முன்னேறுவதற்கான எல்லா சாத்தியங்களும் உலர்ந்து போனபின்தான் தியானம் செய்ய வேண்டும் என்று ஆர்வம்

கொள்கிறான். அப்போதுதான் அவன் தியானத்தைப் பற்றியும், யோகாவைப் பற்றியும் விசாரிக்கிறான். ஏற்கனவே ஒருவிதமான அச்சாக அவன் வார்ப்படம் ஆன பின்னர் அதை மாற்றுவதற்கு விரும்புகிறான். மாற்றியமைக்க முயல்கிறான். கல்லறையின் மீது ஒரு காலை வைத்துக் கொண்டிருக்கிற வயதில் மனிதன் தியானத்தின் மூலம் முக்தியடைவதற்கு ஏதாவது செய்ய முடியுமா என்று கேட்கிறான். இது விநோதமாக இருக்கிறதல்லவா? இந்த எண்ணமே பைத்தியக்காரத்தனமாக தோன்றுகிறது.

ஒவ்வொரு இளம் மனதிலும் தியானத்தின் பயணத்தை நாம் ஆரம்பித்து வைக்காத வரையில் இந்த பூமியில் அமைதி ஒருபோதும் ஏற்படாது. ஆனால் இதை தமது வாழ்க்கைச் சாலையின் இறுதியில் இருக்கின்ற மனிதர்களிடம், வாழ்வின் அந்திம காலத்தில் உள்ள மக்களிடம் முயன்றுபார்ப்பது வீணானதுதான். அப்படியே அவர்களிடம் இதை முயற்சித்துப் பார்க்க வேண்டுமெனில் அதற்குக் கடும் பிரயத்தனம்செய்ய வேண்டும் என்றாலும் அது அந்த அளவுக்கு பலனை அளிக்காது. ஆனால் இதை அவர்கள் வாழ்க்கையின் முன்பகுதியிலேயே முயன்றிருந்தால் அதை சாதிக்க முடியும். அப்போது அதற்கு அதிகப்பிரயத்தனம் தேவைப்படாது.

எனவே செக்ஸை, காம வேட்கையை மாற்றியமைப் பதற்கு, திருத்தியமைப்பதற்கான முதல்படி சிறு குழந்தையாய் இருக்கும்போதே தியானத்தை ஆரம்பித்து வைப்பதுதான். அவர்களுக்கு அமைதியாய் இருக்க பயிற்சி அளிப்பதும், மௌனமாக இருக்கக் கற்றுக் கொடுப்பதும், மனதின் குறுக்கீடு இல்லாமல் வெறுமனே இருக்கும் நிலையை விளக்கிச் சொல்வதும்தான் முதல்படி. பெரியவர்களோடு ஒப்பிடும்போது குழந்தைகள் ஏற்கனவே அமைதியாகவும், மௌனமாகவும் இருப்பதால் அந்த நேரத்தில் தினமும் கொஞ்ச நேரமாவது அவர்களுக்கு மௌனத்தையும், அமைதியையும் கற்றுக் கொடுத்து, அவர்களுக்கு சரியான திசையில் வழி காட்டினால்,

அவர்கள் பதினான்கு வயது ஆவதற்குள் அந்தப் புதிய வாசலைத் திறக்க முடியும். அப்போது அவனிடம் சக்தி ஏற்கனவே திறந்து விடப்பட்ட புதிய வாசல் வழியாக வழிந்தோடும். அவர்கள் ஏற்கனவே அமைதியை உணர்ந்து விடுவார்கள். செக்ஸ் அனுபவம் அவர்களுக்கு ஏற்படுவதற்கு முன்பே அவர்கள் தியானத்தின் மூலம் "நான்" என்னும் அகந்தையில்லாத நிலையையும், காலம் இல்லாத நிலையையும் அதன் மூலம் கிடைக்கின்ற பேரானந்தத்தையும், மகிழ்ச்சியையும் உணர்ந்துவிடுவார்கள். இந்தப் பழக்கம் அவர்களது சக்தியை தவறான வாய்க்கால்களில் வழிந்தோடு வதைத் தடுத்துவிடும். அது அந்தச் சக்தியை சரியான பாதையில் செலுத்திவிடும்.

குழந்தைகளுக்கு நாம் தியானத்தின் சாந்தநிலையை போதிப்பதற்குப் பதிலாக செக்ஸைப் பற்றிய அருவருப்பைப் போதிக்கிறோம். செக்ஸ் என்பது பாவச் செயல், செக்ஸ் அசிங்கமானது என்று நாம் கூறுகிறோம். அவர்களிடம் அது அசிங்கமானது, தப்பானது என்று கூறுகிறோம். அதை நரகம் என்கிறோம் நாம். ஆனால் மேற்கண்ட பெயர்களையெல்லாம் நாம் குழந்தையிடம் கூறிவிடுவதால் அவர்களின் உண்மையான சூழ்நிலையை ஒருபோதும் மாற்றிவிட முடியாது. அதற்கு மாறாக குழந்தைகள் அதன்மீது மிகுந்த ஆவலுடையவர்களாக ஆகிவிடுவார்கள். அந்த நரகத்தைப் பற்றி, அந்தக் கெட்ட செயலைப் பற்றி, அந்த அசிங்கத்தைப் பற்றி அவர்கள் அறிந்து கொள்ள விரும்புவது பெற்றோர்களையும், ஆசிரியர்களையும் பயத்தில் ஆழ்த்தி விடுகிறது. எங்காவது தங்களுக்கு விடை கிடைக்காதா என்று அவர்கள் ஒவ்வொரு இடத்திலேயும் தேடுகின்றனர். அந்தக் குழப்பத்தில் என்னதான் உள்ளது என்று புரிந்து கொள்ள அவர்கள் ஆர்வப்படுகின்றனர்.

ஆனால் வெகு சீக்கிரமே குழந்தைகள் தங்களது பெற்றோர்கள் மட்டும் அந்தத் தொழிலில் ஈடுபடுவதை அறிய வருகின்றனர். தாங்கள் எதை அறிந்து கொள்ளக் கூடாது என்று

அனுமதி மறுக்கப்படுகிறதோ அதே விஷயத்தை பெற்றோர்கள் செய்வதை குழந்தைகள் அறிந்து கொள்கின்றனர். இந்த உண்மையை அவர்கள் கண்டுபிடித்த உடனேயே தானாகவே குழந்தைகளுக்கு தங்கள் பெற்றோர் மீதுள்ள மதிப்பு முடிந்து போகிறது. நாம் எல்லோரும் நம்புவதுபோல் பெற்றோர்கள் மீது குழந்தைகளின் மதிப்பு குறைவதற்கு காரணம் தற்போதையக் கல்வி அல்ல. இதற்குப் பெற்றோர்கள்தான் குற்றவாளிகள். குழந்தைகள் முன்னுக்குப்பின் முரணானவைகளை எளிதில் கிரகித்துக் கொள்வார்கள். தங்கள் பெற்றோர்கள் தாங்கள் எதை வெறுக்க வேண்டும் என்று கற்றுக் கொடுக்கிறார்களோ அந்த விஷயத்திலேயே அவர்கள் முழுவதும் மூழ்கியிருப்பதை சீக்கிரமே குழந்தைகள் அறிந்து விடுகின்றனர்.

குழந்தைகள் மிகவும் கூர்ந்து கவனிக்கக் கூடியவர்கள். உங்களது இரவு வாழ்க்கையானது உங்களது பகல் வாழ்க்கையிலிருந்து முற்றிலும் மாறுபட்டதாக இருப்பதை அவர்கள் காண்கின்றனர். நீங்கள் சொல்வதற்கும் நீங்கள் செய்வதற்கும் அதிக வித்தியாசம் இருப்பதை காண்கின்றனர். வீட்டில் என்ன நடக்கிறது என்பதை அவர்கள் பார்க்கின்றனர். அப்பா அதை "அசிங்கமானது" என்றும், அம்மா அதை "கெட்டது" என்றும் கூறினாலும்கூட அதே விஷயங்கள் வீட்டில் நடைபெறுவதைப் பார்க்கின்றனர். என்ன நடக்கிறது என்பதை அவர்கள் உன்னிப்பாகக் கவனித்து வருவதால் பெற்றோர்களின் மீது எல்லா மதிப்பையும் இழக்கின்றனர். பெற்றோர்கள் தந்திரக்காரர்கள், போலித்தனமானவர்கள் என்று அவர்கள் முடிவு கட்டுகின்றனர்.

மேலும் பெற்றோர்களை மதிக்காத குழந்தைகளிடம் ஒருபோதும் கடவுள் மீது நம்பிக்கையை வளர்க்க முடியாது என்பதையும் ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள். குழந்தைகள் தங்களது நம்பிக்கையின் முதல் தரிசனத்தை, கடவுட்தன்மையின் முதல் தரிசனத்தை பெற்றோர்களின்

தூய்மையின் மூலம்தான் பெறுகின்றனர். இந்நம்பிக்கை குலைக்கப்படுமானால் நிச்சயம் அவர்கள் நாத்திகர்களாக வளர்ந்துவிடுவார்கள். தங்களது பெற்றோர்களின் நேர்மையால்தான் குழந்தைகள் முதன் முதலில் கடவுளை அறிகின்றனர். எனவே அது ஒரு பொய்த் தோற்றமாக ஆகிவிட்டால் அந்தக் குழந்தைகளை கடவுள்ள நோக்கித் திருப்புவது மிகவும் கடினம். கடவுளுக்கும். அவர்களுக்குமிடையே உள்ள தொடர்பு அறுந்துபோகும். ஏனென்றால் அவர்களின் முதல் தெய்வமே அவர்களை நம்பிக்கைத் துரோகம் செய்துவிட்டனர். ஏனென்றால் அவர்களின் தாயும், தகப்பனாரும் மரியாதைக்குரியவர்கள் அல்ல என்று நிரூபித்துவிட்டனர்.

இன்று இளம் தலைமுறையினர் கடவுளோ ஆன்மாவோ இருப்பதை மறுக்கின்றனர். முக்தி என்பது கேலிக்கூத்து என்கின்றனர். சமயநெறியை போலித்தனம் என்கின்றனர். இதையெல்லாம் அவர்களாகத் தேடி அலைந்த பின் எடுத்த சொந்த முடிவல்ல. இவையெல்லாம் அவர்களது பெற்றோர்கள் அவர்களுக்குச் செய்த நம்பிக்கைத் துரோகம்தான். எதையெடுத்தாலும் குறை கூறுகின்ற வாழ்க்கைக்கு பெற்றோர்கள் அவர்களை நாடு கடத்தி விட்டனர். அவர்களுக்கு நம்பிக்கைத் துரோக உணர்வு வருவதற்குக் காரணம் பெரியவர்கள் செக்ஸைப் பற்றி தவறாக கூறிவிட்டதுதான். செக்ஸ் என்பது வாழ்க்கையின் ஒரு பகுதிதான் என்பது அவர்களுக்குத் தெளிவாக, வெளிப்படையாக விவரிக்கப்பட வேண்டும். நாம் செக்ஸினால்தான் பிறந்தோம். எனவே அந்த செக்ஸ் நமது வாழ்வின் ஒரு பகுதிதான் என்று கூறப்பட வேண்டும். இதனால் அவர்கள் பெற்றோர்களின் நடவடிக்கைகளை சரியான கோணத்தில் புரிந்துகொள்ள முடியும். மேலும் அவர்கள் வளர்ந்து அதன் பின் வாழ்க்கையை அவர்களே அனுபவிக்கும்போது தங்களது பெற்றோரின் நேர்மைக்காக நன்றிப்பெருக்கு நிறைந்து காணப்படுவர். ஆரம்பத்தில்

குழந்தையிடம் இதுபோன்ற நம்பிக்கையும், மரியாதையும் அதன் மதவாழ்க்கைக்கு அஸ்திவாரமாக அமையும். ஆனால் இன்று குழந்தைகள் தங்கள் பெற்றோரை போலிகள் என்று சந்தேகம் கொள்கின்றனர். எனவேதான் இன்று மூத்த தலைமுறைக்கும் இளைய தலைமுறைக்கும் இடையே கருத்துவேற்றுமைகள் அதிகமுள்ளன. காமத்தை அடக்கி வைத்தல் கணவனை மனைவியிடமிருந்து பிரித்துவிட்டது. மேலும் குழந்தைகளை அவர்களின் பெற்றோர்களிடமிருந்து தனிமைப்படுத்திவிட்டது.

செக்ஸை அடக்கி வைத்தல் நமக்குத் தேவையில்லை. செக்ஸைப் பற்றி தெளிவுபடுத்துதல்தான் இப்போதைய அவசியத் தேவை. குழந்தைகள் பக்குவம் அடையும்போது பெற்றோர்கள் வாழ்க்கையின் முக்கியமான உண்மைகளை அவர்கள் ஏற்றுக்கொள்ளக்கூடிய முறையில் அவர்களுக்குச் சொல்ல வேண்டும். அவர்கள் அனாவசியமாக, தீங்கான வழிகளில் ஆர்வம் காட்டும் முன்பு இது செய்யப்படவேண்டும். அவர்களது ஆர்வத்தை இழுத்துச் செல்கின்ற ஆரோக்கியமற்ற கவர்ச்சிகள் வளர்வதற்குமுன் இதுசெய்யப்பட வேண்டும். இல்லையேல் இன்றுள்ள நிலைமையை போல் குழந்தைகள் தாங்கள் எதைத் தெரிந்து கொள்ள வேண்டுமோ அதை அவர்களாகவே தெரிந்து கொள்வார்கள். ஆனால் அதை அவர்கள் தவறான மனிதர்களிடமிருந்து கற்றுக் கொள்வர். அவர்கள் அதை அளவுக்கு மீறிய நிலைகளிலும், அபாயகரமான செயல் முறைகளாலும் கற்றுக் கொள்வர். அந்த வழிகள் அவர்களை அழித்துவிடும். அதன் விளைவுகள் அவர்களை தங்களின் எஞ்சிய வாழ்நாள் முழுவதும் வேதனைப்படவும், துன்புறவும் செய்துவிடும். முடிவாக பெற்றோர்களுக்கும் அவர்களது குழந்தைகளுக்கும் இடையில் வெட்கம் மற்றும் இரகசிங்கள் நிறைந்த ஒரு மாபெரும் சுவர் எழுப்பப்பட்டுவிடும்.

பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளின் செக்ஸ் வாழ்க்கையைப் பற்றி ஒருபோதும் அறிந்து கொள்வதில்லை. அதேபோல் குழந்தைகளும் தங்களது பெற்றோர்களின் செக்ஸ்

வாழ்க்கையைப் பற்றி ஒன்றும் அறிந்திலர். இப்படி ஒருவருக் கொருவர் ஓடி ஒளிந்து விளையாடும் விளையாட்டினால் அவர்களுக்குள் விரோதம் வளர்ந்து அபாயத்தை விளைவிக்கும். குழந்தைகளுக்கு செக்ஸ் பற்றி சரியான கல்வி போதிக்கப்பட வேண்டும். இரண்டாவதாக குழந்தைகளுக்கு தியானம் செய்வதற்கு கற்றுக்கொடுக்க வேண்டும். அமைதியாக, சாந்தமாக, மௌனமாக இருப்பது எப்படி, மனதின் தலையீடு இல்லாமலிருப்பது எப்படி என்று அவர்களுக்குச் சொல்லிக் கொடுக்க வேண்டும். குழந்தைகள் இவற்றை வெகுசீக்கிரத்தில் கற்றுக்கொள்ள முடியும். குழந்தைகளை ஒரு குறிப்பிட்ட நேரத்தில் மௌனமாக இருப்பதற்கு ஒவ்வொரு வீட்டிலும் பழக்கப்படுத்த வேண்டும். பெற்றோர்களாகிய நீங்களும் அவர்களோடு சேர்ந்து மௌனத்தை பயிற்சிசெய்தால்தான் அது சாத்தியப்படும். ஒவ்வொரு வீட்டிலும் தினமும் ஒரு மணி நேரம் எல்லோரும் மௌனமாக அமர்ந்திருக்க வேண்டும். ஒரு வேளை உணவைக் கூட நாம் சாப்பிட மறந்துவிடலாம். ஆனால் அந்த ஒருமணி நேர மௌனத்தை என்ன விலை கொடுத்தாவது அனுபவித்துப் பழக வேண்டும். ஒரு நாளைக்கு ஒருமணி நேரம் மௌனமாக உட்காராத வீட்டை வீடு என்று அழைப்பதே தவறு. அதை ஒரு குடும்பம் என்று அழைக்க முடியாது.

தினமும் ஒருமணி நேரம் மௌனமாக இருப்பது சக்தியை சேகரம் செய்கிறது. அதன்பின் 14வது வயதில் அது சக்தி அலையில் மிதந்து தியானத்தின் வாயிலைத் தள்ளித் திறக்கிறது. அப்படிப்பட்ட தியான நிலையில் மனிதன், "நான்" என்னும் ஆணவமற்று, காலம் போவது தெரியாமல், தனது ஆன்மாவை, தனக்குள்ளிருக்கும் உயர்ந்த ஒன்றைக் கண்டு கொள்கிறான். செக்ஸ் அனுபவம் ஏற்படுவதற்கு முன்பே தியானத்தின் மூலம் அந்த உச்சியை சந்தித்தால் அது மனிதன் செக்ஸின் பின்னால் பைத்தியம் போல் ஓடித்திரிவதற்கு ஒரு முற்றுப்புள்ளி வைத்துவிடும். அந்த சக்தியானது ஒரு நல்ல, பேரானந்தமான, மேன்மையான பாதையில் சென்றுவிடும்.



காமத்திலிருந்து கடவுளுக்கு...

பிரம்மச்சரியத்தின் முதல்படி காமத்தை கடந்து செல்வதுதான். அதற்கான வழிதான் தியானம். இரண்டாவதுபடி அன்பு. சிறுவயது முதற்கொண்டே குழந்தைகளுக்கு அன்பு செலுத்த கற்றுக் கொடுக்க வேண்டும். மனிதனுக்கு அன்பை போதித்தால் அது மனிதனை செக்ஸ் என்னும் சிக்கலான வழியில் தள்ளிவிடும் என்று பொதுவானதொரு பயம் உள்ளது. ஆனால் அந்த பயம் ஆதாரமற்றது. செக்ஸைப் பற்றி போதிப்பது மனிதனை அன்பு செலுத்தச் செய்யும். ஆனால் அன்பைப் பற்றி போதிப்பது ஒருபோதும் அவனை காம வேட்டைக்கு இழுத்துச் செல்லாது. பொதுவான நம்பிக்கைக்கு எதிரானதுதான் இந்த உண்மை. செக்ஸ் சக்தியானது அன்பாக மாற்றப்படுகிறது.

ஒரு மனிதனுக்குள் எந்த அளவுக்கு அன்பு வளர்கிறதோ அந்த அளவுக்கு அவன் அவனைச் சுற்றியுள்ளவர்களிடம் அன்பைப் பரப்ப முடியும். அன்பில்லாதவர்கள்தான் காமம் நிறைந்திருப்பார்கள். அவர்கள் எப்போதும் பாலுணர்வு எண்ணங்களிலேயே இருப்பார்கள். மனிதனின் வாழ்க்கையில் அன்பு குறையக்குறைய வெறுப்பு அதிமாகும். மனித வாழ்வில் அன்பு குறைந்தால் அவனது வாழ்வு துவேஷம் நிறைந்து காணப்படும். மேலும் அன்பு அறவேயில்லாதவர்கள் முழுவதும் பொறாமை நிறைந்து காணப்படுவர். குறைவாக அன்பு செலுத்தும் மனிதன் அதிக சச்சரவுகளை உண்டாக்குவான். மக்களின் வாழ்வில் அன்பு எந்த அளவுக்கு குறைவாக உள்ளதோ. அதே அளவுக்கு அவர்கள் துக்கம், கவலை நிறைந்தவர்களாக இருப்பார்கள். மேலும் மனிதன் கவலை, பொறாமை, பகட்டு, பொய் போன்ற இவற்றில் எந்த அளவுக்கு அதிகம் சூழப்படுகிறானோ அந்த அளவுக்கு அவனது சக்திகள் பலவீனமாகி, மெலிந்து, போய்விடும். அவன் எப்போதும் பதட்டத்தில் இருப்பான். அவனது கொடூரமான, தரம் குறைந்த கெட்ட உணர்ச்சிக்கு ஒரே வடிகால் செக்ஸாகத்தான் உள்ளது.

ஆனால் அன்பு சக்திகளை செலவிட வழிகாட்டும். அன்பு பாய்ந்து செல்வது. அது ஒரு ஆக்கச்செயல். ஆகவே அது வழிந்தோடி எல்லாவற்றையும் நிரப்பக் கூடியது. செக்ஸின் மூலம் கிடைக்கின்ற திருப்தியைவிட அன்பின் மூலம் கிடைக்கின்ற திருப்தி அதிக மதிப்புமிக்கது. ஆழமானது. அந்தத் திருப்தியை அறிந்து கொண்ட எவரும் வேறு மாற்று வழிகளை நாடிச் செல்லமாட்டார். நவரத்தினக் கற்களை கண்டுகொண்ட மனிதன் ஒருபோதும் சாதாரணக் கல்லை நாடிச் செல்லமாட்டான்.

ஆனால் முழுவதும் வெறுப்பு நிறைந்த மனிதன் ஒருபோதும் திருப்தியடையமாட்டான். அவன் எப்போதும் அமைதியற்று இருப்பான். அவன் தனது பாதையில் உள்ள எல்லாவற்றையும் அழிப்பான். அழிப்பது ஒருபோதும் சந்தோஷத் தைக் கொடுக்காது. ஏதாவது ஒன்றை படைப்பது ஒன்றுதான் மனிதனுக்கு திருப்தி உணர்வைக் கொடுக்க முடியும். பொறாமை நிறைந்த ஒரு மனிதன் எப்போதும் சண்டை போடுபவனாக, போட்டி போடுபவனாக இருக்கிறான். ஆனால் அப்படியிருப் பது ஒருபோதும் திருப்தியைக் கொடுக்காது.

ஆனால் பேரானந்தம் என்பது நாம் மற்றவர்களுக்கு கொடுப்பதன் மூலமே பெறக்கூடியது. பிறரிடமிருந்து பிடுங்கிக் கொள்வதில் பேரானந்தம் கிட்டாது. கண்ணில் கண்டதை யெல்லாம் சுருட்டிகொண்டும், பதுக்கிக் கொண்டும் வாழ்வது ஒருபோதும் மன அமைதியைக் கொடுக்காது. ஆனால் மற்றவர் களுக்கு நாம் வாரிக் கொடுப்பதன் மூலம் மன அமைதி பெறமுடியும். பேராசை உள்ள மனிதன் ஒரு பதவியிலிருந்து இன்னொரு பதவிக்கு தாவுகிறான். ஆனால் அதிகாரத்தின் பின் செல்பவர்களைவிட அன்பின் பின்னால் செல்பவர்கள்தான். அன்பை எங்கும் விநியோகம் செய்பவர்கள் தான் பேரானந்தத்தில் வாழ முடியும். மனிதன் எந்த அளவுக்கு அன்பினாலும், திருப்தியினாலும் நிறைவு மனதுடனும்

இருக்கிறானோ அவ்வளவுக்கு அவனுடைய உடலின் ஒவ்வொரு உயிர் அணுவிலும் முழுமை ததும்பி வழியும். இவ்வளவு ஆனந்தமாய் உள்ள மனிதன் இப்படி செக்ஸைப் பற்றி ஒருபோதும் கவலைப்படமாட்டான். அது இருக்கும் திசையைக் கூட அவன் திரும்பிப்பார்க்க மாட்டான். ஏனெனில் செக்ஸின் மூலம் அவனுக்கு கிடைக்க வேண்டிய திருப்தியும், சந்தோஷமும் அவனுக்கு அன்பின் மூலம் கிடைத்துவிடுகிறது.

எனவே அடுத்த வழி அன்பினில் முழுமையான வளர்ச்சியடைவதுதான். அன்பை நாம் ஆதரிக்க வேண்டும், அன்பை நாம் கொடுக்க வேண்டும், அன்பாகவே நாம் வாழவேண்டும். மற்றவர்கள் மீது அன்பு செலுத்துவது என்று மனிதர்களின்மேல் மட்டும் அன்பாய் இருப்பதல்ல. அன்பின் தீட்சை அன்பாகவே மாறிவிடுவதன் தொடக்கமானும். இதனால் ஒருவனுடைய மொத்த மெய்யிருப்பே அன்பாக (being) மாறிவிடும். ஒரு நண்பனைக் தூக்குவதுபோல் நம்மால் ஒரு கல்லைத் தூக்க முடியும். ஒரு நண்பனின் கையைப் பிடிப்பது போல் ஒரு விரோதியுடன் கைகுலுக்கும் தகுதியை நாம் பெற முடியும். சிலபேர் ஜடப் பொருட்களுக்குக் கூட அன்பான கவனிப்பு கொடுக்கின்றனர் அதேசமயம் சிலர் ஜடப்பொருளுக்குக் கூட கொடுக்கக் கூடாத வகையிலான உபச்சாரத்தை மற்ற மனிதர்களுக்கு கொடுக்கின்றனர். வெறுப்பினால் நிரம்பியுள்ள ஒரு மனிதனுக்கு மற்ற மனிதர்கள் உயிரற்ற ஜடப்பொருளைவிட மேலாகத் தெரிவதில்லை. ஆனால் அன்பினால் நிறைந்துள்ள மனிதன் அவன் கொடுக்கின்ற எல்லாவற்றிற்கும் உயிருள்ள ஆட்தன்மையை (living personality) தனது சரீரத்தைக் கொடுக்கிறான்.

புகழ்பெற்ற முஸ்லீம் பக்கீர் ஒருவரிடம் நாடோடியாகத் திரியும் கற்றறிந்த ஒருவன் ஒருமுறை வந்தான். அந்த ஆள் அமைதி குலைந்திருந்தான். ஒரு வேளை கடினமாக பிராயணம் செய்ததால் இருக்கலாம். அவன் தனது செருப்பை கோபத்துடன் கழற்றி ஒரு மூலையில் எறிந்துவிட்டு கதவை தடால் என்று அழுத்தித் தள்ளினான்.

கோபத்திலிருக்கும்போது ஒரு மனிதன் தனது செருப்புக்களை ஏதோ தனது விரோதிகளைப் போல் எண்ணிக் கொண்டு அவைகளை கழற்றி எறிவான். அப்போதுதான் அவன் தனக்கும் கதவுக்குமிடையே ஏதோ பெரிய கருத்து வேறுபாடு வந்ததைப்போல் தடால் என்று தள்ளுவான், இப்படி கதவைத் திறந்துகொண்டு அந்த ஆள் உள்ளே வந்து அந்த பக்கீருக்கு மரியாதை செலுத்தினான்.

உடனே அந்த பக்கீர், "முடியாது, நான் உனது மரியாதையை ஏற்றுக்கொள்ள முடியாது. முதலில் போய் அந்த செருப்பிடமும், கதவிடமும் மன்னிப்புக் கேட்டுவிட்டு வா" என்று கட்டளையிட்டார். அதற்கு அந்த ஆள், "இது என்ன கோளாறு, கதவிடமும், ஒரு ஜோடி செருப்பிடமும் மன்னிப்புக் கேட்க வேண்டுமா? ஏன்? அவைகள் உயிருடனா உள்ளன?" என்று அந்த ஆள் கேட்டான். அதற்கு அந்த பக்கீர், "நீ உனது கோபத்தை அவைகள் மீது காட்டும்போது அவைகளை உயிரற்றவைகளாக நினைக்கவில்லை. செருப்புக்கள் ஏதோ பெரிய குற்றத்தை செய்துவிட்டதைப் போல் அவைகளை நீ தூக்கி எறிந்தாய். மேலும் ஒரு விரோதியைப் போல் எண்ணிக்கொண்டு அந்தக் கதவுகளை தள்ளினாய். உனது கோபத்தைக் காட்டுவதற்கு மட்டும் அவைகளுக்கு உயிர் இருப்பதாக நீ உணரும்போது நீ அவைகளிடம் மன்னிப்புக் கேட்பதற்கும் அவைகளுக்கு உயிர் உள்ளதைப்போல் எண்ண வேண்டும். தயவுசெய்து அவைகளிடம் போய் மன்னிப்புக்கேள். இல்லையெனில் நான் உனக்கு பேட்டியளிக்க முடியாது" என்று கூறினார். விசித்திரமான இந்த பக்கீரை சந்திப்பதற்கு தான் எவ்வளவு கஷ்டப்பட்டு பிரயாணம் செய்து வந்தோம் என்பதை மனதில் எண்ணி இந்த அற்ப விஷயத்திற்காக அவருடன் சம்பாஷணை செய்யாமல் சென்றுவிடக் கூடாது என்று முடிவு செய்தான். எனவே அவன் செருப்புக்களை நோக்கி இரு கைகளையும் கூப்பிக்கொண்டு சென்று, "கோபத்தில் உங்களை அப்படித்தள்ளியது தவறுதான், அதற்காக வருந்துகிறேன்". என்று கூறினான்:

அந்தக் கணநேரம் அவனுக்கு எப்படியிருந்தது தெரியுமா! தனது ஞாபகக் குறிப்புக்களில் அந்த நாடோடி முதலில் அது முட்டாள்தனமாக இருந்ததாகவும், ஆனால் அவன் அப்படி மன்னிப்புக் கேட்டு முடிந்தவுடன் அவனுள் புதிதாக ஏதோ ஒன்று எழுந்ததாகவும் எழுதியுள்ளான். அதன்பின் அவன் அமைதியும், சாந்தமும் அடைந்தான். ஒரு கதவிடமும், ஒரு ஜோடி செருப்புக்களிடமும் மன்னிப்புக் கேட்பதனால், ஒரு மனிதன் இந்த அளவுக்கு அமைதியும், சந்தோஷமும் பெறமுடியும் என்று அவனால் கற்பனை பண்ணிக்கூடப் பார்க்க முடியவில்லை.

அப்படி மன்னிப்புக் கேட்ட பின்னர் அவன் உள்ளே சென்று அந்த பக்கீரின் அருகில் அமர்ந்தபொழுது அந்த பக்கீர் சிரித்துக்கொண்டே, "இப்போது எல்லாம் சரியாகிவிட்டது. இப்போது நான் கூறுவதை நீ கேட்க முடியும். இனி நாம் பேசலாம். இப்போது நீ கொஞ்சம் அன்பு செலுத்திவிட்டதால் உனது பாரம் கொஞ்சம் குறைந்து விட்டது. இனி நமக்கிடையில் நல்லதொரு தொடர்பு இருக்க முடியும்" என்று கூறினார்.

எனவே நமது கொள்கையானது வெறும் மனிதர்களை மட்டுமே நேசிப்பதாக இருக்கக்கூடாது. நாம் எந்த அளவுக்கு அன்பினால் நிரம்பி வழிகிறோம் என்பதுதான் கேள்வி. ஒருவன் தனது தாயை நேசிக்கவேண்டும் என்று கூறுவது தவறு. அது திரித்துக் கூறுவது. ஒரு தந்தை, தான் தந்தையென்பதால் மகன் தன்னை நேசிக்க வேண்டுமென்பது ஏமாற்றுவேலை. அன்பு செலுத்துவதற்கு அவர்கள் ஏதாவது காரணங்கள் கூறுகின்றனர். அதே போன்று ஒரு தாய், தான் அவனது தாய் என்கிற ஒரே காரணத்திற்காக அவனை நேசிக்கவேண்டுமென்று கூறினால் அது விரும்பாத ஒன்றை திணிப்பது போன்றது. "அதனால்", "ஆகையினால்" போன்ற காரணங்களுடன் அன்பு வெளிப் படுத்தப்படுமானால் அது பொய்யானதாகும். அன்பு செலுத்து வதற்கு எந்தவிதமான உள்நோக்கமும் இருக்கக்கூடாது. தாய் தனது குழந்தைகளிடம், "நான் உன்னை நன்றாக கவனித்து

வந்தேன், நான் உன்னை வளர்த்தேன், ஆகையினால் நீ என் மீது நேசம் காட்டு" என்று கேட்கிறாள், தன் மீது அன்புசெலுத்தப்பட வேண்டியதற்கு ஒரு காரணம் கூறுகிறாள், ஆனால் அன்பு அந்த இடத்திலேயே செத்துவிடுகிறது. ஒரு குழந்தையை நாம் பலவந்தப்படுத்தினால் அக்குழந்தை விருப்பமில்லாமல் தனது தாய் என்பதற்காக அவள் மீது கொஞ்சம் அன்பு காட்டலாம். ஆனால் நாம் அன்பைக் கற்றுக்கொடுக்கும்போது நோக்கத்தில் ஏதாவது ஒரு உள் காரணத்திற்காக அன்பைக் காட்ட வேண்டுமென்று அந்தக் குழந்தையை வலுக்கட்டாயப் படுத்தக்கூடாது. அதற்குப் பதிலாக அந்தக் குழந்தை தானாகவே அன்பினால் நிரம்பி வழியும்படியான சூழ்நிலைகளை நாம் உருவாக்க வேண்டும்.

நமது குழந்தைகளின் வளர்ச்சியானது, அவர்களது தனித்தன்மையானது அவர்களது எதிர்காலமானது, அவர்கள் யாரைச் சந்தித்தாலும், அது ஒரு கல்லாக, ஒரு மனிதனாக, ஒரு மலராக, ஒரு மிருகமாக, யாராக இருந்தாலும், எதுவாக இருந்தாலும் அதனிடம் அன்பு செலுத்துவதால் ஏற்படும் மகிழ்ச்சியில்தான் உள்ளது என்பதை நாம் தெரிந்து கொள்ள வேண்டும். அதற்காக ஒரு மிருகத்தையோ, ஒரு மலரையோ, தன்னுடைய தாயையோ அல்லது வேறு யாரையோ வெறுமனே நேசிக்கவேண்டும் என்று எடுத்துக் கொள்ளக்கூடாது. நமது முழு நோக்கமும் அந்தக் குழந்தை அன்பினால் நிரம்பி அதன்பின் அது தானாகவே தான் சந்திக்கின்ற எல்லாவற்றின் மீதும் அன்பைப் பொழிய வேண்டும் என்பதுதான். அந்தக் குழந்தை யின் எதிர்காலம் எந்தளவுக்கு அது அன்பாக இருக்கிறது என்பதைப் பொறுத்துள்ளது; அதன் வாழ்வில் ஆனந்தம் மலரும் சாத்தியம் ஏற்படுகிறது. அன்பு செலுத்துகின்ற மனிதன் காம வேட்கையிலிருந்து விடுதலை பெற முடியும். ஆனால் நாம் அன்பை ஒருபோதும் அளிப்பதில்லை. அன்பிற்கான ஆர்வமே நம்மிடம் கிடையாது.

ஒரு மனிதன் ஒரே நேரத்தில் ஒருவனை நேசிக்கவும்,

மற்றொருவனை வெறுக்கவும் முடியும் என்று நீங்கள் நினைக்கிறீர்களா? முடியாது. அன்பு நிறைந்த ஒரு மனிதன் அவன் தனியாக இருந்தாலும் அன்பு நிறைந்துதான் இருப்பான். ஏனென்றால் அன்பு என்பது அவனது சுபாவம். அதற்கும் நீங்கள் அவனோடு கொள்ளும் உறவிற்கும் சம்பந்தம் கிடையாது. கோபம் நிறைந்த மனிதன், அவன் தனியாக இருந்தாலும் கோபமாகத்தான் இருப்பான். வெறுப்பு நிறைந்த மனிதன் அவன் தனியாக இருந்தாலும் கூட வெறுப்புடன்தான் இருப்பான்.

அதுபோன்ற மனிதனை கவனித்துப் பார்த்தால் நன்கு தெரியும். அவன் தனியாக இருந்தாலும் அவனது கோபத்தை நீங்கள் உணர முடியும். அந்த நேரத்தில் அவன் யார் மீதாவது தனது கோபத்தைக் காண்பிக்காவிட்டாலும் கூட நீங்கள் அவனது கோபத்தை உணரமுடியும். அவனது உடல் முழுவதும் வெறுப்பு நிரம்பி வழியும், கோபம் நிரம்பி வழியும். இதற்கு நேர் மாறாக நீங்கள் ஒரு அன்பு நிறைந்த மனிதனைப் பார்த்தால் அவன் தனியாக இருந்தாலும் அவனிடம் அன்பு ததும்பிக் கொண்டிருப்பதை நீங்கள் உணரமுடியும்.

காட்டில் மலரும் மலர்கள் அவைகளைப் பாராட்டிப் பேச அங்கு ஆள் இருந்தாலும், இல்லாவிட்டாலும், தங்களது நறுமணத்தைப் பரப்புகின்றன. அவைகளின் அருகில் யாராவது போக வேண்டும் என்கிற அவசியம் இல்லை. மணம் வீசுவது மலரின் இயல்பு. உங்களுக்காகத்தான் மலர்கள் மணம் வீசுகின்றன என்கிற கற்பனையில் இருக்காதீர்கள்.

மக்கள் வெறுமனே அன்பு நிறைந்து இருக்க வேண்டும். யார் மீதும் அது சார்புடையதாக இருக்கக்கூடாது. ஆனால் ஒரு காதலன் தனது காதலி தன்னைத் தவிர வேறு யாரையும் காதலிப்பதை விரும்புவதில்லை. "என்னை மட்டுமே காதலி" என்று அவன் கூறுகிறான். ஆனால் எல்லோரையும் நேசிக்காத ஒருத்தி எந்த ஒரு தனி நபரையும் கூட நேசிக்க முடியாது என்பதை அவன் அறிவதில்லை. ஒரு மனைவி தனது கணவனிடம் அவன் தன்னை மட்டும்தான் நேசிக்க வேண்டு

மென்றும் மற்றவர்களிடம் அன்பு செலுத்தக் கூடாது என்றும் கூறுகிறாள். ஆனால் அவள் தனது கணவனின் அன்பு பொய்யானது என்றும் அவள்தான் அத்தகைய அன்பை உருவாக்கினாள் என்றும் அறிவதில்லை. எல்லோர் மீதும் அன்பு செலுத்த முடியாத ஒரு கணவன் தன் மனைவி மீது மட்டும் எப்படி அன்பு செலுத்த முடியும்? அன்பு செலுத்துதல் என்பது வாழ்வின் இயற்கை நியதி.

ஒருவன் தனிப்பட்ட ஒரு நபர் மீது மட்டும் முழு அன்பு செலுத்திவிட்டு மற்றவர்களிடம் அன்பே செலுத்தாமலிருக்க முடியாது. ஆனால் மனித இனம் இந்த அப்பட்டமான, தெளிவான உண்மையைக் கண்டு கொள்ளவில்லை. ஒரு தந்தை தனது மகன் தன்னை நேசிக்கவேண்டுமென்று கூறுகிறார். ஆனால் அவர் அந்தக் குழந்தையானது அந்த வீட்டில் உள்ள வயதான வேலைக்காரனை நேசிக்கவேண்டுமென்று எப்போதாவது கேட்டிருப்பாரா? அவனும் ஒரு மனித னில்லையா? அந்த வேலைக்காரன் வயதானவனாக இருக்கலாம். ஆனால் அவனும் யாரோ ஒருவனுக்கு தந்தையாகத்தானே இருப்பான். ஆனால் நாம் அப்படி நினைப்பதில்லை. அவன் ஒரு வேலைக்காரன். எனவே அவன் மீது இரக்கமும், அன்பும் செலுத்தவேண்டுமா என்கிற கேள்விக்கே இடமில்லை. ஆனால் இதேத் தந்தை தனக்கும் வயதாகும் போது தன்னுடைய மகன்கள் தன்மீது பாசம் காட்டவில்லை என்று குறை கூறுவதைக்கூட உணர்வதில்லை. தனது மகன்களை அவர் எல்லோரையும் நேசிக்கும்படி கூறியிருந்தால் இன்று அவர்கள் அன்பு நிறைந்து காணப்படுவர். அப்போது அவர்கள் தங்களது வயதான தந்தையையும் நேசிக்க ஒருபோதும் மறக்கமாட்டார்கள்.

அன்பு என்பது ஒரு உறவு அல்ல. அது மனித மெய்யிருப்பின் ஒரு நிலை. அது மனிதனின் தனித்துவத்தில் ஒரு பகுதி. எனவே அன்பை நாம் கற்றுக் கொடுப்பதன் இரண்டாவது படியாக குழந்தைகள் எல்லோரையும் நேசிக்கும்படி கற்றுக்

கொடுக்க வேண்டும். ஒரு குழந்தை ஒரு புத்தகத்தை சரியாக வைக்காமல் தூக்கி எறிந்தால், அப்படி தூக்கி எறிவது அந்தப் புத்தகத்தை நேசிப்பதாகாது. அப்படி எறியக்கூடாது என்று சொல்லித்தரவேண்டும். அப்புத்தகத்தை அவன் அந்தவிதமாக நடத்தினால் மற்றவர்கள் தன்னைப்பற்றி என்ன நினைப்பார்கள் என்கிற விழிப்புணர்வை அவனுக்கு ஏற்படுத்த வேண்டும். நீங்கள் உங்கள் நாயிடம் மிருகத்தனமாக நடந்து கொண்டால் அது உங்களது மனிதத்தன்மையின் குறைவைத்தான் காட்டுகிறது. உங்களிடம் அன்பு இல்லை யென்பதற்கு அது ஆதாரம்.

ஒரு சிறு குடிசையில் வாழ்ந்த முஸ்லீம் பக்கீர் ஒருவரின் கதை. எனக்கு ஞாபகத்திற்கு வருகிறது. ஒருநாள் இரவு, நடுச்சாமத்தில் பெரும் மழை பெய்தது. பக்கீரும் அவரது மனைவியும் குடிசைக்குள் தூங்கிக் கொண்டிருந்தனர். திடீரென்று கதவைத் தட்டும் சப்தம் கேட்டது. யாரோ உள்ளே வருவதற்கு இடம் கேட்டனர்.

அந்த பக்கீர் தனது மனைவியை எழுப்பி, "வெளியில் யாரோ ஒரு வழிப்போக்கர், நமக்குத் தெரியாத நண்பர் வந்திருக்கிறார் போலிருக்கிறது" என்று கூறினார்.

நீங்கள் அவர், "நமக்குத் தெரியாத நண்பர்" என்று கூறியதைக் கவனித்தீர்களா? ஆனால் நீங்களோ உங்களுக்குத் தெரிந்தவர்களைக்கூட நண்பர்களாக பாவிப்பதில்லை. அவரது நோக்கம் அன்பு மயமானது. அந்த பக்கீர், "யாரோ முன்பின் தெரியாத நண்பர் வெளியில் காத்துக் கொண்டிருக்கிறார். தயவுசெய்து கதவைத்திற" என்றார். அதற்கு அவரது மனைவி, "உள்ளே இடமேயில்லையே. நம் இருவருக்குமே இங்கு இடம் போதாது. அப்படியிருக்க இன்னும் ஒரு ஆள் எப்படி உள்ளே இருக்க முடியும்?" என்று கேட்டாள்.

உடனே பக்கீர், "அன்பானவளே, இது பணக்காரனின் இடம் அல்ல. இது மேலும் சிறிதாக ஆகிவிட முடியாது. பெரிய பணக்காரர் வீட்டிற்கு கூடுதலாக யாராவது ஒரு விருந்தாளி

வந்து விட்டால்கூட அது போதாமல் போய்விடும். ஆனால் இது ஒரு ஏழையின் குடிசை. இதில் எத்தனை பேர் வந்தாலும் இடமுண்டு" என்று பதிலளித்தார். அதற்கு அவரது மனைவி மறுப்பு தெரிவித்தாள். உடனே அந்த பக்கீர், "உனது உள்ளத்தில் போதுமான இடம் இருந்தால் இந்தக் குடிசையையும் நீ அரண்மனையைப் போல் உணரமுடியும். ஆனால் உனது உள்ளம் குறுகியிருந்தால் ஒரு பெரிய அரண்மனை கூட சிறியதாகத் தெரியும் தயவுசெய்து கதவைத் திற. நமது வாசல் தேடிவந்த ஒரு மனிதனை எப்படி நாம் மறுக்க முடியும்? இதுவரை நாம் படுத்துக் கிடந்தோம். இங்கு நிச்சயமாக மூன்று பேர் படுக்க முடியாது. ஆனால் குறைந்தது மூன்றுபேர் உட்காரலாம். நாம் எல்லோரும் உட்கார்ந்தால் இன்னும் ஒரு ஆளுக்கு இங்கு இடம் கிடைக்கும்" என்று பதில் கூறினார்.

அவரது மனைவி கதவைத் திறந்தாள். அந்த ஆள் முழுவதும் நனைந்து கொண்டு உள்ளே வந்தான். அவர்கள் ஒன்றாக உட்கார்ந்து பேச ஆரம்பித்தனர். கொஞ்ச நேரம் கழித்து இன்னும் இரண்டுபேர் வந்து கதவைத் தட்டினர். உடனே அந்த பக்கீர், "வேறு யாரோ வந்திருக்கிறார்கள் போல் தெரிகிறது" என்று கூறிவிட்டு அருகிலிருந்த விருந்தினரை போய் கதவைத் திறக்கும்படி கேட்டார். அதற்கு அந்த ஆள், "கதவைத் திறப்பதா? இங்குஇடமே இல்லையே" என்றான். கொஞ்ச நேரத்திற்கு முன்பு இந்த வீட்டில் இடம் கேட்டு உள்ளே வந்த மனிதன் தனக்கு உள்ளே இடம் கிடைத்தது அந்த பக்கீரின் அன்பினால்தான் என்பதை மறந்துவிட்டான். ஆனால் இப்போது புதிதாக இருவர் வந்துவிட்டனர். அன்பு புதிதாக வருபவர்களுக்கு எப்போதும் இடமளிக்கும் அல்லவா. ஆனால் அந்த மனிதன், "கதவைத் திறக்க வேண்டிய அவசியமில்லை. நாமே இங்கு இடித்துக்கொண்டு உட்கார்ந்திருப்பது தெரியவில்லையா?" என்று கேட்டான். உடனே பக்கீர், "அன்பரே, நான் உங்களுக்கு இடம் தரவில்லையா? இங்கே அன்பு இன்னும் இங்கு உள்ளது. அது உங்களோடு முடிந்து

போய்விடவில்லை, தயவுசெய்து கதவைத் திறந்துவிடுங்கள். நாம் இப்போது கொஞ்சம் உட்காரலாம். மேலும் இரவில் குளிரும் அதிகமிருப்பதால் நாம் எல்லோரும் நெருக்கிக் கொண்டு உட்கார்ந்தால் கொஞ்சம் கதகதப்பாகவும் இருக்கும்" என்று கூறினார். கதவும் திறக்கப்பட்டது. அந்த இருவரும் வந்தனர். அவர்கள் எல்லோரும் எப்படியோ சமாளித்து அமர்ந்தனர். அப்போது ஒரு கழுதை வந்து கதவை தலையால் முட்டியது. கழுதை முழுவதும் நனைந்திருந்தது. இரவில் இருப்பதற்கு அதற்கு இடம் தேவைப்பட்டது. அப்போது அந்த பக்கீர் கதவின் ஓரமாக உட்கார்ந்திருந்த ஒரு ஆளிடம், "கதவைத் திறந்துவிடுங்கள். யாரோ புதிய நண்பர் ஒருவர் வந்துள்ளார்" என்றார். அந்த ஆள் வெளியே எட்டிப்பார்த்து விட்டு, "அது ஒரு நண்பன் அல்ல, நண்பனைப்போன்ற ஒன்றும் அல்ல. அது ஒரு கழுதை. அதற்காக நாம் திறந்துவிட வேண்டாம்" என்றான்.

அதற்கு அந்த பக்கீர், "பணக்காரரின் வீட்டு வாசலில் மனிதர்கள் மிருகங்களைப்போல் நடத்தப்படுவதை நீங்கள் பார்க்கவில்லை போலும். ஆனால் இது ஒரு ஏழை பக்கீரின் குடிசை. எனவே இங்கு மிருகங்களைக்கூட மனிதர்களாக நடத்துவதுதான் எங்களுக்குப் பழக்கம். தயவுசெய்து கதவைத் திறங்கள்" என்றார்.

ஒரே குரலில் எல்லோரும் சேர்ந்து, "அது சரி, இங்கு இடமேது?" என்று கேட்டனர்.

உடனே பக்கீர், "இங்கு நிறைய இடமுள்ளது. உட்காருவதற்கு பதில் நாம் எல்லோரும் எழுந்து நிற்கலாம். கவலைப்படாதீர்கள். அப்படி தேவைப்பட்டால் நான் வெளியில் சென்று அதற்கு இடம் விடுகிறேன்" என்றார்.

எனவே அன்பு இருந்தால் இந்த அளவுக்கு செய்ய முடியும்? முழுவதும் அன்பு நிறைந்த இதயம் நமக்கு அவசியம் தேவை. அன்பு செலுத்தும் நோக்கம் கண்டிப்பாக நம்மிடம் இருக்கவேண்டும். அன்புள்ள இதயம் இருந்தால்தான் ஒரு

மனிதனிடம் மனதாபிமானம் பிறக்கிறது. மேலும் அன்பு செலுத்தும் இதயமிருந்தால் ஒரு ஆழ்ந்த திருப்தி, மகிழ்ச்சி நிறைந்த மனநிறைவு வந்து விடும். யாரிடமிருந்தாவது கொஞ்சம் அன்பு செலுத்திய பின்னர், ஒரு மாபெரும் திருப்தி, ஒரு மாபெரும் சந்தோஷம் உங்கள் உடலில் - பரவுதை நீங்கள் ஒருபோதும் கவனித்ததில்லையா? எந்தவிதமான நிபந்தனை களுமின்றி அன்பு செலுத்துகின்ற நேரங்களைவிட வேறு அமைதியான நேரங்கள் கிடையாது என்பதை நீங்கள் ஒருபோதும் அறிந்ததில்லையா?

எந்த ஒரு நிபந்தனையினாலும் கலப்படம் செய்யப்படாத போதுதான் தூய அன்பானது உயிர் வாழமுடியும். நிபந்தனைகளுக்குட்பட்ட அன்பு. அன்பாகாது. தெருவில் யாராவது அந்நியர் ஒருவரைப் பார்த்து புன்முறுவல் பூத்தபின் ஏற்படுகின்ற மனநிறைவை நீங்கள் ஒருபோதும் உணர்ந்த தில்லையா? அப்போது உங்களை அமைதி என்னும் தென்றல் பின்தொடரவில்லையா? கீழே விழுந்த ஒரு மனிதனை தூக்கி விடும்போதும், அவனை தோள்கொடுத்து அழைத்துச் செல்லும் போதும், நோயுற்ற ஒருவனுக்கு நீங்கள் மலர்களை அன்பளிப் பாக அளிக்கும்போதும், அவர்கள் உங்களது தாய் அல்லது தந்தை என்பதற்காகச் செய்யாமல் யாராகயிருந்தாலும் அன்பு செலுத்தும்போது நீங்கள் அடைகின்ற அமைதியான சந்தோஷத் திற்கு எல்லையே கிடையாது. நீங்கள் பரிசளிக்கும் நபர் யார் என்பதில் முக்கியத்துவம் அளிக்காமல் அவர்களுக்கு பரிசு கொடுப்பதே பெரும் வெகுமதி, பெரும் சந்தோஷம் என்று கொடுக்கவேண்டும்.

அன்பு உங்களுக்குள் ஊற்றெடுக்க வேண்டும். செடி கொடிகள் மீது அன்பு செலுத்துதல், மனிதர்கள் மீது அன்பு செலுத்துதல், அந்நியர்களை நேசித்தல், வெளி நாட்டினரை நேசித்தல்-நிலவையும் நட்சத்திரங்களையும் கூட சென்று கொண்டிருப்பவர்களை நேசித்தல் - இப்படி நம்முள் அன்பு பெருகவேண்டும். உங்களது அன்பு எப்போதும் பெருகிக்

கொண்டேயிருக்க வேண்டும்.

ஒரு மனிதனின் வாழ்வில் அன்பு அதிகமாகும் போது செக்ஸ் குறைந்துவிடும். அன்பும் தியானமும் சேர்ந்து கடவுட்தன்மையை அடையும். வழியின் கதவுகளைத் திறக்கும். அன்பும் தியானமும் சேர்ந்த கடவுட்தன்மையால்தான் பிரம்மச்சரியம் மனித வாழ்வில் மலர்கிறது. அப்போதுதான் உயிர்சத்து முழுவதும் புதிய வாசல் வழியாக மேலெழுந்து செல்கிறது. அதன்பின் அது கொஞ்சம் கொஞ்சமாக வீணே வெளியேறுவதில்லை. உள்ளுக்குள்ளேயே சக்தியானது மேல் நோக்கிச் செல்கிறது. அது சொர்க்கத்தை நோக்கி தனது பயணத்தை ஆரம்பிக்கிறது. இப்போதைய நமது பயணம் கீழ்மட்டங்களை நோக்கிச் செல்கிறது. இயற்கையில் சக்தியானது கீழ்நோக்கி, காமத்தில்தான் செல்லும். ஆனால் பிரம்மச்சரியம் என்பது சக்தி மேல்நோக்கி செல்லும் பயணமாகும். மேலும் அன்பும், தியானமும் தான் பிரம்மச்சரியத்திற்கான அடிப்படைக் கூறுகள்.

நாளை பிரம்மச்சரியத்தின் மூலம் நமக்கு என்ன கிடைக்கிறது என்று பார்ப்போம்? அதன் மூலம் நாம் பெறுவது என்ன? அது நம்மை எந்த அளவுக்கு மேலே கொண்டு செல்கிறது என்று பார்ப்போம்.

இன்று நான் இரண்டு விஷயங்களைப் பற்றி பேசினேன். அன்பு மற்றும் தியானம். இதற்கான பயிற்சிகள் சிறுவயதிலேயே ஆரம்பிக்கப்பட வேண்டுமென்று கூறினேன். நான் அப்படிக் கூறியதிலிருந்து நாம் தான் குழந்தைகள் இல்லையே, அதனால் நாம் ஒன்றும் செய்யவேண்டியதில்லை என்று எடுத்துக்கொள்ளக் கூடாது. அப்படி நினைத்தால் என் முயற்சிகளெல்லாம் வீணாகிவிடும். உங்கள் வயது என்னவாக இருந்தாலும் பரவாயில்லை. இந்த நல்ல காரியத்தை என்றைக்கு வேண்டு மானாலும் தொடங்கலாம். வயதாகிவிட்டதால் அது கொஞ்சம் கடினமாகத் தெரியும். அப்படியிருந்தாலும் உங்கள் வாழ்வின் எந்த நேரத்திலும் இந்தப் பாதையில் உங்கள் பிரயாணத்தை

நீங்கள் ஆரம்பிக்கலாம். குழந்தைப் பருவத்தில் ஆரம்பித்தால் கொஞ்சம் நல்லது. ஆனால் வாழ்வின் எந்தப் பருவத்தில் இதை நீங்கள் ஆரம்பித்தாலும் நல்லதுதான்.

இன்றே நீங்கள் ஆரம்பிக்கலாம். கற்றுக்கொள்ள வேண்டும் என்ற ஆர்வமுடையவர்கள், கற்றுக்கொள்ள வேண்டு மென்ற தாகமுள்ளவர்கள் எவ்வளவுதான் வயதான போதிலும் அவர்கள் குழந்தைகள்தான். அவர்களும் புதிதாக ஆரம்பிக்கலாம். நன்றாகக் கற்றுக் கொள்ளலாம். தங்களுக்கு எல்லாமே தெரியும், தாங்கள் எல்லாவற்றையும் அடைந்து விட்டோம் என்று அவர்கள் நினைக்காத வரையில் அவர்கள் தாராளமாக ஆரம்பிக்கலாம்.

கௌதம புத்தருக்கு ஒரு சீடர் இருந்தார். அவர் நீண்ட நாட்களாக சீடராக இருந்தார். ஒருநாள் புத்தர் அவரிடம், "துறவியே உங்களது வயது என்ன?" என்று கேட்டார்.

அந்தத் துறவி, "ஐந்து" என்று பதிலளித்தார்.

புத்தர் ஆச்சரியமடைந்தார், "ஐந்து வருடமா? உங்களுக்கு குறைந்தது எழுபது வயதாவது இருக்கும்போல் தெரிகிறது. இது என்ன பதில்?" என்றார்.

அதற்கு அந்தத் துறவி, "தியானத்தின் ஒளி ஐந்து ஆண்டுகளுக்கு முன்புதான் என்னிடம் ஏற்பட்டது. மேலும் கடந்த ஐந்தாண்டுகளாகத்தான் எனது வாழ்வில் அன்பு மழை பொழிகிறது. அதற்கு முன்பு எனது வாழ்க்கை ஒரு கனவாக இருந்தது. நான் தூங்கிக் கொண்டிருந்தேன். எனவேதான் அப்படிக் கூறினேன். எனது வயதைக் கூறும் போது அந்த வருடங்களை நான் எப்படிச் சேர்ப்பது, என்னால் எப்படி முடியும்? எனது உண்மையான வாழ்க்கை ஐந்து ஆண்டுகளுக்கு முன்புதான் ஆரம்பமாயிற்று. எனக்கு வயது ஐந்துதான்" என்று கூறினார்.

புத்தர் தனது சீடர்களிடம் அந்தத் துறவி கூறியதை எல்லோரும் கவனித்துக் கொள்ளும்படி கூறினார்.

நீங்களும் உங்களது வயதை அந்த விதத்தில்தான்

கணக்கிட வேண்டும். அதுதான் வயதை கணக்கிடும் முறை. அன்பும், தியானமும் இன்னமும் உங்கள் வாழ்வில் பிறக்கவில்லை யெனில் இதுவரை நீங்கள் வாழ்ந்த வாழ்க்கை வீணாகிவிட்டதாகும். நீங்கள் இன்னமும் பிறக்கவில்லை. அதற்காக நீங்கள் முயற்சி செய்ய ஆரம்பிப்பதற்கு இந்த வயது சரிபட்டு வராது என்பதல்ல. நாம் எல்லோரும் புதியதோர் பிறவியெடுத்து முயல முடியும். அதற்கு இப்போதும்கூட ஒன்றும் கெட்டுவிடவில்லை.

எனவே எனது வார்த்தைகளிலிருந்து இப்போது நீங்கள் குழந்தைப்பருவத்தை தாண்டிவிட்டால், நான் பேசியதெல்லாம் வருங்கால சந்ததிகளுக்குத்தான் என்று முடிவு கட்டி விடாதீர்கள். எந்த ஒரு மனிதனும், எந்த ஒரு காலத்திலும் சரியான பாதைக்கு திரும்பி வரமுடியாதளவு தூரத்திற்கு தவறான பாதையில் சென்றிருக்க முடியாது. உண்மையான ஒளியைக் கண்டு கொள்ள முடியாமல் எந்த ஒரு மனிதனும் வழி தவறிச்சென்று கொண்டே யிருக்க முடியாது.

ஒப்பிட்டுப் பார்த்தால் இந்தப் பயணத்தில் நீங்கள் அதிகம் உழைக்கத் தேவையில்லை. புதியபாதையைக் காட்டும் புத்தொளி தெரிந்ததுமே நீங்கள் அடைகின்ற திருப்தியும், சந்தோஷமும் நீங்கள் இப்போது செய்கின்ற முயற்சியை விட பலமடங்கு அதிகமாக இருக்கும். அந்த ஒளியின் ஒரு சிறு கீற்றின் தரிசனம், அந்த சந்தோஷம், அந்த உண்மை, உங்களுக்குள் இந்த சிறிய முயற்சியினாலா நாம் இவ்வளவு பெரிய சாதனையை சாதித்தோம் என்று உணரும் அளவிற்கு தெரிந்துவிடும்.

தயவுசெய்து எனது வார்த்தைகளை உங்களது மனதின் தவறான கோணத்தில் பார்த்துவிடாதீர்கள். உங்கள் எல்லோருக்கும் எனது பணிவான வேண்டுகோள் இதுதான்.

★★★★★★

**இ**தோ ஒரு கதை :

ஒரு சிறிய கிராமத்தின் பள்ளிக்கூடத்தில் ஆசிரியர் இராமனின் கதையை சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தார். கிட்டத்தட்ட எல்லாக் குழந்தைகளும் அரைத் தூக்கத்தில் இருந்தன. இராமாயணத்தைச் சொல்லும் போது இப்படி நடப்பது வழக்கம்தான். பெரியவர்களே கூடச் சிலசமயம் கண்ணயர்ந்து விடுவார்கள். மீண்டும் மீண்டும் அதே கதை சொல்லப்பட்டு வருவதால் அந்தக் கதை அதன் சிறப்பை இழந்துவிட்டது. அதன் புதுமை போய்விட்டது. அந்த ஆசிரியர் தனக்கு முன்பு திறந்து வைக்கப்பட்ட புத்தகத்தைப் பார்க்காமலேயே ஒரு இயந்திரத்தைப் போல் இராமயணத்தை சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தார். வெளியிலிருந்து யாராவது வந்து பார்த்தால் அந்த ஆசிரியரும் அரைத்தூக்கத்தில் இருப்பதைக் காணலாம். அவர் இராமயணத்தை மனப்பாடம் செய்திருந்தார். எனவே அவர் இராமாயண நிகழ்ச்சிகளை ஒரு கிளிப் பிள்ளையைப் போல் அப்படியே சொல்லிக் கொண்டிருந்தார். அவர் என்ன கூறுகிறார் என்பதை உணராமலே பேசிக்கொண்டிருந்தார்

திடீரென்று வகுப்பறை பரபரப்படைந்தது. கல்வித்துறை இன்ஸ்பெக்டர் உள்ளே வந்தார். மாணவர்கள் கூர்ந்து கவனிக்க ஆரம்பித்தனர். ஆசிரியர் உஷாராகிவிட்டார். ஆசிரியர் தொடர்ந்து பாடத்தை நடத்தினார்.

அந்த இன்ஸ்பெக்டர், "நீங்கள் இராமாயணம் கற்றுக் கொடுப்பதைப் பார்த்து நான் சந்தோஷப்படுகிறேன். நான் இராமனைப் பற்றி பிள்ளைகளிடம் சிலவற்றை கேட்கிறேன்" என்று கூறினார். குழந்தைகள் எப்போதும் சண்டைகளையும்,

ஏதாவது பொருள்களை உடைப்பது போன்ற கதைகளை எளிதில் ஞாபகத்தில் வைத்திருப்பார்கள் என்று எண்ணிக் கொண்டு அந்த இன்ஸ்பெக்டர், "குழந்தைகளே, சங்கரின் வில்லை ஒடித்தது யாரென்று கூறுங்கள் பார்ப்போம்?" என்றார்.

ஒரு பையன் கையை உயர்த்தினான். எழுந்து நின்று, "என்னை மன்னித்து விடுங்கள் ஐயா, நான் அதை ஒடிக்கவில்லை, நான் பதினைந்து நாட்களாக வெளியூர் சென்று இருந்தேன். அதை யார் ஒடித்தார்கள் என்று எனக்குத் தெரியாது. நான் ஏன் இதை முன்பே தெளிவுப்படுத்துகிறேன் என்றால் இந்தப் பள்ளியில் எது நடந்தாலும் முதலில் என்னைத்தான் குற்றம் சாட்டுவார்கள். அதனால்தான் தெளிவுப்படுத்துகிறேன்" என்றான்.

இதைக்கேட்ட இன்ஸ்பெக்டருக்கு ஆகாயத்தில் இருந்து இடி தாக்கியது போல் இருந்தது. அவர் திரும்பி ஆசிரியரை பார்த்தார். ஆசிரியர் உடனே பிரம்பைத் தூக்கி, "இந்த ராஸ்கல்தான் நிச்சயம் செய்திருப்பான். எல்லோரிலும் மிகவும் மோசமானவன் இவன்தான்" என்று இன்ஸ்பெக்டரிடம் கூறிவிட்டு அந்தப் பையனை நோக்கி, "நீ அதைச் செய்ய வில்லையென்று ஏன் கூறினாய்?" என்று கேட்டார். மீண்டும் இன்ஸ்பெக்டரிடம் திரும்பி, "சார், இவனின் இனிமையானப் பேச்சைக் கேட்டு இவனை விட்டு விடாதீர்கள்" என்று கேட்டுக்கொண்டார்.

எதையும் சொல்வது நல்லதல்ல என்று எண்ணிக்கொண்டு இன்ஸ்பெக்டர் மெல்ல எழுந்து அந்த வகுப்பு அறையை விட்டு வெளியே வந்தார். ஆனால் அவர் கோபத்துடன் நேராக பள்ளித் தலைமை அசிரியரின் அலுவலகத்திற்குச் சென்று அங்கு நடந்த நிகழ்ச்சிகளை விவரித்தார். அந்த நிகழ்ச்சி குறித்து தலைமை ஆசிரியர் என்ன செய்யப்போகிறார் என்று அவர் அறிய விரும்பினார்.

அந்த தலைமை ஆசிரியரோ இன்ஸ்பெக்டரிடம் அந்த விஷயத்தை மேலும் பெரிதுபடுத்த வேண்டாம் என்று கேட்டுக்கொண்டார். இந்தக் காலத்தில் மாணவர்களை ஏதாவது தவறாகச் சொல்வது மிகவும் ஆபத்தானது என்றும் விளக்கினார். யார் அதை உடைத்திருந்தாலும் பரவாயில்லை. அதை அப்படியே விட்டுவிடுங்கள் என்று கேட்டக்கொண்டார். கடந்த இரண்டு மாதங்களாகத்தான் பள்ளி அமைதியாக நடக்கிறது. அதற்கு முன்பு மாணவர்கள் பள்ளியில் மேஜை நாற்காலிகளை உடைத்து எரித்துவிட்டனர். எனவே ஒன்றும் பேசாமல் இருப்பதே நல்லது. அவர்களிடம் ஏதாவது கூறினால் இப்போது அது வீண் தொந்தரவாகப் போய்விடும். அவர்கள் எந்த நேரத்திலும் ஸ்ட்ரைக் அல்லது தர்ணா அல்லது சாகும்வரை உண்ணாவிரதம் இப்படி ஏதாவது செய்வார்கள் என்று இன்ஸ்பெக்டரிடம் விளக்கினார்.

இதைக் கேட்ட இன்ஸ்பெக்டர் அதிர்ச்சியடைந்தார். அவர் நேராக அந்தப் பள்ளி கமிட்டியின் தலைவரிடம் சென்று ஒரு வகுப்பில் இராமாயணம் நடத்தப்பட்டு வந்ததாகவும். ஒரு பையன் எழுந்துதான் சங்கரின் வில்லை ஒடிக்கவில்லையென்று கூறியதையும். அதற்கு அந்த ஆசிரியர் அந்தப் பையன்தான் அதைச் செய்த குற்றவாளி என்று சொல்லியதையும். அதன்பின்னர் அந்தத் தலைமை ஆசிரியர் அந்த விஷயத்தை அப்படியே விட்டுவிடும்படியும் ஏனென்றால் மாணவர்களைக் குற்றம் சொன்னால் அதனால் ஸ்ட்ரைக் அல்லது ஏதாவது ஏற்பட்டுவிடும் என்று பயந்ததையும் ஒன்றுவிடாமல் கூறினார். என்வே அதைக் குறித்து தலைவர் என்ன சொல்கிறார் என்று கேட்டார்.

அதற்கு அந்தத் தலைவர் தலைமை ஆசிரியர் மிகவும் புத்திசாலித் தனமாக முடிவு எடுத்திருப்பதாகக் கூறினார். மேலும் அந்தக் குற்றவாளியைப் பற்றி கவலைப்பட வேண்டாம் என்றும் கேட்டுக்கொண்டார். யார் அந்த வில்லை உடைத்திருந்தாலும் கமிட்டி அதை ரிப்பேர் செய்துவிடும். ஏனென்றால் யார் அதை

உடைத்தார்கள் என்று நாம் கண்டுபிடிப்பதைவிட அதை ரிப்போர் செய்துவிடுவது நல்லது என்று இன்ஸ்பெக்டரிடம் தலைவர் கூறினார்.

இந்த நிகழ்ச்சியால் வெறுப்படைந்த அந்த இன்ஸ் பெக்டர் அவரது அனுபவத்தை என்னிடம் கூறினார். இந்தக் கதையின் அடிப்படையில் ஒன்றும் புதிதுகிடையாது என்று நான் அவரிடம் கூறினேன். நமக்கு ஒன்றுமே தெரியாத விஷயங்களை நமக்குத் தெரிந்ததாக வெளியில் காட்டிக் கொள்வது சாதாரணமாக மனிதனின் பலவீனம்தான்.

இராமாயணத்தில் சங்கரரின் வில்லை ஒடிக்கும் பகுதி எப்படி வரும் என்று எவரும் நினைத்துப் பார்க்கவில்லை. "எந்த சங்கரர்?" என்று அவர்கள் கேட்டிருந்தால் மிகவும் நன்றாக இருந்திருக்கும். ஆனால் யாரும் தங்களது அறியாமையைக் காட்டிக் கொள்ளத் தயாராக இல்லை. அந்த அளவுக்கு தைரியம் எந்த ஆளுக்குமில்லை. இந்தப் பலவீனம்தான் மனிதவர்க்கத்தின் வரலாற்றில் உள்ள மாபெரும் ஆபத்து. இத்தகைய பலவீனம் மனித இனத்தின் தற்கொலையைத்தான் காட்டுகிறது. நமக்கு எல்லாமே தெரியும் என்பது போல் நடிக்கிறோம். அதன் விளைவாக நமது வாழ்க்கையைப் போட்டுக் குழப்பி விடுகிறோம். அந்த மாணவன், அந்த ஆசிரியர், அந்த தலைமை ஆசிரியர், அந்தப் பள்ளித்தலைவர் இவர்கள் கொடுத்த பதில்களைப் போலத்தான் நமது வாழ்க்கையின் எல்லாப் பிரச்சனைகளுக்கும் நம் எல்லோரின் பதில்களும் இருக்கின்றன. கேள்வி என்னவென்று புரிந்து கொள்ளாமல் பதில் சொல்ல முயல்வது ஒரு மனிதனை முட்டாளாக்கிவிடும். இது வெறுமனே தன்னைத்தானே ஏமாற்றிக் கொள்வதாகும்.

இதோடு சேர்ந்து நம்மிடம் அலட்சியமும் அதிகம் உள்ளது. சங்கரரின் வில்லை யார் உடைத்தார்களென்று நமக்குத் தெரியாவிட்டால் என்ன? குடியா முழுகிவிடும்? என்று சிலர் அலட்சியமாகக் கேட்பார்கள்.

இந்தப் புத்தி கெட்ட கதையின் பிரச்சனைகளுக்கு மாறாக இன்னும் ஆழ்ந்த அறிவுள்ள பல புதிர்கள் நம் வாழ்க்கையில் நிறைந்துள்ளன. அந்தப் புதிர்களை தீர்த்துவைப்பதைப் பொறுத்துதான் நமது வாழ்க்கையானது அழகானதாகவோ அல்லது அழகற்றதாகவோ, இணக்கம் நிறைந்ததாகவோ அல்லது இணக்கம் இல்லாததாகவோ, இப்போது நாம் செல்லும் திசை நமது முன்னேற்றத்திற்கான சரியான ஒன்றாகவோ அல்லது அதற்கு எதிராகவோ ஆகமுடியும். நமக்கு நமது வாழ்வின் எல்லா விடைகளும் தெரியும் என்று நாம் நினைக்கிறோம். ஆனால் நமது வாழ்க்கையில் நடக்கும் சம்பவங்கள் நாம் வாழ்க்கையைப்பற்றி எவ்வளவு தப்பாகப் புரிந்து கொண்டுள்ளோம் என்பதை தெளிவாகக் காட்டுகிறது. நமக்கு வாழ்க்கையைப் பற்றி ஒன்றும் தெரியாது என்பதை வாழ்க்கையில் நமது நடவடிக்கைகள் ஒவ்வொன்றும் காட்டுகின்றன. இல்லையெனில் நமது வாழ்க்கையில் இவ்வளவு துன்பம், இந்த அளவுக்குக் கவலை, இந்த அளவுக்குத் துக்கம் எப்படி இருக்க முடியும்?

நான் மேலே கூறிய விஷயம் காமத்தைப் பற்றிய நமது அறிவிற்கும் பொருந்தும். நமக்கு அதைப்பற்றி ஒன்றும் தெரியாது. ஒருவேளை நீங்கள் அதை ஒத்துக் கொள்ளாமல் போகலாம். நீங்கள் என்னிடம், "கடவுளைப் பற்றியோ அல்லது ஆன்மாவைப் பற்றியோ எங்களுக்கு ஒன்றும் தெரியாது என்று கூறினால் அதில் அர்த்தம் உண்டு. ஆனால் செக்ஸைப் பற்றி எங்களுக்கு ஒன்றும் தெரியாது என்று நீங்கள் எப்படிக் கூறலாம்?" என்று வாதாடலாம். உங்களுக்கு செக்ஸைப் பற்றி ஒன்றுமே தெரியாது என்று நான் தைரியமாகக் கூறுவேன். நான் கூறுவதை ஒத்துக்கொள்வதற்கு உங்களுக்கு கடினமாகத்தான் தெரியும். நீங்கள் காம அனுபவங்களைப் பெற்றிருக்கலாம். ஆனால் காமத்தைப் பற்றி நீங்கள் ஒரு மிருகத்தைவிட ஒன்றும் அதிகமாகத் தெரிந்திருக்கவில்லை. ஒரு இயந்திரத்தைப் போல் ஒரு காரியத்தைச் செய்வது அந்தக் காரியத்தைப் பற்றி நீங்கள் அறிந்து கொள்ள போதுமானதாகாது.

ஒரு மனிதன் ஆயிரக்கணக்கான மைல்கள் தூரம் ஒரு காரை ஓட்டியிருக்கலாம். ஆனால் அதை வைத்து அவனுக்கு அந்தக் காரின் இஞ்சினைப் பற்றி எல்லாம் தெரியும் என்று சொல்ல முடியாது. ஆயிரம் மைல்கள் நான் கார் ஓட்டியிருக்கிறேன் அது எப்படி சாத்தியம் என்று என்னிடம் அவன் எதிர்த்துக் கூறலாம். அவன் கூறினாலும் அவனுக்கு அந்தக் காரைப் பற்றி ஒன்றும் தெரியாது என்று நான் இன்னமும் தைரியமாகக் கூற முடியும். காரின் உள்ளேயுள்ள இயந்திர நுணுக்கங்களை அறிந்து கொள்வதென்பது காரை வெறுமனே ஓட்டக் கற்றுக் கொள்வதிலிருந்து முற்றிலும் வித்தியாசமானது. மாறுபட்டது என்று நான் திரும்பத் திருப்பிக் கூறுகிறேன்.

ஒருவன் சுவிட்சைப் போட்டால் லைட் எரிகிறது. அதை மீண்டும் அணைத்தால் அந்த லைட் அணைந்து போகிறது. அவன் எண்ணற்ற தடவைகள் அப்படிச் செய்து விட்டான். அதனால் மின்சாரத்தைப் பற்றி எல்லாம் தெரியும் என்று அவன் கூற முடியுமா? ஏனென்றால் அவன் நினைத்தால் விளக்கின் சுவிட்சைப் போடவும் முடியும், அதை அணைக்கவும் முடியும். அப்படிக்கூறும் ஒருவனை நாம் முட்டாள் என்றுதான் கூறுவோம். ஏனென்றால் ஒரு சிறு குழந்தைகூட சுவிட்சைப் போடலாம்; மின்சாரத்தைப் பற்றிய அறிவு தேவையில்லை.

யார் வேண்டுமானாலும் கல்யாணம் செய்து கொள்ளலாம். யார் வேண்டுமானாலும் பிள்ளைகளைப் பெற்றுக் கொள்ளலாம். அதற்கும் செக்ஸைத் தெளிவாகப் புரிந்து கொள்வதற்கும் சம்பந்தமே இல்லை. மிருகங்கள்கூட இனவிருத்தி செய்கின்றன. அதற்காக அவைகளுக்கும் செக்ஸைப் பற்றி எல்லாம் தெரியும் என்று அர்த்தமில்லை.

இதில் உள்ள உண்மை என்னவெனில் செக்ஸை விஞ்ஞானப்பூர்வமாக இன்னும் நாம் படிக்கவில்லை. எல்லோரும் தங்களுக்கு செக்ஸைப்பற்றி எல்லாம் தெரியுமென்று நம்பி வந்ததால் செக்ஸைப்பற்றி விஞ்ஞானமோ

அல்லது தத்துவமோ இங்கு வளரவில்லை. செக்ஸைப் பற்றி புனித நூல் ஒன்று தேவை என்று யாரும் கண்டுகொள்ளவில்லை. மனித இனத்தின் மாபெறும் தவறு இது.

என்றைக்கு நாம் காமத்தைப் பற்றிய சிந்தனைகளின் முழுமையான முறைகளை, அதைப் பற்றியதொரு விஞ்ஞானத்தை, அதைப் பற்றியதொரு புனித நூலை முழுமையாக உண்டாக்குகிறோமோ அன்றைக்குத்தான் நாம் ஒரு புதிய மனித இனத்தை உருவாக்க முடியும். அதன்பின்னர் இப்போதிருப்பதைப் போன்ற அசிங்கமான, சுவாரசியமற்ற முடமான, பலவீனமான மனிதர்கள் தோன்றமாட்டார்கள். இந்த பூமியில் நோயுற்ற, பலமில்லாத, புத்திக் குறைவான மக்களைப் பார்க்க முடியாது. பாவத்திலும், குற்ற உணர்விலும் பிறந்த ஒரு பரம்பரையை, இப்போதிருக்கும் அதைப்போன்ற பரம்பரையை மேன்மேலும் பெருக்கிக் கொண்டு போக வேண்டிய அவசியம் இருக்காது. ஆனால் இதைப்பற்றி நாம் சிந்திப்பதில்லை. நாம் வெறுமனே விளக்கைப் போடுவதும், அதை அணைப்பதுமாகிய பழக்கத்தைக் கற்றுக்கொண்டு நமக்கு மின்சாரத்தைப்பற்றி எல்லாமே தெரியும் என்ற முடிவுக்கு வந்துவிட்டோம். தனது வாழ்க்கையின் இறுதி காலத்தில்கூட செக்ஸ் என்றால் உண்மையில் என்னவென்று ஒரு மனிதன் அறிந்து கொள்வதில்லை. அவனுக்கு "போடவும்" அதை "அணைக்கவும்" மட்டும்தான் தெரியும், வேறொன்றுமில்லை.

காமம் என்னும் பாடத்தில் நாம் ஒருபோதும் ஆழமாகச் செல்வதில்லை. நாம் செக்ஸை அனுபவிப்பதைப் பற்றி உட்கார்ந்து ஒருபோதும் சிந்திப்பதில்லை. அதைப்பற்றி நாம் ஒருபோதும் ஆழ்ந்து செய்வதில்லை. ஏனென்றால் நாம் அதைப்பற்றி அறிந்துகொள்ள வேண்டியவற்றையெல்லம் அறிந்து கொண்டு விட்டோம் என்று தவறான நம்பிக்கையில் நாம் திருப்தியடைந்து விடுகிறோம். எல்லோருக்கும் ஏற்கனவே எல்லாம் தெரியும் பட்சத்தில் அந்த விஷயத்தைப்பற்றி நாம் ஆழ்ந்து யோசிக்க வேண்டிய அவசியம் என்ன? மேலும், இதை

கூறிய கையோடு, இந்த உலகில், நமது வாழ்க்கையில் செக்ஸைவிட அதிக புதிர் நிறைந்தது, அதிக இரகசியங்கள் அடங்கிய, ஆழமான விஷயம் வேறொன்றும் கிடையாது என்பதையும் சொல்ல விரும்புகிறேன்.

சமீபத்தில்தான் நாம் அணுவைப்பற்றி அறிந்து கொண்டோம். அதனால் இந்த உலகில் அபரிமிதமான மாற்றம் ஏற்பட்டுவிட்டது. அதைப்போன்று காமம் என்னும் அணுவைப்பற்றி நாம் முழுமையாகத் தெரிந்து கொள்வதில் வெற்றியடையும்போது மனித இனம் ஞானத்தில் ஒரு புதிய யுகத்தினுள் செல்லும். ஒரு உயிர் உருவாகிறது. அந்த நுணுக்கத்தை, அந்த செய்முறையை நாம் ஆழ்ந்து தெரிந்துகொள்ளும்போது நாம் அடையும் பலன்களின் மகிமையை, இப்போதே தெரிவிப்பது சாத்தியமாகாது. ஆனால் ஒன்று மட்டும் நிச்சயமாகக் கூறலாம். காமம்தான் மிகவும் புதிரான, மிகவும் ஆழ்ந்து சிந்திக்க வேண்டிய, அதிக மதிப்புமிக்க ஒரு விஷயம். ஆனால் அதே வேளையில் நம்மால் அதிகம் குற்றம் சொல்லப்படுவதும் அதே விஷயம்தான். அதைப் பற்றிய விஷயத்தில் இன்னும் இருளில்தான் இருக்கிறோம். நாம் ஒருபோதும் இந்த முக்கியமான கருத்திற்கு அதிக கவனம் செலுத்தியது கிடையாது. ஒரு மனிதன் தனது வாழ்நாள் முழுவதும் நாள் தவறாமல் உடற்புணர்ச்சி கொள்கிறான். ஆனால் அது என்னவென்று அவன் ஒருபோதும் அறிந்திருக்கவில்லை.

முதல் நாள் நான் வெறுமையைப்பற்றி, "நான்" என்னும் ஆணவமில்லாமையைப் பற்றி, மனமின்றி இருப்பதைப் பற்றி பேசியபோது அநேக நண்பர்கள் அதை ஒத்துக்கொள்ளவில்லை. அதற்குப் பிறகு ஒரு நண்பர் என்னிடம், "நான் அதைப்பற்றி இதற்கு முன்பு சிந்தித்ததில்லை. ஆனால் நீங்கள் கூறியபடி நடந்தது" என்று கூறினார். ஒரு பெண்மணி என்னிடம் வந்து, "இதற்கு முன்பு இதை நான் அனுபவித்ததில்லை. நீங்கள் அதைப்பற்றி பேசியபொழுது எனது மனம் அந்த நேரத்தில்

அமைதியும், திருப்தியும் அடைவதாக மட்டும்தான் எண்ணினேன். ஆனால் நான் ஒருபோதும் அந்த ஆணவமற்ற நிலையையோ அல்லது வேறு ஆழ்ந்த அனுபவங்களையோ பெற்றதில்லை'' என்று கூறினார். இதைப்பற்றி சாத்தியம் உண்டு. எனவே இன்னும் சில கருத்துக்களை விளக்கிக் கூறலாம் என எண்ணுகிறேன்.

முதலில், மனிதன் பிறக்கும்போதே காம விஞ்ஞானத்தின் முன்னறிவோடு பிறப்பதில்லை. தங்களுடைய முற்பிறவிகளின் அனுபவங்களை இன்னமும் நினைவில் வைத்திருப்பவர்கள் வெகு அபூர்வம். அவர்கள்தான் காமக் கலையை முழுவதும் புரிந்து கொள்ளமுடியும். செக்ஸின் தந்திரத்தை, செக்ஸின் சிக்கல்களைப்பற்றி அவர்களால்தான் நன்கு அறிந்துகொள்ள முடியும். அவர்களைப் போன்ற ஆன்மாக்கள் தான் உண்மையான பிரம்மச்சரிய நிலையை அடைய முடியும். செக்ஸைப்பற்றி எல்லா உண்மைகளையும் அறிந்துவிட்ட ஒருவனுக்கு, செக்ஸைப் பற்றிய எல்லா சிக்கல்களையும் அறிந்துவிட்ட ஒருவனுக்கு செக்ஸ் என்பது உபயோகமற்ற தாகிவிடும். அவன் வெறுமனே அதில் புகுந்து அதை கடந்து அதற்கு மேலெழுந்து சென்றுவிடுகிறான். ஆனால் அப்படிக் காமத்தை கடந்து சென்றவர்களிடம் அமர்ந்து செக்ஸைப்பற்றி கலந்துரையாடும் பழக்கம் நமது பரம்பரையில் இல்லை. அதோடல்லாமல் பிரம்மச்சரியத்தில் துய்மையடைந்த வர்களும்கூட அதிக முயற்சிக்குப் பின்னர்தான் தங்களது பழைய பிறவிகளைப் பற்றியும், முற்பிறவி வாழ்க்கைகளைப் பற்றியும் கூறமுடியும்.

பூர்ணமான பிரம்மச்சாரி மட்டும்தான் செக்ஸைப் பற்றிய உண்மைகளையும், அதன் தெய்வீகத் தன்மையையும் வெளிப்படுத்த முடியும். மேலும் சின்றின்ப ஆசையுள்ளவர்கள் செக்ஸைப் பற்றிய சூட்சமங்களை ஒருபோதும் அறிய முடியாது. எனென்றால் அவர்களது அறியாமையால் அவர்கள் வாழ்வு முழுவதும் காமத்தினால் சூழப்பட்டு வாழ்கின்றனர். நான் முன்பு

கூறியபோதுபோல் மிருகங்கள் உடற்புணர்ச்சிக்கென்று ஒரு குறிப்பிட்ட காலத்தை வைத்துள்ளன. அவைகளுக்கு பருவகாலம் உண்டு. மிருகங்கள் மிருகங்கள் அந்த மனநிலை வர குறிப்பிட்ட காலம் கிடையாது. இது ஏன்? ஏனென்றால் மிருகமானது மனிதனைவிட இன்னும் ஆழமான நிலையில் உள்ளது.

செக்ஸைப் பற்றி ஆராய்ச்சி செய்தவர்கள், அதில் ஆழ்ந்து சென்றவர்கள், வாழ்க்கையின் பலதரப்பட்ட அனுபவங்களைக் குறித்து தியானம் செய்தவர்கள் கண்டு பிடித்துள்ள உண்மை என்னவெனில் ஒரு மனிதனின் உடற்புணர்ச்சியானது ஒரு நிமிஷ நேரம்தான் இருக்குமானால் அந்த மனிதன் மீண்டும் அடுத்த நாளே உடற்புணர்ச்சிக்கொள்ள ஆசைப்படுவான். ஆனால் அதே உடற்புணர்ச்சியானது மூன்று நிமிட நேரம் நீடிக்குமானால் அடுத்த ஒரு வாரத்திற்கு அவன் செக்ஸைப் பற்றி நினைக்க மாட்டான் என்பதுதான். அதோடல்லாமல் உடற்புணர்ச்சியானது ஏழு நிமிட நேரம் நீடிக்கப் படுமானால் அடுத்த மூன்று மாதங்களுக்கு அவனுக்குள் காம எண்ணங்கள் எழுவதில்லை. அவன் காமத்திலிருந்து கொஞ்சம் விடுதலை பெற்று விடுவான். அதேபோன்று உடற்புணர்ச்சியின் நேரம் மூன்று மணி நேரமாக நீடிக்குமானால் ஒரு மனிதன் காமத்திலிருந்து என்றென்றைக்கும் விடுதலைப் பெற்று விடுவான். அவனுக்கு அதன் மீது மீண்டும் ஆசை எழாது!

ஆனால், சாதாரணமாக மனிதனின் உடற்புணர்ச்சி அனுபவம் ஒரு க்ஷண நேரம் தான் நீடிக்கிறது. அப்படியிருக்கும் போது மூன்று மணி நேரம் என்பதை கற்பனைகூட பண்ணிப் பார்க்கமுடியாது. எது எப்படியிருந்தாலும் ஒருவனால் உடற்புணர்ச்சி நிலையில், அந்த சமாதி நிலையில் மூன்று மணி நேரம் மூழ்கியிருக்க முடியுமெனில் அவன் தனது வாழ்வில் ஒருமுறை உடற்புணச்சி செய்தாலே போதும். அந்த அனுபவம் அவனது வாழ்வின் மீதிகாலம் முழுதும் அவனை செக்ஸில் இருந்து விடுவித்துவிடும். அப்படிப்பட்டதொரு அனுபவமும், பேரானந்தமும், அதாவது அவனது வாழ்நாள் முழுவதும்

நிலைத்து நிற்கக்கூடிய அளவிற்கு அந்த அனுபவம் ஆகிவிடும். பூரணமான உடற்புணர்ச்சிக்குப் பின்னர் உண்மையான பிரம்மச்சரியத்தை அடைவதற்கு எந்தத் தடையும் இருக்காது.

ஆனால் நமது வாழ்நாள் முழுவதும் காமத்தை அனுபவித்தாலும் நாம் அந்த உன்னதமான நிலைக்கு அருகில் கூட ஒருபோதும் சென்றதில்லை. அந்த தெய்வீகத் தன்மையின் பக்த்தில்கூட நாம் செல்ல முடிவதில்லை. இது ஏன்? வயது முதிர்ந்து ஒருவன் கிழவனாக ஆகிறான். . அவனது வாழ்க்கையின் இறுதிக் கட்டத்திற்கு அவன் வந்துவிடுகிறான். ஆனால் காமத்தின் மீது அவன் கொண்டுள்ள ஆசையிலிருந்து. உடற்புணர்ச்சி செய்ய வேண்டும் என்கிற ஆசையிலிருந்து அவன் ஒருபோதும் விடுதலை அடைந்தது கிடையாது. இது ஏன்? இது ஏனென்றால் காமக்கலையைப் பற்றி அவனும் புரிந்து கொள்ளவில்லை. அல்லது அவனுக்குப் புரியும்படியாக சொல்லப்படவுமில்லை. அவன் காம விஞ்ஞானத்தைப் பற்றி சிந்தித்தது கிடையாது; மெய்யறிவு பெற்றவர்களிடம் அவன் ஒருபோதும் அது குறித்து கலந்துரையாடியது கிடையாது.

வழக்கமாக க்ஷண நேரமே நீடிக்கின்ற அந்த அனுபவத்தை மூன்று மணி நேரம் நீடிக்க வைக்க முடியுமா என்று நீங்கள் சந்தேகப்படலாம். எனவே நான் சில குறிப்புக் களைக் கொடுக்கிறேன். நீங்கள் அவைகளைக் கூர்ந்து கவனித்தால் உங்களது பிரம்மச்சரிய பயணம் சுலபமான தாகிவிடும்.

முதலில் ஒருவரின் சுவாசம் வேகமாகச் சென்றால் உடற்புணர்ச்சியின் நேரம் குறைவாக இருக்கும். ஒருவரின் சுவாசம் அமைதியாகவும். மெதுவாகவும் செல்லுமெனில் உடற்புணர்ச்சியானது அதிக நேரம் நீடிக்க முடியும். மேலும் எந்த அளவுக்கு உடற்புணர்ச்சியானது அதிக நேரம் நீடிக்கிறதோ அந்த அளவுக்கு காமத்தை சமாதி நிலைக்கான ஒரு வாசலாக ஆக்க முடியும். அப்போது காமத்தை மிகவுயர்ந்த பேரின்ப

நிலைக்கு வாய்க்காலாக ஆக்க முடியும். நான் முன்பு கூறிய ஆணவமற்ற நிலையும், காலமில்லாத நிலையும் அந்த உடலுறவு எந்த அளவுக்கு அதிகநேரம் நீடிக்கிறதோ அவ்வளவுக்கு அதிமெய்யுணர்வின் அம்சங்களின் அனுபவம் அதிகமாகும். மூச்சு விடுதல் மெதுவாக இருக்க வேண்டும். சுவாசத்தை மெதுவாக, மெதுவாக விட விட அது காமத்தில் ஆழ்ந்த அறிவை மேன்மேலும் கொடுக்கும்.

அடுத்து உடற்புணர்ச்சியின்போது நீங்கள் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டியது என்னவெனில் உங்களது இரண்டு கண்களுக்குமிடையில், ஆக்ஞை சக்கரம் என்னுமிடத்தில் உங்களது உணர்வு முழுவதும் செலுத்தப்பட வேண்டும். அப்படி நமது கவனம் அந்த இடத்தில் குவிக்கப்படுமானால் நாம் உடற்புணர்ச்சியின்போது பெறுகின்ற உச்சக்கட்ட இன்பமும் மூன்று மணி நேரம்கூட நீடிக்க முடியும். மேலும் இதுபோன்ற தொரு உடற்புணர்ச்சி அனுபவம் மட்டும்தான் ஒரு மனிதனை பிரம்மச்சரியம் என்ற மண்ணில் வேரூன்ற வைக்கும். இந்த வாழ்க்கையில் மட்டுமல்ல, அவனது அடுத்த பிறவியிலும் கூட அந்த அனுபவம் நிலைக்கும்.

இப்படி நான் கூறியதைக் கேட்டு ஒரு பெண்மணி, வினோபா திருமணம் செய்துகொள்ளவில்லை. எனவே அவர் சமாதி நிலையை உயர்மெய்யுணர்வை அனுபவிக்கவில்லை என்று நீங்கள் கூறுகிறீர்களா என்றும் மேலும் அந்தப் பெண்மணி நான் திருமணம் செய்யாமலிருப்பதால் எனக்கும் அந்த சமாதி நிலை அனுபவம் கிடைக்காதா? என்றும் கேட்டுள்ளார். வினோபாவோ அல்லது நானோ அல்லது வேறு யாராக இருந்தாலும் சரி செக்ஸை உண்மையிலேயே அனுபவிக்காமல் பிரம்மச்சரியத்தின் அந்த சிறந்த நிலையை உணர முடியும் என்று அந்தப் பெண்மணி இங்கு இருந்தால் அவருக்குக்கூற விரும்புகிறேன். மேலும் அந்த அனுபவம் இந்தப் பிறவியில் இருக்கலாம் அல்லது இதற்கு முந்தையப் பிறவியில் ஏற்பட்டிருக்கலாம் என்பதையும் அந்தப் பெண்மணிக்குக் கூற

விரும்புகிறேன். ஒருவன் இந்தப் பிறவியில் பிரம்மச்சரியத்தை அடைந்தால் அது அவன் முந்தையப் பிறவியில் செய்த ஆழ்ந்த உடற்புணர்ச்சியின் பலன்தானே தவிர வேறொன்றுமில்லை. இதுதான் அதற்கான விளக்கம். ஒரு மனிதன் தனது முற்பிறவியில் செக்ஸைப்பற்றி ஆழ்ந்து சிந்தித்த அனுபவமிருந்தால் அவன் இந்தப் பிறவியில் செக்ஸின் மீது நாட்டமில்லாமல் இருப்பான். காமம் அவனைத் தொந்தரவு செய்யாது. அவனது கற்பனையில்கூட காமம் இருக்காது. மாறாக மற்றவர்கள் எல்லோரும் செக்ஸின் மீது ஏன் இப்படி ஆர்வம் காட்டுகிறார்கள் என்று எண்ணி அவன் ஆச்சரியப்படுவான். மக்கள் ஏன் இப்படி செக்ஸ் பைத்தியங்களாக இருக்கிறார்கள் என்று அவன் அதிர்ச்சியடைவான். இப்படிப்பட்ட மனிதன் ஆணுக்கும், பெண்ணுக்கும் வித்தியாசம் கண்டுபிடிப்பதற்குக் கூட அதிகப் பிரயத்தனம் எடுக்க வேண்டியதிருக்கும்.

ஒரு மனிதன் தான் எந்தவிதமான ஆழ்ந்த செக்ஸ் அனுபவமும் இல்லாமலே, பிறக்கும் போதே பிரம்மசாரியாக இருக்க வாய்ப்பு இருக்கிறது என்று நினைத்தால் அது தவறு. அவன் எளிதில் பயித்தியமாகிவிடுவானே தவிர பிரம்மச்சாரி ஆக மாட்டான். பிரம்மச்சாரியத்தைக் கடைபிடிக்க அதிக முயற்சி செய்பவர்களும் பயித்தியமாகிவிடுவார்கள். பிரம்மச்சரியம் என்பது வெளியில் இருந்து திணிக்க முடியாதது. தனது செக்ஸ் அனுபவத்தின் சாராம்சமாக பிரம்மச்சரியம் எழவேண்டும். ஆழ்ந்த அந்த ஓர் அனுபவத்தின் விளைவுதான் பிரம்மச்சரியமாக இருக்கும். செக்ஸ்தான் அந்த அனுபவம். செக்ஸ் அனுபவத்தின்போது ஒருவன் அந்த முழுமையான உணர்வைப் பெற முடியுமெனில், ஒரே ஒருமுறை மட்டும் பெற்றால் போதும். அவன் இனிவரும் முடிவில்லா பிறவிகளிலும் கூட செக்ஸிலிருந்து விடுதலைப் பெற்றுவிடுவான்.

இதுவரை நான் அந்த முழுமையான அனுபவத்தைப் பெறுவதற்கு இரண்டு கருத்துக்களைக் கூறினேன். ஒருவனது சுவாசம் மிகவும் மெதுவாக, சுவாசமே நடைபெறவில்லை

என்பதுபோல் அவ்வளவு மெதுவாக இருக்க வேண்டும். ஒருவனது உணர்வுகளை அவனது ஆக்ஞைச் சக்கரத்தில் அதாவது இரண்டு கண்களுக்குமிடையில் உள்ள நடுப்பகுதியில் குவிக்கப்பட வேண்டும். ஒருவனின் விழிப்புணர்வு எந்த அளவுக்கு இந்த புருவமத்தியில் குவிக்கப்படுகிறதோ அந்த அளவுக்கு உடற்புணர்ச்சியானது தானாகவே ஆழ்ந்த அனுபவமாக ஆகிவிடும். மேலும் சுவாசம் எந்த அளவுக்கு உள்ளதோ அதன் நேர்விகிதத்தில் உடற்புணர்ச்சியின் கால அளவு நீடிக்கும். அப்போதுதான் நீங்கள் முதன்முறையாக தளர்வுடன் செக்ஸின் மீது அல்லாமல் நமக்குள்ள கவர்ச்சி அப்போது கிடைக்கின்ற, சமாதி நிலை அதாவது உயர்மெய்யுணர்வு அனுபவத்திற்குத்தான் என்பதையும் உணர்ந்து கொள்வீர்கள். நீங்கள் அந்த அளவுக்கு உயரச் செல்ல முடியுமெனில், அந்த ஒளியை நீங்கள் ஒருமுறை க்ஷணக்காட்சியாகக் கண்டுவிட்டாலும் அதனால் இருளில் மறைந்திருந்த பாதையைக் கண்டுவிட்டாலும் அதில் நீங்கள் எளிதில் நடந்து முன்னேறலாம்.

நெடுங்காலமாக மனிதன் இருளடைந்த, குப்பைகள் நிறைந்த, துர்நாற்றம் நிறைந்த அறையில் இருந்து வருகிறான். அதன் சுவர்கள் கறைபடிந்து விரிசல் கண்டுவிட்டது. அதே நேரத்தில் அவன் எழுந்து ஒரு ஜன்னலைத் திறக்கிறான். இப்போது அவனால் பறவைகள் சுதந்திரமாகப் பறந்து திரிவதைப் பார்க்க முடிகிறது. பரந்த இந்த ஆகாயத்தையும், நிலவையும், சூரியனையும், பறந்து செல்லும் பறவைகளையும், அசைந்தாடும் மரங்களையும், நறுமணம் வீசும் மலர்களையும் அந்த ஜன்னல் மூலமாக ஒருவன் கண்டுகொண்ட பின்னர் அவன் நிச்சயமாக அந்த அசிங்கமான, துர்நாற்றம் வீசுகின்ற இருட்டு அறையில் ஒரு க்ஷண நேரம்கூட இருப்பதற்கு விரும்ப மாட்டான். அவன் திறந்த வானத்தைக் கண்டு வெளியே ஓடி வருவான்.

அதைப் போன்று ஒருவன் ஞானிகளின் சமாதி நிலையை,

மனமற்ற நிலையின் அனுபவத்தை செக்ஸில் காணும்போது, அது எவ்வளவு குறைந்த நேரத்திற்குக் கிடைத்திருந்தாலும் போதும்; அவன் உடனடியாக விடுதலையை நாடுவான், செக்ஸைச் சுற்றியுள்ள இருண்ட அசுத்தமான சுவர்களைவிட்டு வெளியே உடனடியாக வந்துவிடுவான். நாம் எல்லோரும் இறுக்கமான இருட்டு அறைக்கு வெளியே வேறு உலகம் உள்ளது என்பதை நான் அனைவரும் அறிந்து கொள்ளுதல் அவசியமாகிறது. இந்த அறிவுதான் சுதந்திரமாய் வெளியில் வருவதற்கு உதவும். ஆனால் இருண்ட அறைக்குள் உட்கார்ந்தபடி இருந்து ஜன்னல் கதவைத்திறக்காத ஒரு மனிதன் கொஞ்சம்கூட தனது சூழ்நிலையை மாற்றிக் கொள்ள முடியாது. அவன் எப்போதும் அந்த இருண்ட, அசுத்தமான வீட்டிலேயே முடங்கிக் கிடைப்பான்.

தான் பிரம்மச்சாரியாக இருக்க வேண்டுமென்று எண்ணி தனது வாழ்க்கையை வாழ்ந்து வரும் மனிதனும் கூட மற்ற எல்லோரையும் போல் காமச் சிறையில் சிறைப்பட்டுத்தான் கிடக்கிறான். அவனுக்கும், உங்களுக்கும் உள்ள ஒரே வித்தியாசம், அவன் செக்ஸைத் குறித்து கண்ணை மூடிக் கொள்கிறான். ஆனால் நீங்களோ உங்கள் கண்களைத் திறந்து வைத்துள்ளீர்கள். நீங்கள் உடலளவில் செய்வதை அவன் மனதளவில் செய்கிறான். மேலும் உடலளவில் செய்யும் புணர்ச்சி இயற்கையானது. ஆனால் கற்பனைப் புணர்ச்சி என்பது ஒரு வகை நெறிகோணல். எனவே நீங்கள் காமத்தைப் பற்றி தவறாக எண்ணாமல் இரக்கத்துடன் அதை புரிந்து கொள்ள முயற்சி செய்ய வேண்டும் என்று நான் உங்களைக் கேட்டுக் கொள்கிறேன். உங்கள் வாழ்க்கையில் செக்ஸிற்கு நீங்கள் ஒரு புனிதமான அந்தஸ்தைக் கொடுங்கள். நாம் ஏற்கனவே இரண்டு வழிகாட்டும் குறிப்புக்களை பார்த்தோம். மூன்றாவது முக்கியமான விஷயம் செக்ஸை நீங்கள் அணுகும் போது உங்கள் மனநிலை பற்றியதாகும். நீங்கள் ஒரு புனிதமான ஆலயத்தை அடைவது போல் நினைத்து செக்ஸை அணுக வேண்டும். உடற்புணர்ச்சி

யின் போது நாம் உய்விருப்புக்கு அருகில் இருக்கிறோம். ஒருபுதிய உயிரை உருவாக்குகின்ற அந்த செயலில் கடவுள் இருக்கிறார். எனவே உடற்புணர்ச்சியின் போது நீங்கள் உலகைப் படைப்பவருக்கு அருகில் இருக்கிறீர்கள். உடற்புணர்ச்சியின் உச்சக் கட்டத்தின் போது நாம் கடவுளை மிகவும் நெருங்கி விடுகிறோம். அப்போது நாம் வெறும் கருவிகளாக மட்டுமே ஆகிவிடுகிறோம். ஒரு புதிய உயிர் ஒன்றும் இந்த உலகிற்கு அளிக்கப்படுகிறது. நாம் ஒரு குழந்தையைப் பெற்றெடுக் கிறோம். எப்படி? உடற்புணர்ச்சியின் போது நாம் படைப்பாளி யாகிய அந்த இறைவனின் மிக அருகில் இருக்கிறோம். எனவே தூய மனத்தோடும், மரியாதை உணர்வோடும் நாம் காமத்தில் ஈடுபடும்போது நிச்சயமாக, சுலபமாக நாம் தெய்வீகத்தை தரிசிக்க முடியும்.

ஆனால் அந்தோ பரிதாபம், நாம் செக்ஸில் ஈடுபடு வதோ முற்றிலும் மாறானது. செக்ஸை குறை கூறிக் கொண்டே நாம் அதில் ஈடுபடுகிறோம். ஒருவிதமான குற்ற உணர்வுடன் நாம் ஈடுபடுகிறோம். அதனால் அப்போது நாம் படைப்பாளி யாகிய இறைவனை உணர்வதற்குத் தவறி விடுகிறோம். எனவே ஒருவன் கடுந்துயரத்திலிருக்கும் போதும், பகைமையுணர்வுடன் இருக்கும்போதும் கண்டிப்பாக செக்ஸில் ஈடுபடக்கூடாது. தூய்மையற்ற சூழ்நிலையிலோ அல்லது துக்கம் நிறைந்த மனதுடனோ ஒருவன் செக்ஸில் ஈடுபடக் கூடாது. ஆனால் பொதுவான பழக்கம் இதற்கு மாறாக உள்ளது. கோபம் அதிகமாகும்போது, துன்பத்திலிருக்கும் போது தான் ஒருவன் அதிகம் செக்ஸில் ஈடுபடுகிறான். மிகவும் சந்தோஷமான மனிதன் காமத்தின் பின்னே அதைத் துரத்திக் கொண்டு செல்வது இல்லை. ஆனால் துக்கம் நிறைந்த ஒரு மனிதன் செக்ஸில் அதிகம் ஈடுபடுகிறான். ஏனென்றால் தனது துக்கத்திலிருந்து தப்பிப்பதற்கு செக்ஸ் ஒன்றுதான் பூரணமான வழி என்று அவன் கண்டு கொள்கிறான். எனவே கசப்புடனும், வெறுப்புடனும், குறை கூறிக்கொண்டும், சோகத்துடனும் நீங்கள் செக்ஸில் ஈடுபட்டால்

நீங்கள் ஒருபோதும் அந்த திருப்தி நிலையை, உங்களது ஆன்மா ஏங்கித் தவிக்கின்ற அந்த உணர்வு நிலையை அடையமுடியாது.

நீங்கள் மகிழ்ச்சியாக இருக்கின்றபோது மட்டுமே செக்ஸில் ஈடுபடும்படி நான் உங்களை வலியுறுத்துகிறேன். நீங்கள் அன்பால் நிறைந்திருக்கும்போது, நீங்கள் பிரார்த்தனையால் நிறைந்திருக்கும்போது மட்டுமே ஈடுபடுங்கள். உங்களது நெஞ்சம் முழுவதும் சந்தோஷம் நிரம்பியிருக்கும்போது, அமைதியும், நன்றியுணர்வும் நிரம்பியிருக்கும்போது மட்டுமே நீங்கள் உடற்புணர்ச்சியைப் பற்றி எண்ண வேண்டும். இப்படிப்பட்ட மனநிலையில் உடற்புணர்ச்சியில் ஈடுபடும் ஒருவனால் மட்டும்தான், அவன் ஒரே ஒருமுறை என்றால் கூட போதும். அதில் அவன் காமத்தை உருமாற்றம் செய்யவும், அதைப்பற்றிய முடிவான ஞானத்தையும் பெற்றுக்கொண்டு செக்ஸில் இருந்து என்றென்றைக்கும் விடுதலை அடைவதற்கும் அந்த ஒரே ஒருமுறை அனுபவமே போதுமானதாகிவிடும். அந்த ஒரே ஒருமுறை அனுபவத்திலேயே நீங்கள் தடைகளை உடைத்தெறிந்து விட்டு சமாதி நிலையினை நெருங்கிச் சென்றுவிடலாம்.

தாயின் கர்ப்பத்திலிருந்து வெளிவருகின்ற ஒரு குழந்தையானது மிருந்த துயரத்தோடு வருகிறது. ஒருமரத்தை பூமியிலிருந்து வேரோடு பிடுங்குவதைப் போன்றது அது. அதன் முழு உயிரும் மீண்டும் அந்த பூமியோடு இணைவதற்கு ஏங்குகிறது. அதனுடைய வாழ்க்கை, அதனுடைய சக்தி, அதன் வளர்ச்சி இவற்றின் அர்த்தம் அந்த பூமியின் மீது அதற்குள்ள பற்றுதான். அது வேரோடு பிடுங்கப்பட்டுவிட்டது. எனவே அது மீண்டும் திரும்பிச் செல்வதற்கு ஆசைப்படுகிறது. ஒரு சிறு குழந்தை "அதன் தாயின் கருப்பையில் இருந்து வெளியே வரும்போது அது தன்னுடைய உலகத்திலிருந்து முற்றிலும் துண்டிக்கப்பட்டு விடுகிறது. எனவே இப்போது அதன் ஆன்மா, அதன் உயிர் மீண்டும் அந்தத் தாயோடு இணைவதற்கு விரும்புகிறது. நமது காதல் தாகத்திற்கு இந்த ஏக்கம்தான்

காரணம். காதல் என்றால் இதைத் தவிர வேறென்ன அர்த்தத்தை நாம் உணர்கிறோம்?"

நாம் ஒவ்வொருவரும் அன்பைக் கொடுக்கல், வாங்கலில் ஈடுபடத்தான் விரும்புகிறோம். ஒவ்வொருவரும் வாழ்வென்னும் ஓடையில் ஒன்றுசேர விரும்புகிறோம். செக்ஸில் ஈடுபட்டு அது முடியும்போது, நமது உடற்புணர்ச்சி முடியும்போது, ஆணும் - பெண்ணும் சேரும் போது அந்த ஒன்று சேர்தல் நடக்கிறது. நாம் ஏற்கனவே சேர்ந்திருந்த அனுபவத்தை மீண்டும் செக்ஸில் பெறுகிறோம்.

ஆணும், பெண்ணும் புணர்வதில் ஓர் ஆழ்ந்த சிறப்பு உள்ளது. இரண்டு உயிர்கள் இணைவதில் அவற்றின் ஆணவம் ஆவியாகிவிடுகிறது. எனவே இப்படி ஒன்று சேருவதின் சாராம்சத்தை, அன்புக்கும் - ஒன்றாகுதலுக்கும் ஏங்குகின்ற ஏக்கத்தை, எவனொருவன் புரிந்துகொள்கிறானோ அவன் இதைப் போன்று மற்றொரு வகையான அந்த ஒருங்கிணைப்பை யும் புரிந்து கொள்ளமுடியும். ஒரு யோகி, ஒரு துறவி, ஒரு ஞானி, தியானம் செய்பவர் ஆகியோரும் ஒன்று கலக்கின்றனர். உடற்புணர்ச்சியிலும் ஒரு மனிதன் ஒன்று கலக்கிறான். அவனது ஈடுபாடு மற்றவளின் ஈடுபாட்டோடு கலந்து அவர்களிருவரும் ஒருவராகின்றனர். அதே போன்று சமாதிநிலை அனுபவத்தில் ஒருவன் இந்த முழு பிரபஞ்சத்தோடும் இணைகிறான், அதோடு ஒன்றாகிவிடுகிறான். செக்ஸில் இரண்டு பேர் இணைகிறார்கள். அதேபோல் சமாதிநிலையில் ஒருவன் தனது தனித்தன்மையை இழந்துவிட்டு இந்த பிரபஞ்சத்தோடு ஒன்றாகிவிடுகிறான். இரண்டு பேருக்குமிடையே நடக்கும் சந்திப்பு தற்காலிகமானது. ஆனால் இந்த பிரபஞ்சத்தோடு ஒருவன் இணைவது என்றென்றும் நிலைத்து நிற்பதாகும்.

ஒன்று சேருகின்ற இருவரும் ஒரு எல்லைக்குட் பட்டவர்கள். எனவே அவர்களது ஒருங்கிணைப்பும் ஒரு எல்லைக்குட்பட்டதாகத்தான் இருக்கும். அது எப்போதும்

நிலையாக இருக்காது. அதில் ஒருவித உராய்வு உள்ளது. திருமணம் என்கிற ஒரு வரையறை உள்ளது. நாம் எப்போதும் சேர்ந்தே இருக்க முடியாது. க்ஷண நேர இன்பத்தில் நாம் ஒன்று சேருகிறோம். ஆனால் மீண்டும் நாம் பிரிந்துதான் ஆக வேண்டும். பிரிவு என்பது வேதனை நிறைந்தது. எனவேதான் காதலர்கள் எப்போதும் கவலையோடு இருப்பார்கள். இந்த விரக்தி உணர்வுக்கு, இந்தத் தனிமை உணர்விற்கு அடுத்தவர் தான் காரணம் என்று எண்ணுகின்றனர். எனவே அவர்கள் உறவில் வெறுப்பு ஏற்படுகிறது.

இரண்டுபேர் சேரும்போது அவர்கள் அடிப்படையில் மாறுபட்ட தனித்தன்மைகளைக் கொண்டுள்ளனர். எனவே அவர்கள் தற்காலிகமாகத்தான் ஒன்று சேர முடியுமே தவிர, எக்காலமும் அவர்கள் ஒன்று கலந்திருக்க முடியாது என்று கற்றறிந்தவர்கள் கூறுகிறார்கள். இப்படிப்பட்ட தணிக்கமுடியாத ஏக்கத்தினால்தான் காதலர்கள் இருவருக்குமிடையே சச்சரவுகள் வளர்கின்றன. ஒருவர் மற்றவரை திட்ட ஆரம்பிக்கின்றனர். அதனால் அவர்களுக்குள் ஒரு படபடப்பு, பரபரப்பு ஏற்பட்டு ஒருவிதமான விரோத மனப்பான்மை, ஒருவிதமான வெறுப்பு உட்புக ஆரம்பிக்கிறது. இதனால் ஒருவர் மற்றவரை ஏதோ தன் மீது விருப்பமில்லாதவர் என்று கற்பனை செய்து கொள்கின்றனர். எனவே அவர்கள் இருவரும் இணைவது முழுமையாக இருக்காது. ஆனால் இப்படிப்பட்ட அரைகுறைத் தன்மைக்கு யாரையும் குறைகூற முடியாது. மனிதர்கள் எல்லோருமே ஒரு எல்லைக்குட்பட்டவர்கள். எனவே அவர்கள் ஒன்று ஒரு எல்லைக்குட்பட்டுதான் இருக்கும். அந்த ஒருங்கிணைப்பு என்றென்றைக்கும் நீடித்திருக்க முடியாது.

எனவே நிலையான, நிரந்தரமான ஒன்றிணைதல் தெய்வீகத்தோடு, முழுஉய்விருப்பினோடு மட்டும்தான் இருக்க முடியும். தனிப்பட்ட ஒருவரோடு ஒரு க்ஷண நேர ஒன்றிணைவே இந்த அளவுக்கு இன்பத்தைக் கொடுக்கும் போது நாம் நிலையான ஒன்றிணைவினால் ஒன்று கலக்கும்போது

சாதாரணமான இன்பம் எந்த அளவுக்கு இருக்கும் என்பதை உடற்புணர்ச்சியின் உச்சகட்டத்தை அறிந்தவர்களால் எளிதில் கற்பனைப் பண்ணிப்பார்க்க முடியும். ஆனால் சமாதி நிலையின் அந்தப் பேரின்பத்தின் உச்சியை ஒருபோதும் கற்பனையில் பண்ணிப் பார்க்க முடியாது. அது பிரமிக்கத் தக்கது. பரந்து விரிந்தது. வார்த்தைகளுக்கு அப்பாற்பட்டது. அது அழிவில்லாத ஆனந்தம்.

நீங்கள் ஒரு மெழுகுவர்த்தியின் முன் உட்கார்ந்து கொண்டு அந்த மெழுகுவர்த்தியின் வெளிச்சத்திற்கும், சூரியனின் வெளிச்சத்திற்கும் இடையே உள்ள வித்தியாசத்தை ஒப்பிட்டுப் பண்ணிப்பார்க்க முயற்சிப்பதாக வைத்துக் கொள்ளுங்கள். உங்களது ஒப்பிட்டுப் பார்க்கும் அந்த முயற்சி நம்பிக்கையற்றது. மெழுகுவர்த்தியோ மிகவும் சிறியது. ஆனால் சூரியனோ மிகவும் பெரியது: இந்த பூமியை விட அறுபதாயிரம் மடங்கு பெரியது. பத்தாயிரம் கோடி மைல்கள் தூரத்தில் சூரியன் இருந்தாலும் அதன் உஷ்ணத்தை நாம் உணர முடிகிறது. அப்படியிருக்கும்போது மெழுகுவர்த்தியின் வெளிச்சத்திற்கும், சூரியனின் வெளிச்சத்திற்கும் உள்ள வித்தியாசத்தை நாம் எப்படி கணக்கிட முடியும்?

ஆனால் வானியல் புள்ளி விவரங்கள் எப்படியிருந்தாலும் சரி, அவை இரண்டுக்குமிடையே உள்ள வித்தியாசத்தை கணித அளவில் கணக்கிட முடியும். ஏனென்றால் மெழுகுவர்த்தி, சூரியன் இரண்டுமே மனிதனின் அறிவு மட்டத்திற்குட்பட்டே இருக்கின்றன. அந்த வித்தியாசத்தை கணக்கிட முடியும். ஆனால் உடற்புணர்ச்சியின் உச்சகட்ட இன்பத்திற்கும், சமாதி நிலையில் பெறும் ஆனந்தத்திற்கும் உள்ள வித்தியாசத்தை கணக்கிடுவதற்கு முடியவே முடியாது. இரண்டு நிலையற்ற உயிர்களின் காமக் கலப்பு என்பது மூர்க்கமானது. ஆனால் சமாதி, அதிஉயர் மெய்யுணர்வு என்பது ஒரு எல்லையற்ற முழுமையின் மகா சமுத்திரத்தில் ஒரு துளி கலப்பதைப் போன்றது. எனவே அதை ஒப்பிட்டுப் பார்க்க எந்த

வழியும் கிடையாது. இவ்வாறு முழுமையுடன் ஒன்றிணைவதை அளப்பதற்கு எந்தவிதமான அளவுகோல் களும் கிடையாது.

அப்படிப்பட்ட பேரானந்தத்தை அடைந்தபின் ஒருவன் காமத்தின் மீது ஆசை கொள்வானா? அழிவற்ற, வரம்பற்ற ஒன்றை அடைந்த பின் மறைந்து போகின்ற இந்த சிற்றின்பத்தைப் பற்றி நினைப்பானா? இப்படி அழிவற்ற அந்த ஒன்றின் தரிசனமானது மனிதனை சிற்றின்பம் அர்த்தமற்றது என்றும் அது பைத்தியக் காரத்தனம் என்றும் நினைக்க வைத்து விடுகிறது. அதன்பின்னர் அவனிடமுள்ள காமமானது வெறுப்பூட்டுவதாக ஆகிவிடுகிறது. அதன்பின் அவன் செக்ஸ், சக்தியை விரயம் செய்வதாக, இருப்பதைக் கண்டு கொள்கிறான். இப்படிப் பட்டத் தெளிவு மனிதனிடம் ஏற்பட்ட பின்னர்தான் அவன் தனது இலட்சியப் பாதையில் பிரம்மச் சரியத்தை நோக்கிச் செல்ல முடியும்.

காமத்திலிருந்து உயர்மெய்யுணர்வை அடையும் பயணம் அதிக நீளமானது. உயர்மெய்யுணர்வுதான் முடிவான இலட்சியம். செக்ஸ் என்பது அதன் முதல் படிக்கட்டு. எனவே முதல் படிக்கட்டை ஏற்றுக்கொள்ள மறுப்பவர்கள், முதல் படிக்கட்டை கண்டனம் செய்பவர்கள் நிச்சயமாக இரண்டாவது படியைக்கூட அடைய முடியாது என்பதை நான் சுட்டிக் காட்ட விரும்புகிறேன். அவர்கள் முன்னேறவே முடியாது. சுயப் பிரக்ஞையோடு, விழிப்புணர்வோடு தெளிவாகப் புரிந்துகொண்டு முதல்படியிலிருந்து ஆரம்பிக்க வேண்டும். ஆனால் எச்சரிக்கை யாய் இருங்கள். செக்ஸிலேயே எல்லாம் முடிந்து விடப் போவ தில்லை. செக்ஸ் என்பது ஒரு ஆரம்பம் தான். நீங்கள் முன்னேற இன்னும் அதிகமான படிகளைக் கடந்தாக வேண்டும்.

ஆனால் மனித வர்க்கத்தின் மாபெரும் குறை என்னவென்றால் அந்த முதல் படியில் கால் வைப்பதற்குக்கூட நாம் தயங்குவதுதான். கடைசிப்படியை அடைய அது உதவும். ஒரு மனிதன் ஏணியின் முதல்படியை விட்டு விடுகிறான். ஆனால் ஏணியின் கடைசிப் படியை அடைய விரும்புகிறான்.

அவன் இன்னமும் ஒரு மெழுகுவர்த்தியின் ஒளியையே அனுபவிக்கவில்லை. ஆனால் அதற்குள்ளாக சூரியனின் பிரகாசத்தை அனுபவிக்க ஆசைப்படுகிறான். இது முடியவே முடியாது. சூரியனின் பிரகாசத்தை நாம் புரிந்துகொள்ள வேண்டுமெனில் முதலில் நாம் ஒரு மெழுகுவர்த்தியின் மங்கிய ஒளியை, லேசாகக் காற்று வீசினாலும் அணைந்து போகின்ற, க்ஷண நேரம் மட்டுமே உயிர் வாழ்கின்ற அந்த ஒளியை நாம் முதலில் புரிந்துகொள்ள வேண்டும். சூரியனை அடையவேண்டும், கடைசிப் படியை எட்டிப்பிடிக்க வேண்டுமென்கிற ஆசையை, தாகத்தை, ஓயாத உழைப்பை தட்டி எழுப்ப முதல் படியில் சரியானபடி காலெடுத்து வைக்கவேண்டும்

மெல்லிசையை சரியான முறையில் பாராட்டுவது அழிவற்ற அந்த சங்கீதத்திற்கு வழி அமைத்துக் கொடுக்கும். மங்கிய ஒளியின் அனுபவம் நம்மை எல்லையற்ற ஒளியை நோக்கி அழைத்துச் செல்லும். ஒரு சொட்டு நீரை அறிவது என்பது ஒரு சமுத்திரத்தைப் பற்றி அறிவதற்கான முன்னோட்டமாகும்.

அணுவைப் பற்றி நாம் அறிந்துகொண்டது இந்த உலகிலுள்ள எல்லா சக்திகளையும், எல்லாப் பொருள்களின் சக்தியையும் அறிந்துகொள்ள உதவுகிறது. இயற்கையானது நம்மிடம் காமம் என்னும் ஒரு சிறிய அணுவைக் கொடுத் துள்ளது. ஆனால் நாம் அதை அடையாளம் கண்டு கொள்வதே கிடையாது. அதை முழுவதும் ஏற்றுக்கொள்வது மில்லை . இது ஏனென்றால் நம் மனதில் தெளிவும் இல்லை. அதே சமயம் அந்தப் புதிரை அறிந்துகொள்ளும் ஆர்வமும், அதைப் புரிந்துகொள்ளும் ஆர்வமும், அதை அனுபவிக்கும் ஆர்வமும் இல்லை. எனவே செக்ஸிலிருந்து சமாதிநிலைக்கு நம்மை அழைத்துச் செல்லும் வழிமுறையைத் தெரிந்து கொண்டு அதில் நன்றியுணர்வுடன் மழை முடிந்தால் அவனால் ஒரு உயர்ந்த மனிதனை உருவாக்க முடியும்.

ஆணும் - பெண்ணும் இரண்டு மாறுபட்ட துருவங்கள். சக்தியின் நேர் மற்றும் எதிர்துருவங்கள். இந்த இரண்டு துருவங்களும் சரியாக சந்தித்து ஒரு சுற்றை முழுமைப் படுத்துமானால் ஒருவிதமான மின்சாரம், ஒருங்கிசைவு உண்டாகும். உங்களது உடற்புணர்ச்சியின்போது ஒருங்கிணைந்து முழுமை யாக ஆழமாக செல்லும்போது, அதே நிலையில் அதிக நேரம் நீடித்திருக்கும் போது இத்தகைய மின்சாரத்தை நீங்கள் நேரடியாக உணர்ந்து கொள்ளமுடியும். அந்த நிலையை நீங்கள் அரை மணி நேரத்திற்கு நீடிக்க வைக்க முடியுமானால் மிகவும் அதிக சக்தி வாய்ந்த ஒலு மின்சார ஜோதி உங்களைச் சூழ்ந்து தானாகவே உருவாகும். உங்கள் உடலில் சக்தி ஓட்டங்கள் முழுமையாகவும், முழு அரவணைப்பிலும் இருக்குமானால் இருளில் அத்தம்பதிகளைச் சூழ்ந்தவாறுள்ள ஒரு ஒளிப் பிரபையை நீங்கள் காண முடியும். சக்தியின் இந்த ஒளிப்பிரபையை அனுபவித்த ஜோடிகள் செக்ஸை முற்றிலும் கடந்தவர்களாகிவிடு கிறார்கள்.

ஆனால் இந்தக் கருத்துக்கள் நம்முடையவை அல்ல. இப்படிப் பேசுவது நமக்கு விநோதமாகத் தெரியும். ஏனென்றால் நாம் அனுபவிக்காத ஒன்றை நாம் ஒருபோதும் நம்ப முடியாது. ஆனால் இப்படிப்பட்ட அனுபவத்தை நீங்கள் பெறவில்லை யெனில் அதைப் பற்றி நீங்கள் சிந்தித்து அதைப் பெறுவதற்கு மீண்டும் நீங்கள் முயன்று பார்க்க வேண்டும் என்று நான் கூறுகிறேன். நீங்கள் உங்கள் வாழ்க்கைப் பாடத்தை திரும்பிப் படிக்கவேண்டும். குறிப்பாக காமம் என்னும் பாடத்தை அ. ஆ விலிருந்து படிக்கவேண்டும்.

காமம் என்பது சிற்றின்பத்திற்கான ஒரு கருவியாக மட்டும் இருக்கக்கூடாது. ஆன்மீக உயர்விற்கும் அது ஒரு வழியாக இருக்கவேண்டும். செக்ஸ் என்பது ஒரு யோக முறை. கிறிஸ்து, புத்தர் அல்லது மகாவீரர் இவர்களின் பிறப்பு ஏதோ எதிர் பாராமல் நடந்தது என்று நான் எண்ணவில்லை. ஒவ்வொரு பிறப்பும் இருவர் ஒன்றிணைவதால் கிடைத்த பழங்கள். எனவே

ஒன்று கலத்தல் எந்தளவுக்கு ஆழமானதாக உள்ளதோ அந்தளவுக்கு நமது சந்ததிகள் நன்றாகயிருக்கும். ஒன்று கலத்தல் சரியாகயில்லாத போது அதன் மூலம் வரும் சந்ததிகளும் மோசமானதாக இருக்கும். ஆனால் இன்று மனிதனின் தரம் மேன்மேலும் தாழ்ந்துகொண்டே போகிறது. ஒழுக்க விதிகள் அழிந்து போனதால்தான் இப்படி உள்ளது என்று சிலர் கூறுகின்றனர். வேறு சிலர் இதெல்லாம் வரப்போகும் குழப்பமான கலியுகத்தின் விளைவுகள் என்கின்றனர். ஆனால் இப்படிப்பட்ட கணிப்புக்களெல்லாம் தப்பானவை, மதிப்பற்றவை. மனிதனின் இந்த அழிவிற்கு காரணம் ஏட்டளவிலும் சரி, பயிற்சி அளவிலும் சரி, காமத்ததைப் பற்றி நமது முரணான நோக்கம்தான். காமம் அதன் பழைய புனிதத்தை இழந்துவிட்டது. காமத்தைப்பற்றி மனிதன் முதலில் வைத்திருந்த மரியாதை களங்கப்படுத்தப் பட்டுவிட்டது. ஒருவித இயந்திரத்தனமான மூச்சுத் திணறலுக்கு செக்ஸ் தள்ளப்பட்டு விட்டது. காமத்திடம் நாம் கொண்டுள்ள இந்த நோக்கம் கண்ணுக்குத் தெரியாத வன்முறையை உருவாக்கிவிட்டது. காமம் என்பது அன்பின் அனுபவமாக இப்போது இல்லை. காமம் புனிதத்தை நோக்கியப் பயணத்திற்கு ஒரு கருவியாக இப்போது இல்லை. காமம் என்பது ஒரு தியானத்தைப் போன்று இப்போது இல்லை. இதனால் மனித இனம் நிதானமாக படுபாதாளத்தில் விழுந்து கொண்டிருக்கிறது.

நாம் செய்கின்ற எந்த ஒருகாரியத்தின் பலனும் நாம் அந்தக் காரியத்தை எந்த மன நிலையோடு செய்கிறோம் என்பதைப் பொறுத்துதிருக்கிறது. குடிபோதையில் உள்ள ஒரு சிற்பி ஒரு சிலையை செதுக்கினால் அவன் கலையம்சமுள்ள ஒரு அழகான சிலையை உருவாக்குவான் என்று நீங்கள் எதிர்பார்க்கிறீர்களா? ஒரு நடன மாது நடனமாடும்போது துக்கமும், கலக்கமும், கோபமும் நிறைந்திருந்தால் அவளிடமிருந்து நல்ல நடனத்தை நீங்கள் எதிர்பார்க்கலாமா? அதைப் போன்றுதான் காமத்தைக் குறித்து நமது அணுகுமுறை தப்பாகப் போய்விட்டது.

நமது வாழ்க்கையில் மிகவும் நிராகரிக்கப்பட்ட பகுதி செக்ஸ்தான். எந்தக் கருத்தில் புதிய உயிர்களின் உற்பத்தி புதைந்துள்ளதோ, புதிய குழந்தைகள் எதை நம்பி உள்ளார்களோ, இந்த உலகில் புதுப்புது ஆன்மாக்கள் நுழைவதற்கு எந்தக் காரியம் காரணமாக உள்ளதோ, அந்தக் காரியத்தை நாம் நிராகரித்துவிட்டது ஒரு பயங்கரமான தவறாக நமக்குப் படவில்லை. உடற்புணர்ச்சியின் உச்சக்கட்டத்தின் போது நீங்கள் இந்த உலகில் ஒரு ஆன்மா இறங்குவதற்கு, ஒரு புதிய உயிர் கருக்கொள்வதற்கு உண்டான ஓர் சூழ்நிலையை உருவாக்குவது உங்களுக்கு அநேகமாகத் தெரியாது. நீங்கள் அந்த சூழ்நிலையை மட்டுமே உருவாக்குகிறீர்கள். ஒரு குறிப்பிட்ட ஆன்மாவிற்குத் தேவையான எல்லா நிபந்தனைகளும் நிறைவேறும் போது அந்த ஆன்மா பிறக்கிறது. அந்த ஆன்மாவின் குணாதிசயம் நீங்கள் உருவாக்கும் அந்த சூழ்நிலையோடு நேரடியான தாக்குதலை உடையது. கோபத்திலும், கடுந்துயரத்திலும், குற்ற உணர்வுடனும் இருக்கும்போது கருவுறுகிற சிசு பிறந்ததி லிருந்தே தொந்தரவு செய்யும். நமது சந்ததியின் தரம் உயர்ந்ததாக ஆக முடியும். ஆனால் அப்படியொரு உயர்ந்த ஆன்மாவை உருவாக்க நாம் அதே போன்று உயர்ந்த சூழ்நிலையையும் உருவாக்கவேண்டும். அப்போதுதான் உயர் ஆன்மாக்கள் பிறக்க முடியும். அப்போதுதான் மனித இனத்தின் தரம் உயர்த்தப்பட முடியும். எனவே மனிதன் காம விஞ்ஞானத்தில் நன்கு பழகி, காமக்கலையில் நன்கு பழக்கம் ஏற்பட்டு, அவன் சிறியவர், பெரியவர் எல்லோரிடமும் அந்த அறிவை வழங்கும் பொழுதுதான் நாம் அரவிந்தரும், நியட்சேயும் கூறிய அந்த "அதி உன்னத மனிதனை" "உன்னத ஆன்மா" எனக்கூடிய மனிதனை உருவாக்குவதற்கான சூழ்நிலைகளை உருவாக்கும் தகுதியை பெற முடியும். இது போன்ற தலைமுறைகளை உருவாக்க முடியும்! இது போன்றதொரு உலகத்தை உருவாக்க முடியும்! ஆனால் அதுவரை இந்த உலகில் ஒரு முன்னேற்றமும் இருக்காது. இந்த

உலகில் அமைதி இருக்காது. அதுவரை இந்த உலகில் போர்கள் தவிர்க்க முடியாதவையாகிவிடும். பகைமையை ஒழிக்கமுடியாது. ஒழுக்கமின்மையை குணப் படுத்த முடியாது. தீயவைகளை ஒழிக்கமுடியாது. உயிர்க் கொலைகளை வேரறுக்க முடியாது. இப்போதுள்ள இருளை விரட்டவே முடியாது.

நாம் எவ்வளவுதான் நமது நவீன வசதிகளையும், கண்டு பிடிப்புக்களையும் செயலில் காட்டினாலும் கூட அரசியல் வாதிகள், சமூக இயல்வல்லுநர்கள் மற்றும் மதத்தலைவர்கள் இவர்கள் எல்லோரும் அவர்களால் முடிந்த எல்லாவற்றையும் செய்தாலும் சண்டைகள் ஒருபோதும் நின்றுபோகப் போவதில்லை, பரபரப்பு இல்லாமல் போகாது. வன்முறையும், போட்டி பொறாமையும் மறைந்து போகாது. கடந்த பத்தாயிரம் ஆண்டுகளாக இந்த அப்போஸ்தலர்களும், மெசையாக்களும், தலைவர்களும், போர், வன்முறை, கோபம் இப்படி எல்லாவற்றையும் எதிர்த்து பிரச்சாரம் செய்து வருகின்றனர். ஆனால் ஒருவர்கூட கவனிப்பதில்லை. அதற்கு மாறாக அன்பை நமக்கு போதித்த ஒருவரை, நமக்கு ஆன்மீகப் பாதை ஒன்றைக் காட்டிய ஒருவரை நாம் சுட்டுக் கொன்றோம். காந்தி நமக்கு அஹிம்சையையும், நமது ஆன்மாவை பரிசுத்தமாக வைத்திருக் கவும், நாம் ஒற்றுமையாக வாழவும் கற்றுக் கொடுத்தார். ஆனால் நாம் அவருக்கு கொடுத்த பரிசு துப்பாக்கிக் குண்டுகள் தான். அவர் ஆற்றிய அரும் பணிகளுக்கு நாம் அப்படித்தான் நமது நன்றியைத் தெரிவித்தோம்.

இதுவரை கடந்த காலத்திலும் சரி, இப்போதும் சரி மனித இனத்தை காப்பதற்கு பாடுபட்ட தலைவர்கள் வெற்றி கண்டதில்லை. அவர்கள் தோற்றுப்போய்விட்டனர். அவர்களின் கொள்கைகள். அவர்களால் உருவாக்கப்பட்டு எடுத்துரைக்கப் பட்ட எல்லாக் கொள்கைகளும் எந்தப் பலனையும் அளிக்க வில்லை. அவர்களின் எந்த ஒரு கொள்கைகளையும் செயல் படுத்த முடியவில்லை. அவர்களது உயர்ந்த கொள்கை களெல்லாம் தோற்றுப் போய்விட்டன. பெரியப் பெரிய

கொள்கைகளும், தங்கத்திலும் தங்கமான கொள்கைகளும் மதிப்பு குறைந்து போயின. அவர்கள் போய்விட்டார்கள். ஆனால் மனிதன் இன்னும் இருளில் தேடிக் கொண்டே இருக்கிறான். இந்த பூமியில் நரகம் என்னும் கிணற்றில் இன்னும் ஆழத்தில் மூழ்கிக் கொண்டிருக்கிறான். இதிலிருந்து அவர்கள் என்ன பிரச்சாரம் செய்தார்களோ அதில் அவர்களது போதனையில் அடிப்படையிலேயே ஏதோ தவறான எண்ணம் ஏற்பட்டுவிட்டது என்பது நிரூபணம் ஆகவில்லையா?

ஏமாற்றத்தில் கருவுற்ற ஒருமனிதன் ஏமாற்றத்தில்தான் வாழ்வான். அவன் ஆரம்பத்திலிருந்தே ஏமாற்றம் என்னும் கிருமியை சுமக்கிறான். அவனது ஆன்மா நோயுறுகிறது. அந்த நோயானது, துன்பம் மற்றும் வருத்தம் இவற்றின் புற்று நோயானது, அவனது ஆன்மாவில் ஆழமாக வேரூன்றி விடுகிறது. அவன் கருவுறும்போதே அவனது முழு உயிரும் உருவாகிவிடுகிறது. எனவேதான் புத்தர்கள் தோற்றுப் போகிறார்கள், மகாவீரர்கள் தோற்றுப் போகிறார்கள், கிறிஸ்துக்கள் தோற்றுப் போகிறார்கள், கிருஷ்ணர்களும் தோற்றுப் போகிறார்கள். அவர்கள் எல்லோரும் ஏற்கனவே தோற்றுப் போய்விட்டார்கள்.

பண்பிற்காகவும், அடக்கத்திற்காகவும் நாம் இதை வெளிப்படையாக ஒத்துக்கொள்ள மாட்டோம். ஆனால் மனித இனம் நாளுக்கு நாள் மனிதாபிமானமற்று வருகிறது. அஹிம்சை, அன்பு, சகிப்புத்தன்மை இவைகளைப் பற்றி எவ்வளவோ பேசப்பட்டிருந்த போதிலும், நாம் வெறும் கத்தியிலிருந்து இப்போது ஹைட்ரோஜன் அணுகுண்டு தயாரிக்குமளவிற்கு முன்னேறியுள்ளோம். அஹிம்சை வெற்றிகரமாக போதிக்கப் பட்டதாக கூறமுடியாது. முதல் உலக மகா யுத்தத்தின் போது நாம் மூன்று கோடி மக்களை கொன்று குவித்தோம். அந்தப் போருக்குப் பின்னர் நாம் அமைதியைப் பற்றியும், அன்பைப் பற்றியும் பேசினோம். ஆனால் இரண்டாவது உலக மகாயுத்தத்தில் ஏழரைக் கோடி மக்களை கொன்று குவித்தோம். அதன் பின்னர் நாம் சமாதானப் பேச்சு வார்த்தைகளை நடத்தி

மீண்டும் ஒற்றுமையாக இருந்தோம். பெர்ட்ரண்ட்ரஸ்ஸலிலிருந்து வினோபா வரை எல்லோரும் அமைதி காக்க வேண்டுமென்று கத்துகின்றனர். என்றாலும் நாம் மூன்றாவது உலக யுத்தத்திற்கு நம்மை தயார் செய்து கொண்டிருக்கிறோம். ஒப்பிட்டுப் பார்த்தால் மூன்றாவது யுத்தம் முந்தைய இரண்டு போர்களையும் சிறு குழந்தை விளையாட்டைப் போல் ஆக்கிவிடும்.

ஒருமுறை ஐன்ஸ்டீனிடம் மூன்றாவது உலக யுத்தம் வந்தால் என்ன நடக்குமென்று யாரோ கேட்டார்கள். அதற்கு ஐன்ஸ்டீன் மூன்றாவது உலகப் போரைப் பற்றி தான் எதுவும் கூற முடியாது. ஆனால் நாலாவது உலகப் போரைப் பற்றி கொஞ்சம் கூற முடியும் என்று கூறினார். கேள்விக்கேட்டவர் ஆச்சரியத்தில் எப்படியென்று கேட்டார். மூன்றாவது உலகப் போரைப் பற்றி எதுவுமே கூறமுடியாத போது நான்காவது உலகப் போரைப் பற்றி எப்படிக் கூற முடியும் என்று கேட்டார். அதற்கு ஐன்ஸ்டீன் நான்காவது உலகப் போரைப் பற்றி ஒன்று மட்டும் நிச்சயமாக கூற முடியும். ஏனென்றால் நான்காவது உலகப் போர் என்று ஒன்று நடக்காது என்று பதிலளித்தார். ஏனென்றால் மூன்றாவது உலகப் போரில் யாராவது உயிர் பிழைத்தால்தானே நான்காவது உலகப் போர் நடக்க முடியும்.

மனித இனத்திடம் ஒழுக்கம் மற்றும் சமய போதனைகள் ஏற்படுத்தியுள்ள பலன்கள் இதுதான். ஆகையால் இதன் காரணம் எங்கு உள்ளதோ அதை நாம் மாற்றியமைக்க வேண்டியது நமது அவசரத் தேவை. நாம் நமது சிற்றின்ப செயல்களில் ஒரு இணக்கத்தை உருவாக்காத வரையில், காமத்திற்கு ஒரு ஆன்மீக அந்தஸ்து அளிக்காத வரையில், காமத்தை அதிஉன்னத விழிப்புணர்வை அடைவதற்கான ஒரு வாசலைப் போல் மதிக்காத வரையில் ஒரு சிறந்த மனித இனம் உருவாக முடியாது. இது நடைபெற வில்லையெனில் மனித இனம் இன்னும் மோசத்திலும் மோசமாகிவிடும். ஏனென்றால் இன்று மிகவும் தாழ்ந்த நிலையிலுள்ள குழந்தைகள் காமத்தில் ஈடுபட்டு

அவர்களைவிட இன்னும் தாழ்ந்த குழந்தைகளைத்தான் உருவாக்குவார்கள். வருகின்ற புதிய சந்ததிகளின் தன்மை மோசமாகிக் கொண்டே போகும். இதை மட்டும் நாம் தீர்க்கமாகச் சொல்ல முடியும். ஆனால் நாம் ஏற்கனவே மிகவும் தாழ்ந்த நிலைக்குச் சென்றுவிட்டதால் இதற்கு மேலும் தாழ்ந்து போவதற்கு சாத்தியங்கள் கிடையாது. இந்த உலகமே ஒரு மிகப் பெரிய அகதிகள் முகாமாகிவிட்டது.

அமெரிக்க மன இயல் நிபுணர்கள் நியூயார்க் நகரத்திலுள்ளவர்களில் பதினெட்டு சதவீதத்தினர் மட்டுமே மன அளவில் சரியாக உள்ளனர் என்று கணக்கெடுப்பின் மூலம் கண்டுபிடித்து உள்ளனர். பதினெட்டு சதவீதமக்கள் தான் மன அளவில் சரியாக உள்ளனர் எனில் மீதமிருக்கும் எண்பத்தி இரண்டு சதவீதத்தின் நிலை என்ன? அவர்கள் எல்லோரும் மனம் இரண்டுபட்ட நிலையில் உள்ளனர். நீங்கள் ஒரு மூலையில் அமைதியாக உட்கார்ந்து கொஞ்சம் நேரம் உங்களை நீங்களே கவனித்துப் பார்த்தால் உங்களுக்குள் மறைந்து கிடக்கும் பைத்தியக்காரத்தனத்தின் அளவை அறிந்து நீங்களே ஆச்சரியமடைவீர்கள். நீங்கள் உங்களது பைத்தியக்காரத் தனத்தை எவ்வளவு திறமையாக கட்டுப்படுத்தி வைக்கிறீர்கள் என்பது வேறு விஷயம். கொஞ்சம் உணர்ச்சி அதிகமானால் போதும் எந்த ஒரு மனிதனும் முழுமை பெற்ற ஒரு பைத்தியமாக ஆகிவிட முடியும்.

இன்னும் ஒரு நூற்றாண்டிற்குள் இந்த உலகமே பெரிய பைத்தியக்கார விடுதியாக ஆகிவிடும் என்று மட்டும் நிச்சயமாகக் கூற முடியும். ஆனால் ஒரு வகையில் அதனால் நிறைய ஆதாயம் உண்டு. ஏனென்றால் பைத்தியத்திற்கு நாம் வைத்தியம் செய்ய வேண்டிய தேவை இருக்காது. பைத்தியத்திற்கு வைத்தியம் பார்க்க மனநோய் டாக்டர்கள் தேவைப்படாது. யாரும் தான் பைத்தியம் என்பதை உணரமாட்டார்கள். ஏனென்றால் ஒரு பித்தனால் தன்னை ஒரு பைத்தியம் என்று ஏற்றுக் கொள்ள இயலாது. இந்த நோய்

அதிகமாகிக் கொண்டே போகிறது. இந்த வியாதி, இந்த மனத்துயர், இந்த மன இருள் அதிகரித்துக் கொண்டே போகிறது. காமத்தை மாற்றியமைக்காதவரை, சிற்றின்பச் செயல்கள் தெய்வீகமானவை யாக ஆகாதவரை ஒரு புதிய மனித இனம் ஒருபோதும் உருவாக முடியாது.

கடந்த மூன்று தினங்களாக நான் ஒரு புதிய கருத்தை வலியுறுத்தி வந்தேன். ஓர் புதிய மனிதன் பிறக்க வேண்டும்! என்பதுதான் அது. மனிதனின் ஆன்மா உயரத்தில் செல்வதற்கு, வானத்தை தொடுவதற்கு, நிலவையும், நட்சத்திரங்களையும் போல் மெய்யறிவு பெறுவதற்கு, ஒருமலரைப் போல் மலர்வதற்கு பாடுவதற்கு, ஆடுவதற்கு இவையெல்லாவற்றிற்கும் ஆசைப் படுகிறது. அவனது ஆன்மா கடுந்துயரத்தில், தாகத்தில் உள்ளது. ஆனால் மனிதன் குருடனைப்போல் இருக்கிறான். மனிதன் தான் சுற்றி வந்த பாதையிலேயே மீண்டும், மீண்டும் சுற்றி வருகிறான். அந்தப் பாதையிலிருந்து வெளிவர முடியவில்லை. அதைவிட்டு மேலேழுந்து நிற்க முடியவில்லை. இதற்குக் காரணம் என்ன? அதற்கு ஒரு காரணம் உள்ளது, ஒரே ஒரு காரணம் மட்டுமே உள்ளது. அவனது இப்போதைய இனவிருத்தி முட்டாள் தனமானது. அது முழுவதும் பைத்தியக் காரத்தனமானது. காமத்தை நாம் கடவுளை அடையும் வாசலாக கருதாததினால்தான் அது அப்படி உள்ளது. மெய்யறிவுடன் கூடிய ஓர் உடற்புணர்ச்சி யானது சமாதி நிலைக்கான கதவுகளைத் திறக்க முடியும்.

மூன்று நாட்களாக நான் சில கருத்துக்களை மட்டுமே விரிவாகக் கூறினேன். நான் இப்போது மீண்டும் ஒரு கருத்தை வலுயுறுத்தி விட்டு இன்றைய எனது சொற்பொழிவை முடித்துக் கொள்கிறேன்.

வாழ்க்கையின் உண்மைகளிலிருந்து நம்மை விலக்கி அழைத்துச் செல்பவர்களை மனித இனத்தின் விரோதிகளென்று நான் கூறுகிறேன். செக்ஸைப்பற்றி ஒருபோதும் நீங்கள் நினைக்காதீர்கள் என்று கூறுபவர்கள்தான் உங்களது விரோதிகள்.

அவர்கள் அதைப்பற்றி உங்களை சிந்திக்க விடவில்லை. இல்லையெனில் அந்த விஷயத்தைப் பற்றி இன்னமும் நாம் ஒரு பகுத்தறிவுள்ள மனப்பான்மை வளர்க்காமல் இருந்தது எப்படி?

மேலும் காமத்திற்கும், சமயத்திற்கும் சம்பந்தமில்லையென்று கூறுபவர்கள் முற்றிலும் தவறானவர்கள். என்னென்றால் காம சக்திதான் உருமாற்றம் அடைந்து, பதங்கமாகி மதம் என்னும் ஆதிக்கத்திற்குள் வருகிறது. இந்த உயிர்ச்சத்தானது புடம் போடப்பட்டு மனிதனை மிகவுயர்ந்த நிலைக்கு உயர்த்துகிறது. அந்த நிலையைப் பற்றி நாம் அறிந்துள்ளது மிக சொற்பம்தான். காம சக்தியை மாற்றியமைத்தால் மனிதனை மரணமேயில்லாத உலகிற்கு, துக்கமில்லாத உலகிற்கு, சந்தோஷம், தூய்மையான சந்தோஷத்தைத் தவிர வேறு எதுவுமில்லாத உலகிற்கு உயர்த்துகிறது. அந்த சக்தியை, அந்த உயிர்ச்சத்தை பெற்றுள்ளவர்கள் யாராக இருந்தாலும் அவர்கள் அந்த பேரானந்தமயமான சத்தியத்துக்கு மெய்யுணர்வுக்கு நிலைக்கு, சச்சிதானந்தத்திற்கு தங்களை உயர்த்திக்கொள்ள முடியும்.

ஆனால் இந்த சக்தியை நாம் வீணாக்கி வந்துள்ளோம். அடியில் ஓட்டைகள் நிறைந்த வாளிகளைப்போல் நாம் இருக்கிறோம். மேலும் இந்த வாளிகளைத்தான் நாம் கிணற்றிலிருந்து தண்ணீர் எடுக்க உபயோகித்து வருகிறோம். எனவே நாம் வாளியை மேலே இழுப்பதற்குள் எல்லாத் தண்ணீரும் ஒழுகி இறுதியில் வெறும் வாளிதான் மிஞ்சுகிறது. அடிப்பாகத்தில் ஓட்டைகள் நிறைந்த படகுகளைப் போல் நாம் இருக்கிறோம். நாம் மூழ்கிப் போவதற்காகவே துடுப்பு இழுக்கிறோம். இப்படிப்பட்ட படகு ஒருநாளும் அடுத்தக் கரையைச் சென்றடையாது. நடு ஆற்றில் அது மூழ்கிப் போவதுதான் அதன் விதி. இந்த ஒழுகல்கள் எல்லாம் நாம் காமசக்தியின் ஓட்டத்தை தவறான திசையில் திருப்பிவிட்டதால் ஏற்பட்டதுதான்.

நிர்வாண புகைப்படங்களை காட்டுபவர்களும், ஆபாச புத்தகங்களை எழுதுபவர்களும், செக்ஸ் திரைப்படங்களை

தயாரிப்பவர்களும் நமது காமசக்தியானது இப்படி ஒழுகுவதற்கு பொறுப்பாக மாட்டார்கள். இதுபோன்ற நெறி கோணல்களுக்கு செக்ஸைப் பற்றி நாம் அறிந்துகொள்ள, புரிந்துகொள்ள தடைகளைப் போட்டவர்கள்தான் பொறுப்பாவார்கள். அது போன்ற மக்களால்தான் நிர்வாணப்படங்களுக்கு மக்களிடையே அதிக கிராக்கி உள்ளது. ஆபாச புத்தகங்கள் விற்கப்படுகின்றன, நிர்வாண திரைப்படங்கள் எடுக்கப்படுகின்றன. மேலும் இதன் மூலம் ஏற்படுகின்ற அருவருப்பான, முட்டாள்தனமான விளைவுகளை நாம் ஒவ்வொரு நாளும் காண்கிறோம். தங்களைத் துறவிகளென்றும், புனிதமானவர்களென்றும் அழைத்துக் கொள்பவர்கள்தான் இதற்கு காரணம். எனவே நீங்கள் இதைக் கொஞ்சம் ஆழ்ந்து நோக்கினால் இப்படிப்பட்ட மனிதர்கள் தான் ஆபாசத்திற்கு உண்மையான விளம்பரம் செய்யும் ஏஜென்டுகள் என்பது தெரியும்.

ஒரு சிறிய கதையுடன் இன்றைய பேச்சை நான் முடித்து விடுகிறேன்.

ஒரு பாதிரியார் பக்கத்து கிராமத்தில் உள்ள சர்ச்சிற்கு ஜெபம் நடத்துவதற்காக சென்று கொண்டிருந்தார். குறிப்பிட்ட நேரத்தில் அங்கு இருக்க வேண்டுமென்பதால் அவர் அவசரமாக ஓடிக்கொண்டிருந்தார். போகும் வழியில் ஒரு வயலைக் கடக்கும் போது பக்கத்தில் உள்ள ஒரு குழியில் ஒரு காயமுற்ற மனிதன் தவழ்ந்து கொண்டிருப்பதை கண்டார். அந்த மனிதனின் நெஞ்சில் ஒரு கத்தி நீட்டிக் கொண்டிருந்தது. அதிலிருந்து இரத்தம் வழிந்து கொண்டிருந்தது. அந்தப் பாதிரியார் அவனைத் தூக்கி அவனுக்கு உதவி செய்ய வேண்டுமென்று எண்ணினார். ஆனால் உடனே அதனால் தான் சர்ச்சிற்கு போவதற்கு தாமதமாகிவிடும் என்று உணர்ந்தார். அன்று அவர் பிரசங்கத்திற்கு "அன்பு" என்னும் விஷயத்தை தேர்ந்தெடுத்திருந்தார். அன்பே கடவுள் என்னும் கிறிஸ்துவின் பொன்மொழியை அன்று விவரித்துக் கூற வேண்டுமென்று தீர்மானித்து அவர் பிரசங்கத்தை தயாரித்துக் கொண்டு வந்தார்.

காயமுற்ற அந்த மனிதன் கண்களைத் திறந்து, "ஐயா, நீங்கள் அன்பைப்பற்றி பிரசங்கம் பண்ணுவதற்கு சர்ச்சிற்கு போய் கொண்டிருப்பதை நான் அறிவேன். நானும் சர்ச்சிற்குத்தான் வந்து கொண்டிருந்தேன். ஆனால் கொள்ளை யர்கள் என்னை கத்தியால் குத்தி இங்கு தூக்கியெறிந்துவிட்டு போய்விட்டனர். நன்றாக கவனியுங்கள். நான் மக்களிடம் போய் சாலை ஓரத்தில் ஒரு மனிதன் செத்துக் கொண்டிருந்தான் அவனைக் காப்பாற்றுவதற்குப் பதிலாக அன்பைப் பற்றி பிரசங்கம் செய்வதற்காக நீங்கள் ஓடி விட்டீர்கள் என்று கூறுவேன். எனவே என்னை விட்டுவிட்டுப் போகாதீர்கள் என்று எச்சரிக்கிறேன்" என்று அவன் கத்தினான்.

இது பாதிரியாருக்கு கொஞ்சம் பயத்தை கொடுத்தது. இந்த மனிதன் உயிர் பிழைத்து இந்த நிகழ்ச்சியை அந்த கிராமத்து மக்களிடம் கூறினால் அந்த மக்கள் தன்னுடைய பிரசங்கம் வெறும் போலித்தனம் என்று கூறுவார்கள் என்பதை அவர் உணர்ந்தார். இறந்து கொண்டிருக்கும் அந்த மனிதனைப் பற்றி பாதிரியாருக்கு கவலை இல்லை. அவரது கவலையெல்லாம் பொதுமக்களின் கருத்தைப் பற்றித்தான் இருந்தது. எனவே அவர் விருப்பமில்லாமல் அந்த மனிதனிடம் சென்றார். அவர் நெருங்கி வந்தவுடன் அவரால் அந்த மனிதனின் முகத்தை தெளிவாகப் பார்க்க முடிந்தது. அது அவருக்கு பழக்கப்பட்ட முகம் போல் தெரிந்தது. அவர், "எனது மகனே, உன்னை நான் இதற்கு முன்பு எங்கோ பார்த்தது போல் தெரிகிறதே" என்று கேட்டார். காயமுற்ற அந்த மனிதன், "நீங்கள் பார்த்திருக்க முடியும். நான்தான் சாத்தான். மேலும் பாதிரியார்களோடும், மதத் தலைவர்களோடும் எனக்கு நீண்ட நாள் உறவு உண்டு. நான் உங்களுக்கு தெரியவில்லையெனில் வேறு யார்தான் உங்களுக்குத் தெரிவார்கள்" என்று கூறினான்.

அதன்பின் பாதிரியாருக்கு ஞாபகம் வந்தது. சர்ச்சில் அவனது படத்தை அவர் பார்த்திருக்கிறார். அவர் பின் வாங்கினார். அவர் அவனிடம், "நான் உன்னைக் காப்பாற்ற முடியாது. நீ செத்துப் போவது நல்லது. நீ சாத்தான். நீ சாக

வேண்டுமென்றுதான் நாங்கள் எப்போதும் விரும்புகிறோம். எனவே நீ செத்துப் போனால் மிகவும் நல்லது. எனவே உன்னை நான் ஏன் காப்பாற்ற வேண்டும்! உன்னைத் தொட்டாலே பாவம். நான் எனது வழியில் போகிறேன்'' என்று கூறினார்.

சாத்தான் பலமாக சிரித்தான். அவன் பாதிரியாரிடம் "நன்றாக கேளுங்கள். நான் என்றைக்கு சாகிறேனோ அன்று முதல் உங்கள் வியாபாரம் செத்துவிடும். நான் இல்லாமல் நீங்கள் இருக்க முடியாது. நான் உயிரோடு இருப்பதால்தான் நீங்கள் நீங்களாக இருக்கிறீர்கள். உங்கள் தொழிலின் அடிப்படையே நான்தான். நீங்கள் என்னைக் காப்பாற்றுவது நல்லது. ஏனெனில் நான் இறந்து விட்டால் எல்லாப் பாதிரியார்களுக்கும் வேலையில்லாமல் போய்விடும். அவர்கள் அழிந்து போவார் கள். அதன் பிறகு இங்கு அவர்கள் தேவைப்பட மாட்டார்கள்'' என்று பதிலளித்தான்.

அந்தப் பாதிரியார் இதைக் கொஞ்சம் சிந்தித்துப் பார்த்தார். அதில் உள்ள உண்மையைக் கண்டார். உடனே செத்துக் கொண்டிருந்த அந்த மனிதனை தனது தோள்களில் தூக்கினார். அவர் அவனிடம், "எனது மகனே, நீ ஒன்றும் கவலைப்படாதே. நான் சிகிச்சைக்காக உன்னை ஆஸ்பத்திரிக்கு கொண்டு போகிறேன். தயவுசெய்து விரைவில் குணமடைந்துவிடு. செத்துப் போய் விடாதே. நீ கூறியது சரிதான். நீ இறந்து விட்டால் எங்களுக்கு வேலை கிடையாது'' என்று கூறினார்.

அந்தப் பாதிரியாருக்குள் சாத்தான் இருப்பதையும், சாத்தான் வேலையின் பின்னணியில் அந்தப் பாதிரியார் இருப்பதையும் உங்களால் ஏற்றுக்கொள்ள முடியாது. ஆனால் செக்ஸை சுரண்டலுக்குப் பயன்படுத்துதல்தான் எல்லாவற்றிற்கும் ஆணிவேர் போன்றது. இந்த கிளர்ச்சிகளுக்கு பின்னணியில் பாதிரியார்கள் இருப்பதை நாம் கண்டுகொள்ள முடியாது. பாதிரியார்கள் செக்ஸை தாழ்வாக்கியதால்தான் அதன் மீது நமக்கு அதிக கவர்ச்சி ஏற்பட்டது. பாதிரியார்கள் தொடர்ந்து

காமத்தை நிந்தித்து வந்ததால்தான் மனிதன் மேன்மேலும் காமுகனாகி விட்டான். பாதிரியார்கள் எந்தளவுக்கு மனிதன் காமத்தைப்பற்றி எண்ணுவதை ஒழிக்க பாடுபடுகின்றார்களோ, அந்தளவுக்கு அது அவனுக்கு புதிர் நிறைந்ததாக ஆகிறது. அது மேலும் அவனது ஆவலைத் தூண்டுகிறது.

மனிதனை இனி ஒன்றும் செய்ய முடியாது! மனிதன் காமத்திற்கு அடிமையாகிவிட்டான். எனவே இந்த ஒன்றும் செய்யமுடியாத நிலை மாறவேண்டும். நாம் விரும்புவது அறிவை, அறியாமையை அல்ல. அறிவு, சக்தி நிறைந்தது. அதிலும் காமத்தைப்பற்றிய அறிவு மாபெரும் பலம் நிறைந்தது. செக்ஸைப்பற்றி ஒன்றும் தெரியாமல் தொடர்ந்து வாழ்வது அபாயகரமானது.

நாம் நிலவை அடைய முடியாமல் போகலாம். நிலவை அடையவேண்டிய அவசியம் கிடையாது. நாம் நிலவை சென்றடைவதால் மனித இனத்திற்கு அதிக லாபம் கிடையாது. அதே போல் பசிபிக் கடலில் சூரியனின் கிரணங்களே புக முடியாத ஐந்து மைல் ஆழத்தை நாம் சென்றடையவில்லை யெனில் இந்த உலகம் அழிந்துவிடாது. இதுபோன்ற சாதனைகள் மனித இனத்திற்கு அதிக பலனைக் கொடுக்காது. மேலும் அணுவை நாம் பிளக்கிறோமா இல்லையா என்பது கூட அவ்வளவு முக்கியமானதல்ல. ஆனால் ஒரு புதிய மனிதனை உருவாக்குவதற்கு நாம் காமத்தை ஏற்றுக்கொள்ளவேண்டும். செக்ஸைப் பற்றி நாம் முழுமையாக அறிந்துகொள்ளவேண்டும். அதைப்புரிந்து கொண்டு, அதைக் கடந்து அப்பால் செல்ல வேண்டியது மிகவும் தேவையான ஒன்று.

கடந்த மூன்று தினங்களாக நான் சில விஷயங்களை உங்களுக்கு விளக்கிக் கூறினேன். நாளை நான் உங்களது கேள்விகளுக்கு பதிலளிக்கிறேன். உங்கள் கேள்விகள் நேர்மை யாகக் கேட்கப்பட வேண்டும். கடவுளைப் பற்றியும், ஆன்மா வைப் பற்றியும் கேட்கும் கேள்விகளால் பலன் ஒன்றும் இல்லை.

இது நமது வாழ்க்கைப் பிரச்சனை, உயிர்ப்பிரச்சனை. எனவே உங்களது கேள்விகள் நேரடியாகவும், நேர்மையான தாகவும் இருந்தால்தான் நாம் இந்த விஷயத்தில் ஆழமாகச் செல்ல முடியும். முடிக்கும் முன் நான் உங்கள் ஒவ்வொருவருக்கும் உள்ளே இருக்கும் தெய்வீகத்துக்கு தலைவணங்குகிறேன்.

☆☆☆☆☆☆

நண்பர்கள் அநேக கேள்விகள் கேட்டுள்ளனர். என்னுடைய சொற்பொழிவுக்குரிய பொருளாக காமத்தை நான் ஏன் தேர்ந்தெடுத்துள்ளேன்? என்று நண்பர் ஒருவர் கேட்டுள்ளார்?

அதை நான் விளக்குகிறேன். பம்பாய் கடைவீதியில் ஒரு பொதுகூட்டம் ஏற்பாடாகியிருந்தது. அதில் கபீரைப் பற்றியும் அவரது தத்துவங்களைப் பற்றியும் பண்டிதர் ஒருவர் பேசிக் கொண்டிருந்தார். "கபீர் கடைவீதியின் மத்தியில் நின்று கொண்டிருகிறார். யாருக்கெல்லாம் தங்களது வீட்டை எரிக்கின்ற தைரியம் இருக்கிறதோ அவர்கள் என்னைப் பின் தொடருங்கள் என்று தனது கைத்தடியை அசைத்து அங்குள்ள மக்களுக் கெல்லாம் அறைகூவல் விடுத்தார்" என்னும் வரிகளைப் பற்றி அந்த பண்டிதர் பேசிக் கொண்டிருந்தார்.

அந்த அறைகூவலை அங்குள்ள மக்கள் எல்லோரும் ஏற்றுக்கொள்வதை நான் கவனித்தேன். மேலும் கபீரின் இந்த ஆழமான அதேசமயம் மாபெரும் செய்தியை எளிதில் ஏற்றுக் கொள்கிற மக்கள் உண்மையிலேயே தங்கள் வீடுகளை எரித்துவிட்டு சத்தியத்தை தேடிச்செல்ல ஆரம்பிப்பார்கள் என்று நான் முடிவு கட்டினேன். இப்படிப்பட்ட மக்களோடு நானும் எனது இதயத்தில் உள்ளதை உள்ளபடி பேசலாம் என்று நினைத்தேன். ஆனால் உண்மையில் அந்த மக்களில் ஒருவர்கூட தங்கள் வீடுகளை எரிக்கவோ அல்லது அவைகளை அப்படியே விட்டுவிட்டு வரவோ தயாராக இல்லை. அந்தச் சூழ்நிலையில் கபீர் அங்கு உயிரோடு இருந்திருந்தால் அவர் சந்தோஷமடைந்திருக்கமாட்டார். இன்று நாம் எல்லோரும் கபீரின் தத்துவங்களை ஏற்றுக்கொள்கிறோம். ஆனால் சுமார் முந்நூறு ஆண்டுகளுக்கு முன்பு கபீர் இதைச் சொல்லும் போது

அப்போதிருந்த மக்கள் எவரும் இதைப்பற்றி சந்தோஷமடைய வில்லை. கபீர், கிறிஸ்து ஆகிய இவர்கள் கண்ட கனவுகளைப் போன்று நானும் முயன்று பார்த்தேன். ஆனால் மனிதன் ஓர் அற்புதமான மிருகம். இறந்து போனவர்களைப்பற்றி பேசினால் அவன் சந்தோஷமடைகிறான். ஆனால் உயிரோடு இருப்பவர் களையோ கொலை செய்துவிடுவதாக மிரட்டுகிறான்.

நான் உண்மையைச் சொல்ல வேண்டியிருந்தது. ஆனால் உண்மையைப் பற்றி பேச வேண்டுமெனில் முதலில் மனிதன் உண்மையென்று ஏற்றுக் கொண்டிருக்கும் பொய்களைப் பற்றி நான் விளக்க வேண்டியது அவசியம். நாம் உண்மை என்று ஏற்றுக் கொண்டிருக்கும் அநேக தத்துவங்கள் உண்மையில் பொய்யாக உள்ளன. எனவே இந்தப் பொய்கள் வெளிப் படுத்தப்படவில்லையெனில் உண்மையை நோக்கி நடக்க முதல் அடியை எடுத்துக் வைக்க முடியாது.

"அன்பை"ப் பற்றி பேசும்படி எனக்கு கூறப்பட்டது. ஆனால் காமத்தைப் பற்றியும், பாலுணர்வைப் பற்றியும் சில குறிப்பிட்ட கருத்துக்களை விடாமல் பிடித்துக் கொண்டிருக்கும் வரை நாம் ஒருபோதும் அன்பைப்பற்றி புரிந்து கொள்ளவோ அல்லது அதன் அருகாமைகளைத் தெரிந்து கொள்ளவோ முடியாது என்று நான் உணர்ந்தேன். இப்படிப்பட்ட தவறான நம்பிக்கைகள் ஆழமாக வேருன்றி இருக்கும்வரை அன்பைப் பற்றி நாம் என்னதான் கூறினாலும் அது அரைகுறையானதாக, வீணானதாக, உண்மையற்றதாக போய்விடும். எனவேதான் அதை ஒன்று திரட்டிப் பேசுவதற்காக நான் அந்தக் கூட்டத்தில் காமத்தைப் பற்றியும், செக்ஸைப் பற்றியும் பேசினேன். காம சக்தியை அன்பாக மாற்ற முடியும் என்று நான் அப்போது கூறினேன்.

ஒரு மனிதன் அசுத்தமும், துர்நாற்றமும் வீசுகின்ற உரத்தை தனது வீட்டிற்கு முன்னால் தெருவில் குவித்து வைத்திருந்தால் அது தெருவில் போவோர் வருவோருக்கு

மிகுந்த இடைஞ்சலாகி விடும். ஆனால் அதே உரத்தை அவன் தனது தோட்டத்தில் போட்டால் அங்கு அவன் போட்டிருக்கும் விதைகள் முளைக்கும். அந்த விதைகள் வளர்ந்து செடிகளாகி அந்தச் செடிகள் மலர்களைக் கொடுக்கும். அந்த மலர்களின் நறுமணம் எல்லோரையும் கவர்ந்திழுக்கும். அந்த வழியாகச் செல்பவர்கள் மிகுந்த சந்தோஷமடைவர். நீங்கள் ஒருவேளை இதைப் பற்றி சிந்திக்காமல் இருந்திருக்கலாம். ஆனால் அந்த மலரின் நறுமணமானது அந்த உரத்தின் துர்நாற்றத்தைத் தவிர வேறொன்றுமில்லை. அந்த உரத்தின் துர்நாற்றம் விதை களிலிருந்து செடியின் மூலமாக மேலெழுந்து செல்லும் போது அது மலரின் நறுமணமாகிறது. ஒரு துர்நாற்றத்தை நல்ல இனிய நறுமணமாக நாம் ஆக்க முடியும்.

அதே மாதிரிதான் காமமும் அன்பாக மாற முடியும். ஆனால் காமத்தை வெறுக்கின்ற ஒருவர் எப்படி அன்பு நிறைந்த வராக இருக்க முடியும்? ஒருவன் காமத்திற்கு விரோதியாக இருந்தால் அதை எப்படி மாற்றியமைக்க முடியும்? எனவேதான் நான் காமத்தைப் பற்றி புரிந்துகொள்ள வேண்டுமென்றும், செக்ஸ் பற்றி சரியான அறிவு வேண்டு மென்றும் வலியுறுத்தினேன். முந்திய நாள் காமத்தை நாம் உருமாற்றம் செய்ய வேண்டும் என்று குறிப்பிட்டேன்.

எனவே தங்கள் வீடுகளை எரிப்பது பற்றிய கேள்வியை அலசி ஆராய்ந்தவர்கள் கொஞ்சம் திறந்து வெளிப்படையாக பேசுவதால் சந்தோஷமடைவார்கள் என்று நான் நினைத்தேன். ஆனால் நான்தான் தவறாகப் புரிந்து கொண்டுள்ளேன். அன்று நான் எனது பேச்சை முடித்தவுடன் அந்த மேடையில் இருந்த எல்லா அதிகாரிகளும், அந்த கூட்டத்திற்கு ஏற்பாடு செய்திருந்த நண்பர்களும் காற்றில் மறைந்து போனதைக் கண்டு ஆச்சரியமடைந்தேன். நான் எழுந்து செல்வதற்காக மேடையை விட்டு இறங்கிச் செல்லும்போது அவர்களில் ஒருவரைக்கூட நான் பார்க்க முடியவில்லை. ஒருவேளை அவர்களின் வீடுகளில் நெருப்பு பற்றிக் கொண்டிருக்கும் என்று ஓடினார்களா அல்லது

அவர்களின் நெருப்பைத் தணித்துக்கொள்ள ஓடினார்களா என்று நான் எண்ணிப் பார்க்கிறேன்.

அந்தக் கூட்டத்தை ஏற்பாடு செய்திருந்த முக்கியமான நபர்கூட எனக்கு நன்றிகூற அங்கு இல்லை. வெள்ளைக் குல்லாய் அணிந்திருந்தவர்களும், கதர் ஆடை அணிந்திருந்தவர்களும், மேடையில் இல்லை. எனது சொற்பொழிவு முடிவதற்கு முன்பே அவர்கள் மேடையை விட்டு பறந்து விட்டனர். தலைவர் களெல்லாம் மிகவும் பலவீனமான ஜென்மங்கள் போலும். ஆனால் வேகமாக செயல்படுவர்கள் போலும். அவர்களது தொண்டர் களுக்கு முன்பாகவே அவர்கள் ஓடிவிட்டனர்.

ஆனால் சில தைரியமானவர்கள் சில வீரமுள்ள ஆண் கள், பெண்கள், சில வயதானவர்கள், சில இளைஞர்கள் என்னிடம் வந்தனர். இதுவரை யாருமே சொல்லாத பல விஷயங்களை நான் கூறியதாக அவர்கள் எல்லோரும் கூறினர். அவர்களின் கண்கள் திறக்கப் பட்டு விட்டதாகவும், அவர்கள் மிகவும் பாரம் குறைந்தவர்களாக உணர்ந்ததாகவும் கூறினார்கள். அவர்களின் கண்களில் நன்றி பெருக்கும், ஆனந்தக்கண்ணீரும் வந்தது. அவர்கள் என்னை இந்தச் சொற்பொழிவுத் தொடரை முழுமையாக முடித்து வைக்கும்படிக் கூறினர். அப்படிப்பட்ட மரியாதையான மக்கள் தங்கள் வாழ்க்கையைப் பற்றி புரிந்துகொள்ள தயாராக இருந்தனர். அவர்கள் என்னை காமத்தைப்பற்றி இன்னும் விரிவாகக் கூறும்படி கேட்டுக் கொண்டதால்தான் நான் மீண்டும் பம்பாய் வந்துள்ளேன்.

நான் பாரதீய வித்யாபவனை விட்டு வெளியே வந்ததும் அவர்கள் பெரும் கூட்டமாக கூடி நான் பேசியவற்றிற்காக என்னைப் பாராட்டினார்கள். தலைவர்கள் ஓடிப்போய் விட்டாலும் பொதுமக்கள் என் பக்கம் இருக்கிறார்கள் என்பதை அப்போது நான் உணர்ந்தேன். அங்கேயே, அப்போதே நான் இந்த விஷயத்தைப் பற்றி முழுமையாக பேச தீர்மானித்தேன். ஆகையால்தான் நான் இந்த விஷயத்தை தேர்ந்தெடுத்தேன்.

மற்றொரு காரணம் என்னவெனில் அன்று அந்த மேடையிலிருந்து ஓடியவர்கள் நான் மதங்களே அழிந்து போகுமளவிற்கு நிந்தனையான விஷயங்களைச் சொல்லி விட்டதாகவும், மக்களை மதச் சார்பற்றவர்களாக ஆக்கக் கூடியவைகளை நான் கூறிவிட்டதாகவும் எங்கு பார்த்தாலும் மக்களிடம் கூற ஆரம்பித்துவிட்டனர்! எனவே அவர்களுக்கு பதிலளிக்கும் வகையில் நான் எனது கருத்தை விவரமாக எடுத்துக்கூற வேண்டுமென்பதை உணர்ந்தேன். செக்ஸ் பற்றி பேசுவதைக் கேட்டால் மக்கள் ஒன்றும் மதச்சார்ப்பற்றவர்களாக ஆகிவிட மாட்டார்கள் என்றும் அதற்கு மாறாக செக்ஸைப் பற்றி சரியாகப் புரிந்து கொள்ளாததால்தான் மக்கள் மதச்சார்பற்று இருக்கின்றனர் என்பதை அவர்கள் உணரும்படி செய்யவேண்டு மென்று நான் எண்ணினேன்.

அறியாமை உங்களை மத தூஷனையுடையவர்களாக ஆக்கிவிடும். அறிவுதான் உங்களை மத நம்பிக்கையுடைய வர்களாக ஆக்கும். மேலும் அறிவானது மத தூஷனையை ஏற்படுத்தும் என்று சொன்னாலும் கூட நான் அறிவைத்தான் வலியுறுத்துவேன். ஆனால் உண்மை அப்படி அல்ல. அறிவுதான் மத நம்பிக்கை, அறியாமைதான் மத தூஷனை. மேலும் அறிவில்லாமல் உயிர் வாழும் மதம் ஒரு மதமாகாது. அதுதான் மத தூஷனை. எனவே அறியாமையிலிருந்து எவ்வளவு சீக்கிரம் வெளியேறுகிறோமோ அவ்வளவு நல்லது. வெளிச்சத்தைக் கொடுக்காத விளக்கு ஒரு விளக்கல்ல. மதம் என்பது மேலான அறிவைத் தேடிச் செல்வதன் மறு பெயர்தான் என்பதை ஞாபகத்தில் கொள்ளுங்கள். முழுமையான ஒளியை அறிந்துகொள்வதுதான் மதம். அறியாமை, இருட்டு இவைகள் எப்போதும் துன்பத்தை கொடுப்பவை. செக்ஸைப் பற்றி அறிந்து கொள்ளாமல் இருப்பதால் மனித இனம் கீழான நிலைக்குத் தள்ளப்படுமானால், மனித இனம் முழுவதும் நெறி தவறிச் செல்லுமானால், முற்றிலும் பைத்தியக்காரத்தனமாக செல்லுமா னால் அதற்கு காமத்தைப் பற்றி தியானிக்குமாறு விளக்கிக் கூறுபவர்கள் ஒருபோதும் காரணமாக மாட்டார்கள். மாறாக மதம்

மற்றும் ஒழுக்கம் இவற்றைப் போதிக்கும் போதனையாளர் கள்தான் அதற்கு காரணமாவார்கள். அவர்கள் ஆயிரக் கணக்கான வருடங்களாக மனிதனை அறியாமையில் மூழ்கிக் கிடக்கச் செய்துவிட்டனர். இப்படிப்பட்ட தலைவர்கள் மட்டும் இல்லையெனில் மனித இனம் எப்போதோ காமத்திலிருந்து விடுதலை பெற்றிருக்கும். செக்ஸ் என்பது இயற்கையானது. ஆனால் இப்படிப்பட்ட குருமார் களின் மூலம்தான் மனித இனம் காமவெறி கொண்டுவிட்டது. எனவே செக்ஸைப்பற்றி நாம் சரியாகப் புரிந்து கொள்ளாத வரையில் இந்தக் குறைபாட்டை நாம் நீக்க முடியாது.

வாழ்க்கையின் எந்த ஒரு மட்டத்திலும் அறியாமை இருப்பதை நான் ஆதரிக்கமாட்டேன். எப்பாடுபட்டாயினும், எந்த ஆபத்து வந்தாலும் உண்மையை வரவேற்க நான் எப்போதும் தயாராக இருக்கிறேன். உண்மையென்னும் ஒளியின் ஒரு சிறு கதிரே மக்களிடத்தில் இந்த அளவுக்கு பரபரப்பை ஏற்படுத்துமெனில் அந்த ஒளியின் முழுச் சிதறல்களையும் நான் விவரிக்க வேண்டியது பொருத்தமாகிவிடுகிறது. அதன் மூலம் காமத்தைப் பற்றிய அறிவு மனிதனை மத நம்பிக்கை உள்ளவனாக ஆக்குகிறதா என்பதை தெளிவுப்படுத்த வேண்டும். இதுதான் நான் காமத்தைப் பற்றி பேசுவதற்கான பின்னணி. இதனால்தான் நான் அந்த விஷயத்தை தேர்ந்தெடுத்தேன். இப்படியில்லையெனில் நான் இந்த விஷயத்தை தேர்ந்தெடுத் திருக்கவே மாட்டேன். பேசியிருக்கமாட்டேன். எனவே நான் இந்த தலைப்பில் சொற்பொழிவாற்றுவதற்கு மறைமுகமாக சூழ்நிலையை உருவாக்கி என்னை இந்த விஷயத்தைப் பற்றி பேச நிர்ப்பந்தப்படுத்திவிட்டவர்களுக்கு நன்றி சொல்ல வேண்டும். எனவே இந்த விஷயத்தைப் பற்றி பேச நான் தேர்ந் தெடுத்ததற்கு எனக்கு யாராவது நன்றி சொல்ல விரும்பினால் தயவுசெய்து எனக்கு நன்றி சொல்லாதீர்கள். அதற்குப் பதிலாக எனக்கு எதிராக, விஷயங்களைத் திரித்து செய்கின்றவர்களுக்கு நன்றி கூறுங்கள்.

இப்போது விஷயத்திற்கு வருவோம். காமத்தைதான் அன்பாக மாற்ற முடியும் என்றால் ஒரு தாய்க்கும், குழந்தைக்கும் இடையே உள்ள அன்பு கூட காமத்தினால்தான் ஏற்படுகிறதா? என்று நண்பர் ஒருவர் கேட்டுள்ளார். மற்றவர்களும் இதுபோன்ற கேள்விகளை கேட்டுள்ளனர்.

எனவே இதைப் புரிந்து கொண்டால் உதவியாயிருக்கும். காமத்தை அனுபவிக்கும்போது அதில் ஓர் ஆழமான தன்மை, சாதாரணமாக ஒரு மனிதன் அடைய முடியாத ஆழமான தன்மை உள்ளது என்று நான் கூறியதை நீங்கள் கொஞ்சம் கூர்ந்து கவனித்திருந்தால் ஞாபகத்தில் வைத்திருப்பீர்கள். காமத்தில் மூன்று நிலைகள் உள்ளன. இப்போது அவற்றைப் பற்றி நான் பேச விரும்புகிறேன்.

முதல் நிலை நமது கண்களுக்குப் புலப்படும் நிலை. உதாரணமாக ஒருவன் ஒரு விபச்சாரியிடம் செல்கிறான். அவன் அவளிடம் பெறும் அனுபவம் உடல் மட்டத்தில்தான் இருக்குமே தவிர அதைவிட ஆழமாக செல்ல முடியாது. ஒரு விபச்சாரி தனது உடலைத்தான் விற்க முடியுமே தவிர அவள் தனது இதயத்தை விற்க முடியாது. மேலும் அந்த ஆன்மாவை விற்பதற்கு எந்த ஒரு வழியும்.

எனவே இந்த நிலையில் வெறும் உடல்கள் மட்டுமே சந்திக்கின்றன, அதாவது கற்பழிப்பில் நடப்பது போல. கற்பழிப்பில் இதயங்களோ அல்லது ஆன்மாக்களோ சந்திப்ப தில்லை. கற்பழிப்பது என்பது உடல் அளவில் மட்டுமே நடக்கிறது. ஆன்மாவைக் கற்பழிக்க எந்த ஒரு வழியும் கிடையாது. கற்பழிப்பு அனுபவம் என்பது வெறும் உடல் அளவில்தான்.

காமத்தின் ஆரம்ப அனுபவம் உடல் மட்டத்தில்தான் ஏற்படுகிறது. ஆனால் அந்த மட்டத்திலேயே நின்று விடுபவர்களால் ஒருபோதும் முழுமையான காம அனுபவத்தைப் பெற முடியாது. நான் கூறிய அந்த ஆழ்ந்த அனுபவங்களை

அவர்கள் அறிந்திருக்க முடியாது. இன்றைய நாட்களில் அநேக மக்கள் வெறும் உடலளவிலேயே நின்றுவிட்டனர்.

இந்த விஷயத்தில் காதலிக்காமல் கல்யாணம் செய்து கொள்கின்ற நாடுகளில் மக்களின் காம அனுபவம் உடல் அளவில் தேங்கிப் போய் விடுகிறது என்கிற முக்கியமான உண்மையை நீங்கள் அறிந்து கொள்ள வேண்டும். அது உடலளவிற்கு மேல் முன்னேறிச் செல்ல முடியாது. இந்தத் திருமணங்கள் இரண்டு உடலகளுக்கு இடையே நடக்கலாம் ஆனால் ஒருபோதும் இரண்டு ஆன்மாக்களுக்கு இடையே நடக்க முடியாது. காதலித்த பின்னர் நடக்கும் கல்யாணங்களில் இன்னும் ஆழமான அர்த்தம் இருக்கும். ஆனால் பண்டிதர்களும், ஜோசியர்களும் கணிக்கின்ற திருமணங்களிலும், ஜாதி, இனம், பணம் இவற்றை வைத்து நடத்தப்படுகின்ற திருமணங்களிலும் ஏற்படுகின்ற பாலுணர்வு அனுபவம் ஒருநாளும் உடல் மட்டத்திற்கு மேல் ஆழமாகச் செல்ல முடியாது.

ஆனால் இந்த முறையில் உள்ள ஒரு சௌகரியம் என்னவெனில் நமது மனதைவிட உடல் கொஞ்சம் ஸ்திரத் தன்மை வாய்ந்தது. எனவே உடலை அடிப்படையாகக் கொண்டு திருமணங்கள் நடத்தப்படுகின்ற சமூகத்தில் அந்தத் திருமணங்கள் வெகு நாட்களுக்கு ஸ்திரமானதாக இருக்கும். அந்தத் திருமணங்கள் நீடித்து நிற்கும். ஏனென்றால் நமது உடல் உறுதியான உரை போல் எப்போதும் இருக்கும். உடலில் ஏற்படும் மாற்றங்கள் மெல்ல மெல்ல ஏற்படுகின்றன. அதை நாம் உணர்ந்து கொள்ளக்கூட முடியாது. நமது உடல் எப்போதும் ஒரே நிலையில் இருப்பதால், நமக்கு நடக்கும் திருமணம் நிலையான ஒன்றாக இருக்க வேண்டியது அவசியம் என்று எண்ணுகின்ற, ஒருவனுக்கு ஒருத்தி என்கிற கருத்தை விரும்புகிற, ஜோடிகளை மாற்றிக் கொண்டு போகக் கூடாது என்று நினைக்கிற சமுதாயமானது காதலை ஆதரிப்பதில்லை. காதலை களையெடுக்க அவர்கள் விரும்புவார்கள். ஏனென்றால் காதலின் இருப்பிடம் இதயம். ஆனால் அந்த இதயமோ

ஸ்திரமானதல்ல. எனவே காதலை அடிப்படையாகக் கொண்டு கல்யாணங்கள் நடக்கின்ற சமூகத்தில் விவாகரத்துக்கள் தவிர்க்க முடியாதவையாகி விடுகின்றன. அந்த சமூகங்களில் திருமணங் கள் ஒருபோதும் நிலையானதாக இருக்க முடியாது. ஏனென்றால் காதல் என்பது திரவம் போன்று நிலையற்றது. இதயம் பாதரஸம் போன்றது. ஆனால் உடல் நிலையானது, ஸ்திரமானது.

உங்கள் தோட்டத்தில் ஒரு கல் கிடந்தால் அது காலையில் எந்த இடத்தில் கிடந்ததோ அதே இடத்தில் அப்படியே மாலையிலும் கிடக்கும். ஆனால் அதே தோட்டத்தில் மலரும் ஒரு மலரோ காலையில் மலர்கிறது. மாலையில் கருகி பூமியில் வீழ்ந்து விடுகிறது. கல் ஒரு உயிரற்ற ஜடப் பொருள். காலையில் அது எப்படி இருந்ததோ அப்படியே அது மாலையிலும் இருக்கும். அதே போன்றதுதான் உடலளவில் நடத்தப்படுகின்ற திருமணங்களும் நிலையானதாக இருக்கும். ஆனால் அந்த ஸ்திரத்தன்மை தோட்டத்தில் கிடக்கும் கல்லின் ஸ்திரத் தன்மையைப் போன்றது தான். இந்த வகையான திருமணங்கள் சமுதாயத்திற்கு நன்மை பயப்பதற்காக செய்யப் படுகிறதே தவிர தனிமனிதர்களைப் பொறுத்த மட்டில் இந்தத் திருமணங்கள் கேடு விளைவிக்கின்றன.

இதுபோன்ற திருமணங்களில் கணவன் மனைவிக் கிடையே உள்ள காம உறவுகள் ஆழ்ந்த நிலைகளைத் தொடுவதில்லை. இவர்களைப் பொருத்த மட்டில் அது ஒரு இயந்திரத்தனமான காரியக்கிரமமாக ஆகிவிடுகிறது. அதே செயலை வெறுமனே திரும்பத்திரும்பச் செய்வதால் அது சுவராசியமில்லாமல் போகிறது. அதில் ஈடுபடுபவர்கள் மேன்மேலும் அதில் சுவராசியமில்லாமல் போவதைத் தவிர வேறொன்றும் நடப்பதில்லை. காதலிக்காமல் கல்யாணம் பண்ணிக் கொள்வதற்கும், ஒரு விபச்சாரியிடம் செல்வதற்கும் வித்தியாசம் கொஞ்சம்தான். விபச்சாரியை ஒரு இரவுக்காக நீங்கள் விலைக்கு வாங்குகிறீர்கள். ஆனால் மனைவியையோ உங்களது வாழ்நாள் முழுமைக்கும் விலைக்கு வாங்கி

விடுகிறீர்கள். இதுதான் வித்தியாசம். அன்பு இல்லாத போதுதான் விலைக்கு வாங்குதல் நடக்கிறது. அப்படி விலைக்கு வாங்குவது ஒரே ஒரு இரவுக்கு மட்டும் வாடகைக்கு அமர்த்திக் கொள்வதாக இருந்தால் என்ன அல்லது வாழ்நாள் முழுவதற்கும் ஏற்பாடு செய்து கொண்டால் என்ன இரண்டும் ஒன்றுதான். ஆனால் திருமணத்திற்குப் பின் தினமும் நெருங்கிப் பழகுவதால் அவர்களுக்குள் ஓர் உறவு ஏற்படுகிறது. அந்த உறவை நாம் அன்பு அல்லது நேசம் என்று அழைக்கிறோம். அது நேசமே கிடையாது. நேசம் என்பது முற்றிலும் மாறுபட்ட விஷயம். இந்தத் திருமணங்கள் வெறும் உடலுக்காக நடத்தப்படுகின்றன. எனவே ஒருநாளும் அவை உடலளவைத் தாண்டி ஆழமாகச் செல்ல முடியாது. காதலைப் பற்றி எழுதியுள்ள சாஸ்திரங்களும், நூல்களும், வாத்சாயனரிலிருந்து கோக்கர் வரை அவைகள் உடல் மட்டத்தை விட ஆழமாகச் செல்லவில்லை.

காமத்தின் அடுத்த நிலை மன இயல் நிலை. அதாவது மனம் அல்லது உள்ளம் சம்பந்தப்பட்ட நிலை. காதலித்து அதன்பின் திருமணம் செய்து கொள்கின்ற ஜோடிகள் இன்னும் கொஞ்சம் அதிகமாகச் செல்ல முடியும். அதாவது உடலுக்காக செய்யப்படுகின்ற திருமணங்களைவிட கொஞ்சம் ஆழமாக செல்ல முடியும். அவர்கள் இதயத்தைத் தொடுகின்றனர். அவர்கள் மனதின் ஆழங்களைத் தொடுகின்றனர். ஆனால் அதிலும் அவர்கள் மீண்டும் மீண்டும் இயந்திரத்தனமாக ஆகும்போது அவர்கள் ஒவ்வொரு நாளும் மீண்டும் உடல் மட்டத்திற்கு வந்து விடுகின்றனர். மேலை நாடுகளில் கடந்த இருநூறு ஆண்டுகளாக அபிவிருத்தியடைந்துள்ள திருமண நடவடிக்கைகள் இதுபோன்ற நிலையில்தான் உள்ளன. இதன் காரணமாகத்தான் அவர்களது சமுதாயம் பிளவுபட்டதாக, கெட்ட நடத்தையுள்ளதாக ஆகிவிட்டது.

இதற்கு காரணம் என்னவென்றால் நீங்கள் உங்கள் மனதை ஒருபோதும் நம்ப முடியாது. இன்று உங்கள் மனம் ஒன்றைக் கேட்கும். நாளை அதே மனம் வேறு ஒன்றைக்

கேட்கும். காலையில் ஒன்றைக் கேட்கும். மாலையில் இன்னொன்றை கேட்கும். ஒரு கண நேரத்திற்கு முன்பு அது எதை உணர்ந்ததோ. அதைவிட முற்றிலும் மாறுபட்ட ஒன்றை இப்போது அது உணரும்.

நீங்கள் பைரன் பிரபுவைப் பற்றி கேள்விப் பட்டிருக் கலாம். அவர் இறுதியாகத் திருமணம் செய்து கொள்வதற்கு முன்பு குறைந்தது அறுபதிலிருந்து, எழுபது பெண்களிடம் நெருங்கிப் பழகினார். அப்படியிருந்தும் அவரது திருமணம் முடிந்து சர்ச்சை விட்டு வெளியே புது மணப்பெண்ணுடன் கைக்கோர்த்துக் கொண்டு வந்தபோது அங்கு நடந்து சென்ற மற்றொரு அழகான பெண்ணை பார்க்க ஆரம்பித்தாராம். அவளது அழகில் ஒரு கணம் அவர் ஸ்தம்பித்துப் போய் தனது கல்யாணத்தையும், புது மனைவியையும் மறந்துவிட்டாராம். ஆனால் அவர் ஒரு நேர்மையான மனிதராக இருந்திருக்க வேண்டும். ஏனென்றால் அவர் தனது புது மனைவியுடன் வண்டியில் ஏறியதும் அவளிடம், நீ கவனித்தாயா? இப்போது ஒரு அதிசயம் நிகழ்ந்தது. நேற்று நமக்கு திருமணம் ஆகும் முன்பு என்னால் உன்னை கைப்பிடிக்க முடியுமோ அல்லது முடியாதோ என்று நான் கவலைப்பட்டேன். நீதான் எனது மனம் நிறைந்த மங்கையாக இருந்தாய். ஆனால் இப்போது உன்னை நான் உண்மையிலேயே திருமணம் செய்துகொண்டு, தேவாலயத்தின் படிகளை விட்டு நாம் இறங்கி வரும்போது ஒரு அழகிய பெண்ணை சாலையின் ஓரத்தில் நான் கண்டேன். அப்போது உன்னை நான் ஒரு கணம் மறந்துவிட்டேன். என்மனம் அந்தப் பெண்ணின் பின்னால் செல்ல ஆரம்பித்து விட்டது. அந்தப் பெண்ணை நான் அடைந்திருந்தால் எவ்வளவு நன்றாக இருந்திருக்கும்? என்கிற எண்ணம் என் மனதில் தோன்றியது என்று கூறினாராம்.

மனம் மிகவும் மாறக்கூடியது. எனவே குடும்ப வாழ்க்கை நிலையானதாக இருக்க வேண்டும் என்று விரும்பிய சமுதாயம் திருமணங்கள் மனத்தளவில் நடைபெறுவதற்கு

அனுமதிப்பதில்லை. அந்த சமுதாயம் திருமணங்கள் உடல் அளவில் நின்று போய்விடுவதற்கு முயற்சி செய்யும். "கல்யாணம் பண்ணிக் கொள், ஆனால் காதலித்து அல்ல" என்று அது கூறும். கல்யாணத்திற்குப் பிறகு நீங்கள் காதலித்தால் அது நல்லது. இல்லையென்றாலும் அது அப்படியே இருந்துவிட்டு போகட்டும்.

ஸ்திரத்தன்மை என்பது உடல் மட்டத்தில் சாத்தியப் படும். ஆனால் மன அளவில் அது மிகவும் சிரமம். மன அளவில் காம அனுபவங்கள் இன்னும் ஆழமானதாக, கண்ணுக்குப் புலப்படாததாக இருக்கிறது. எனவேதான் மேலை நாட்டு அனுபவங்கள் கீழை நாட்டு அனுபவங்களை விட இன்னும் அதிக ஆழ்ந்த அறிவுள்ளதாக உள்ளன. மேலை நாட்டின் உளவியல் வல்லுநர்களாகிய பிராய்டிலிருந்து யங் (Jung) வரை காமத்தின் இரண்டாவது நிலையாகிய உளவியல் நிலையைப் பற்றி எழுதியுள்ளனர். ஆனால் நான் பேசுகின்ற காமம் மூன்றாவது நிலையைச் சேர்ந்தது. அந்த நிலையைப் பற்றி கீழை நாடுகளிலோ அல்லது மேலை நாடுகளிலோ இதுவரை அறியப்படவில்லை. காமத்தின் அந்த மூன்றாவது நிலை ஆன்மீக நிலை.

உடல் ஜடமாக இருப்பதால் உடல் மட்டத்தில் ஒரு வித நிலையான தன்மை உள்ளது. அதே போன்று ஆன்மீக மட்டத்திலும் கூட ஒருவித நிலையான தன்மை உள்ளது. ஏனென்றால் அந்த நிலையிலும் எந்தவித மாற்றமும் ஏற்படுவதில்லை. அங்கு எல்லாமே அமைதியாக இருக்கும். அழிவற்று இருக்கும். எனவே இந்த இரண்டு நிலைகளுக்கும் இடையில் உளவியல் நிலை உள்ளது. அது நிலையற்றது. நமது ஞாபக சக்தியைப் போல்.

ஆனால் மேலை நாடுகளின் அனுபவங்கள் இந்த உளவியல் மட்டத்தில்தான் உள்ளன. எனவேதான் அங்கு திருமணங்கள் முறிவு பெறுகின்றன. குடும்பங்கள் பிரிகின்றன.

உள்ளங்களின் சந்திப்பில் பிறக்கின்ற திருமணங்கள் நிச்சயமாக நிலையான குடும்பச் சூழலை உருவாக்க முடியாது. இப்போது இரண்டு வருடங்களுக்கு ஒருமுறை விவாகரத்து நடக்கிறது. ஆனால் இது இரண்டு மனி நேரத்திற்கு ஒரு முறைகூட நடக்கலாம்! ஒரு மணி நேரத்தில்கூட ஒருவனின் மனம் மாறிவிடும்! மேலை நாட்டில் உள்ள சமுதாயம் கலங்கி இருக்கிறது. அதோடு ஒப்பிட்டுப் பார்க்கும் போது கீழைநாட்டு சமூகம் ஸ்திரமாய் உள்ளது. ஆனால் செக்ஸின் ஆழமான, கண்ணுக்குப் புலப்படாத, மிகவுயர்ந்த நிலைகளை அடைய முடியாமல் இருக்கிறது.

ஆன்மீக மட்டத்தில் இணைகின்ற ஒரு ஆணும், பெண்ணும் ஒரேமுறை அவர்கள் ஆன்மீக மட்டத்தில் இணைந்தால் போதும். அவர்கள் இனிவரும் பிறவிகள் முடிவில்லா அனைத்திற்கும் அவர்கள் இணைந்துவிட்டதைப் போன்று உணர்வார்கள். அதில் மாற்றம் இருக்காது. இந்த மட்டத்தின் ஸ்திரத்தன்மை மதிப்புள்ளது; இந்த மட்டத்தின் அனுபவம் மிக உயர்ந்தது.

நான் பேசுகின்ற பாலுணர்வு ஆன்மீக பாலுணர்வாகும், தெய்வீக அனுபவமாகும். காமத்திற்கு ஒரு ஆன்மீக நோக்கம் கொடுக்க நான் விரும்புகிறேன்.

நான் கூறியவற்றையெல்லாம் நீங்கள் கிரகித்துக் கொண்டால், தாய் தன் மகன் மீது செலுத்தும் அன்பானது ஆன்மீக பாலுணர்வின் ஒரு பகுதி என்பதை அறிந்து கொள்வீர்கள். நான் கூறுவது மிகவும் மடத்தனமானது என்று நீங்கள் கூறலாம். ஒரு தாய்க்கும், மகனுக்கும் இடையில் எப்படி காம உறவு சாத்தியப்படும்? என்று நீங்கள் கேட்கலாம். இதை முழுவதும் புரிந்து கொள்வதற்கு நாம் காமத்தைப் பற்றிய வேறு பல கோணங்களையும், கணவன்-மனைவி-குழந்தை இவர்களுக்கு இடையிலுள்ள காமத்தின் செயல்பாட்டையும் பரிசீலனை செய்ய வேண்டும்.

ஆணும், பெண்ணும் ஏதோ ஒருமுறை இணைகிறார்கள் என்று நான் கூறினேன். அப்படி இணைவதால் அவர்களின் ஆன்மாக்கள் ஒரு கண நேரம் மட்டுமே இணைகின்றன. ஆனால் ஒரு குழந்தையோ தனது தாயின் கருப்பையில் ஒன்பது மாதங்கள் இருக்கிறது. இந்த காலக் கட்டத்தில் அந்தக் குழந்தை தாயோடு ஒன்றி இருக்கிறது. ஒரு கணவனும் இந்த அளவில்தான் இணைகிறான். அப்போது இருவரும் ஒன்றிவிடுகிறார்கள். அப்போது வெறும் ஒன்றுதல் மட்டும் உள்ளது. ஆனால் அது நிலைப்பது ஒரு கணநேரம் தான். அதன்பின் அவர்கள் பிரிந்து விடுகின்றனர். கணவனும், மனைவியும் ஒரு கண நேரம் இணைகின்றனர். அதன்பின் பிரிந்து விடுகின்றனர். எனவே ஒரு தாய் தனது குழந்தையிடத்தில் கொண்டுள்ள பிணைப்பை தன் கணவனிடம் கொள்ள முடியாது.

கருவில் இருக்கும் குழந்தை தாயின் மூச்சு வழியாகத் தான் சுவாசிக்கிறது. தாயின் இதயத் துடிப்பில்தான் அவனது இதயமும் துடிக்கிறது. குழந்தை தாயின் உயிரோடும், இரத்தத் தோடும் ஒன்றாகி விடுகிறது. அதற்கென்று தனியான இயக்கம் கிடையாது. அது அந்தத் தாயின் ஒரு பகுதியாக ஆகி விடுகிறது. ஒரு குழந்தை கொடுப்பதைப் போன்ற நிறைவை எந்த ஒரு மனிதனும் பெண்ணுக்கு கொடுக்க முடியாது. ஒரு குழந்தை கொடுக்கின்ற நெருக்கமான உணர்வை எந்த ஒரு கணவனும் தனது மனைவிக்கு கொடுக்க முடியாது. எனவேதான் ஒரு பெண் தாய்ஸ்ம அடையாத வரையில் அவள் முழுமை பெற்றவளாக இருப்பதில்லை. அவள் தாய்மை அடையாத வரையில் பெண்மையின் அந்தப் பூரண ஒளி, அவளது அழகின் உயர்ந்த பட்ச மலர்ச்சி ஏற்பட சாத்தியமில்லை. ஒரு பெண் தாயாக ஆகாத வரையில் முழுதிருப்தி ஒருபோதும் அடையமாட்டாள். தாய்க்கும், குழந்தைக்கும் இடையில் இருக்கின்ற அந்த ஆழ்ந்த ஆன்மீக உறவின் ஆழத்தை அவள் அறியாத வரையில் முழு திருப்தி ஏற்படாது.

இதோடு ஒரு பெண் தாயாக ஆனவுடன் காமத்தில்

அவளுக்குள்ள ஆர்வம் தானாகவே குறைந்து போகிறது என்பதையும் நீங்கள் மனதில் கொள்ளுங்கள். அவள் தாய்மையை ஆழமாகப் பருகி விட்டாள். ஒன்பது மாதங்களுக்கு துடிக்கும் ஒரு புதிய உயிரோடு அவள் சேர்ந்து வாழ்ந்து விட்டாள். எனவே இப்போது அவளுக்கு காமத்தின்பால் கவர்ச்சி குறைந்து போகிறது. அவளது உணர்ச்சியின்மையைக் கண்டு கணவன் சில வேளைகளில் கலக்கமடைகிறான். ஏனென்றால் தந்தையாகி விடுவதால் அவனது காமம் எந்த வழியிலும் மாறுவதில்லை. குழந்தை பெறும் வழி முறைகளில் அவனுக்கு ஆழ்ந்த தொடர்பு கிடையாது. பிறந்துவிட்ட அந்தப் புதிய உயிருடன் தந்தைக்கு எந்தவிதமான ஆன்மீக ஒன்றுதலும் ஒருபோதும் ஏற்படாது. ஆனால் தாயாகுதல் பெண்ணிடத்தில் ஒரு பெரும் மாற்றத்தை ஏற்படுத்துகிறது. ஆனால், தந்தையாகுதல் வெறும் சமூக நியமனம்தான். தந்தையின்றி ஒரு குழந்தை வளர முடியும். ஏனெனில் அது தன் தாயோடு ஆழ்ந்த வேரூன்றிய உறவைக் கொண்டுள்ளது.

ஒரு குழந்தை பிறந்த பின் ஒரு பெண்ணிடம் புதுவிதமான ஆன்மீக நலம் நிரம்புகிறது. தாயாகிவிட்ட ஒரு பெண்ணையும், தாயாகாத ஒரு பெண்ணையும் நீங்கள் கூர்ந்து கவனித்தால் அவர்களது நடவடிக்கைகளில் உள்ள வித்தியாசத்தை நீங்கள் உணரலாம். சுகமான மனநிலையை ஏற்படுத்துவதில் உள்ள வித்தியாசத்தை உணரலாம். ஒரு தாயிடம் ஒருவித ஒளியை, ஒருவித அமைதியை அதாவது மலைத்தொடரை விட்டு சமவெளியை அடைந்த ஒரு நதியில் நீங்கள் காண்கின்ற அந்த அமைதியை காண முடியும். ஆனால் தாய்மை அடையாத ஒரு பெண்ணிடம் மலைத்தொடரில் இன்னும் பொங்கிப் பெருகி, தடதட வென்று உருண்டு இரைச்சலுடன் இரு கரைகளிலும் பொங்கி வழிந்து சமவெளியை நோக்கி பாய்ந்து வரும் ஒரு நதியின் போக்கைத்தான் நீங்கள் உணர முடியும். ஒரு பெண் தாயானவுடன் உள்ளுக்குள் அமைதியாகவும், சலனமற்றும் ஆகிவிடுகிறாள்.

இது குறித்து நான் சொல்ல விரும்புவது என்னவெனில் இப்போது மேலைநாடுகளில் இருப்பதைப் போல் காமத்தின் மீது அதிக பற்றுதல் கொண்டுள்ள பெண்கள்தான் தாங்கள் தாய்மை அடைவதை விரும்பமாட்டார்கள். தாய்மைக்குப் பின் ஒரு பெண்ணிற்கு காமத்தின் மீதான கவர்ச்சி திடீரென குறைந்து போகிறது. எனவே தாங்கள் தாய்மை அடைந்துவிட்டால் தங்களுக்கு செக்ஸின் மீதுள்ள ஆர்வம் குறைந்துவிடும் என்பதை அவர்கள் தெரிந்து கொண்டதனால்தான் மேலை நாட்டு பெண்கள் தாயாக விரும்புவதில்லை. தாயாக ஆகாமல் இருப்பதன் மூலம் காமத்தை அனுபவிப்பதை அவள் ஆதரிக்கிறாள்.

இது குறித்து மேலைநாட்டு அரசாங்கங்கள் பெருங் கவலை கொண்டுள்ளன. இது தொடர்ந்தால் அவர்களது ஜனத்தொகை என்னவாவது? கீழை நாடுகள் ஜனத் தொகைப் பெருக்கத்தால் கவலைப்படுகின்றன. ஆனால் மேலை நாடுகளில் சில பெண்கள் தாய்மை அடைவதில்லை என்று முடிவு செய்துவிட்டதால் ஜனத்தொகை குறைந்து வருவதைக் கண்டு கவலைப்படுகின்றன. ஏனென்றால் அந்தப் பெண்கள் தங்களுக்கு காமத்தில் ஆர்வம் குறைந்துவிடும் என்பதை அறிந்து கொண்டனர். குடும்பக் கட்டுப்பாட்டை வேண்டு மானால் சட்டத்தின் மூலம் நிறைவேற்றலாம். ஆனால் ஒரு பெண்ணை தாயாக ஆக வேண்டுமென்று எந்த ஒரு சட்டமும் நிர்பந்தப்படுத்த முடியாது. பெருகி வரும் நமது ஜனத்தொகை பிரச்சனையைவிட மேலை நாடுகளின் இந்தப் பிரச்சனை மிகவும் சிக்கலானது. அதிகப் பெருக்கத்தை நாம் நிர்ப்பந்தத்தின் மூலமோ அல்லது சட்டப்பூர்வமாகவோ நிறுத்திவிடலாம். ஆனால் சட்டத்தின் மூலம் அவர்கள் மக்கள் பெருக்கத்தை உருவாக்க முடியாது. அடுத்த இருநூறு ஆண்டுகளில் மேலை நாடுகளில் இந்தப் பிரச்சனை இன்னும் வளர்ந்துவிடும். ஆனால் கீழை நாடுகளில் மக்கள் தொகை எல்லையில்லாமல் அதிகரிக்கும். அப்போது உலகில் கீழை நாடுகளின் ஆதிக்கம்

மேலோங்கும். காலம் செல்லச் செல்ல மேலை நாடுகளில் மனித பலம் குறையும். அவர்கள் மீண்டும் பெண்களை தாய்மை அடையும்படி சம்மதிக்க வைக்க வேண்டிவரும்.

அவர்கள் நாட்டில் சில உளவியல் வல்லுநர்கள் பால்ய விவாகத்தை ஆதரிக்க ஆரம்பித்துள்ளனர். விவரம் தெரிந்த ஒரு பெண் தாயாக ஆவதில் விருப்பம் கொள்வதில்லை. அவளுக்கு காமத்தை அனுபவிப்பதில்தான் அதிக ஆர்வம் இருக்கும். எனவே அந்த நாட்டு உளவியல் வல்லுநர்கள் மக்களை இளம் வயதிலேயே திருமணம் செய்து கொள்ளும்படி அறிவுரை கூறுகின்றனர். அப்படிச் செய்தால் அந்தப் பெண்கள் தாயாக ஆவதற்கு முன்பு வேறு எந்த கருத்தும் கொள்ள முடியாது. இளம் திருமணங்களை மேலை நாட்டில் ஆதரிப்பதன் காரணம் இதுதான். ஒரு பெண் கன்னிப் பருவத்தில் கல்யாணம் செய்துகொண்டு தாயாக விரும்பமாட்டாள் என அவர்கள் அறிந்து கொண்டனர். அவளுக்கு காமத்தைப் பற்றிய அறிவு, காமத்தின் மீது ருசி ஏற்பட்டுவிட்டால் அவள் தாயாக விரும்பமாட்டாள் என்பதை அறிந்துகொண்டுவிட்டனர். நாம் தாய்மை அடைவதன் மூலம் என்ன இன்பத்தைப் பெறுவோம் என்பதை இந்தப் பெண்கள் அறியாத வரையில் இதுபோன்ற மனப்பாங்கு, காமத்தின் மீது இத்தனை கவர்ச்சி அந்தப் பெண்ணிடம் இருந்துதான் தீரும். ஆனால் இதை அவர்கள் தாய்மை அடைந்த பின்னர்தான் உணர முடியும். உண்மையில் தாய்மை அடைவதற்கு முன்பு அந்த அனுபவத்தின் அறிகுறிகளைப் பெறுவதற்கு வழியே இல்லை.

ஒரு பெண் தாய் ஆனவுடன் இந்தளவுக்கு திருப்தி அடைவது ஏன்? அது ஏனென்றால் அவள் தனது குழந்தை யோடு தெய்வீகமான, பிரிக்க முடியாத ஆன்மீகப் பாலுணர்வை அனுபவித்து விடுகிறாள். மேலும் இதனால்தான் தாய்க்கும், குழந்தைக்கும் இடையே அந்த அளவுக்கு ஒரு தீவிரமான நெருக்கம் உள்ளது. ஒரு பெண் தனது குழந்தைக்காக தன்னுடைய உயிரைக் கொடுப்பாளே தவிர தனது குழந்தையின்

உயிரைப் பறிக்க வேண்டுமென்று கற்பனை பண்ணிக்கூட பார்க்கமாட்டாள். ஒரு மனைவியால் கணவனைக் கொல்ல முடியும். இது அடிக்கடி நடக்கிறது. அவள் உண்மையிலேயே கணவனைக் கொல்லாவிட்டாலும் அவன் சாகுமள விற்கு சூழ்நிலைகளை அவள் தனது வீட்டில் உருவாக்கிவிட முடியும். ஆனால் குழந்தை மீதுள்ள பற்றினால் அவள் இதுபோன்ற காரியங்களை சிந்தித்துக்கூட பார்ப்பதில்லை. ஏனென்றால் குழந்தையோடு அவளுக்குள்ள தொடர்பு மிகவும் ஆழமானது. மிகவும் நெருக்கமானது.

ஆனால் அதே நேரத்தில் ஒரு பெண் தனது கணவனிடம் இதே அளவு ஆழமான உறவை உண்டாக்கிக் கொண்டால், அவளது கணவனும் அவளுக்கு ஒரு குழந்தையாகி விடுவான் என்பதையும் நான் உங்களுக்கு கூற விரும்புகிறேன். அப்போது அவன் அவளுக்கு கணவனாக இருப்பதில்லை.

இங்கு இந்தக் கூட்டத்தில் அநேக ஆண்களும், பெண்களும் உட்கார்ந்திருக்கிறீர்கள். நான் இங்குள்ள ஆண்களிடம் ஒன்று கேட்க விரும்புகிறேன். நீங்கள் உங்களது மனைவியுடன் முழுமையான இன்ப உறவு கொள்ளும் போது குழந்தைகள் தங்கள் தாயிடம் என்னென்ன செய்கின்றனவோ அவற்றையெல்லாம் அப்படியே நீங்களும் செய்கிறீர்கள் அல்லவா? ஒரு ஆணின் கை தன்னையுமறியாமலேயே பெண்ணின் மார்பகத்தை நோக்கிச் செல்வது ஏன் தெரியுமா? தனது தாயின் முலையைப் பிடிப்பதற்கு செல்கின்ற சிறிய குழந்தையின் கைதான் அது. பெண்ணை அனுபவிக்க வேண்டு மென்ற எண்ணம் ஒரு ஆணுக்கு வந்தவுடன் அவனது கை தானாகவே அவளது முலையை நோக்கிச் செல்கிறது. ஏன்? இன்பத்தை அனுபவிப்பதற்கும், முலைக்கும் என்ன சம்பந்தம்? காமத்திற்கும், முலைக்கும் சம்பந்தமே கிடையாது. ஆனால் ஒரு குழந்தை, அதன் தாயின் முலையோடு ஆழ்ந்த இன்பத்தில் திளைக்கும் அன்பு பொங்கி வழியும் ஒரு மனிதன் ஒரு மகனாக ஆகிவிடுகிறான்.

அதே சமயத்தில் பெண்ணின் கை எங்கே செல்கிறது. அவளது கை ஆணின் தலையை நோக்கிச் செல்கிறது. அவளது கைகள் அவனது தலைமுடியை கோதிவிட ஆரம்பிக்கின்றன. இது அவளது குழந்தையின் ஞாபகம். அவள் தனது மகனின் தலைமுடியை கோதி விடுகிறாள். எனவேதான் ஆன்மீக மட்டத்தில் கணவன் மனைவியிடையே இன்பம் முழுமையாக மலரும் போது கணவன் மகனாகி விடுகிறான். கணவன் மகனாக ஆகித்தான் தீர வேண்டும். அப்போதுதான் ஒருவன் ஆன்மீக மட்டத்தை. அதாவது காமத்தின் மூன்றாவது நிலையை அடைந்துவிட்டதாக அறிந்து கொள்ளலாம். ஆனால் நாம் இந்த உறவுகளைப் பற்றி முற்றிலும் அறிந்து கொள்ளவில்லை.

கணவன், மனைவிக்கு இடையே உள்ள உறவு ஒரு பயணத்தின் ஆரம்பம் தானே தவிர அது ஒரு முடிவு அல்ல. மேலும் அது ஒரு பயணம் என்பதால் கணவனும், மனைவியும் எப்போதும் பரபரப்பான நிலையிலேயே இருப்பார்கள் என்பதையும் ஞாபகத்தில் கொள்ளுங்கள். பயணம் என்பது களைப்பை தருவதுதான். பயணத்தின் முடிவில்தான் அமைதி கிடைக்கும். ஒரு கணவனும், மனைவியும் அமைதியாக இருப்பதில்லை; ஏனென்றால் அவர்கள் எப்போதும் எங்காவது போய்க் கொண்டே, சாலையில் எப்போதும் நடந்து கொண்டேயிருப்பார்கள். ஆனால் பெரும்பாலான மக்கள் போகும் வழியிலேயே இலட்சியத்தை அடையாமல் அழிந்து போகிறார்கள். எனவேதான் கணவன், மனைவிக்கிடையே இருபத்திநான்கு மணி நேரமும் ஏதாவது சண்டை, ஊடல் நடந்து கொண்டேயிருக்கிறது. ஆனால் இந்த ஊடலை நாம் "காதல்" என்கிறோம்.

துரதிர்ஷ்டவசமாக கணவனோ அல்லது மனைவியோ தங்களின் சண்டைக்கு, ஊடலுக்கு உண்மையான காரணத்தைப் புரிந்து கொள்வதில்லை. அவர்கள் ஒவ்வொருவரும் தவறான ஆளைத் தேர்ந்தெடுத்துவிட்டோம் என எண்ணுகின்றனர். வேறொரு பெண்ணை மணந்திருந்தால் எல்லாம் நன்றாக

இருந்திருக்கும் என எண்ணுகிறான். உலகத்திலுள்ள மணமான ஜோடிகள் எல்லோருக்கும் இந்த அனுபவம் உண்டு என்று நான் கூற விரும்புகிறேன். அப்படியே உங்களது ஜோடியை மாற்றிக் கொள்ள சந்தர்ப்பம் கொடுத்தாலும்கூட இந்த சூழ்நிலை கொஞ்சம் கூட மாறாது. கல்லறைத் தோட்டத்திற்கு சவப்பெட்டியை தூக்கிக் கொண்டு போகும்போது தோள்களை மாற்றிக்கொண்டு செல்வது போன்றதுதான். கொஞ்சநேரத்திற்கு ஆறுதல் கிடைக்கும். ஆனால் அதற்குப் பிறகு மீண்டும் அதே சுமையை நீங்கள் உணர்வீர்கள். விவாகரத்துக்கள் தீவிரமாக இருக்கின்ற மேலை நாடுகளில் ஒரு புதிய மனைவி கொஞ்ச நாளில் தனது முந்தைய மனைவியைப் போலவே தெரிகிறாள். அதேபோன்று பதினைந்து நாட்களுக்குள் புதிய கணவனும் தனது பழைய கணவனைப் போல் தெரிகிறான். இதற்கான காரணத்தை நீங்கள் மேலெழுந்த வாரியாக பார்க்கக் கூடாது. இன்னும் ஆழ்ந்து பார்க்க வேண்டும். தனிப்பட்டவர்கள் அதாவது ஆணோ அல்லது பெண்ணோ இதற்கு காரணம் கிடையாது. இதற்குக் காரணம் திருமணம் என்பது ஒரு பயணம், அது ஒரு செயல்முறை. திருமணம் என்பது நாம் அடைய வேண்டிய எல்லையோ அல்லது லட்சியமோ அல்ல. பெண்ணானவள் தாயாகவும், ஆணானவன் மகனாகவும் ஆகும் போதுதான் நாம் சென்றடைய வேண்டிய இடத்திற்கு போய் சேர முடியும்.

இந்தக் கேள்வியோடு சம்பந்தப்பட்ட ஒன்றை ஒரு நண்பர் கேட்டுள்ளார். செக்ஸைப் பற்றி பேசுவதற்கு என்னை ஒரு அதிகாரியாக ஏற்றுக் கொள்ள முடியாது என்று அவர் கூறுகிறார். என்னிடம் கடவுளைப் பற்றி கேட்கப்பட வேண்டுமே தவிர செக்ஸைப் பற்றி அல்ல என்றும் அவர் சொல்கிறார். அவரும் அவரது நண்பர்கள் சிலரும் கடவுளைப் பற்றி பேசுவதைக் கேட்பதற்குத்தான் இங்கு வந்திருப்பதாகவும், எனவே நான் கடவுளைப் பற்றி தான் பேச வேண்டுமென்றும் கூறுகிறார்.

செக்ஸைப் பற்றி பேசுவதற்கு அதிகாரம் இல்லாத ஒருவரிடம் கடவுளைப் பற்றி கேட்பது உபயோகமற்றது என்பது அவர்களுக்குத் தெரியாது போலும். மலை அடிவாரத்தைப் பற்றியே ஒன்றும் அறியாத ஒருவனிடம் அந்த மலையின் பொன் மின்னும் உச்சியைப் பற்றி நீங்கள் கேட்பீர்களா? செக்ஸைப் பற்றி நான் பேசுவதை நீங்கள் ஏற்றுக் கொள்ளாத போது நீங்கள் என்னிடம் கடவுளைப் பற்றியும் கேட்கக் கூடாது. முதல் படியைப் பற்றியே பேசுவதற்கு எனக்கு தகுதியில்லையெனில் கடைசிப் படியை பற்றி பேச நான் எப்படி தகுதியுடையவனாவேன்? இக் கேள்வி எழக் காரணம் என்ன?

இதற்குக் காரணம், இதுவரை காமனும் இராமனும், செக்ஸும் கடவுளும் எதிரிகளாகக் கருதி வந்துள்ளனர். தெய்வீகத்தை நாடுவோருக்கு செக்ஸ் எதற்கு; செக்ஸில் ஈடுபட்டவருக்கும் ஆன்மீகத்துக்கும் சம்பந்தம் இல்லை என்ற கருத்துக்கள் அபத்தமானவை. தெய்வீக நாட்டம் இருப்பதால் தான் பாலியல் நாட்டம் இருக்கிறது. பாலியல் நாட்டம் இன்னும் இருக்குமானால் தெய்வீகம் இன்னும் கிட்டவில்லை என்பதாகும். தெய்வீகம் கிட்டியபிறகு பாலியல் நாட்டம் மீண்டும் எழாது. மேலும் காமத்தை அடக்கிகொண்டு இராமனைத் தேடிச் செல்பவர்களின் தேடுதல் நிஜமாகவே கடவுளைத் தேடிச் செல்வதாகாது. காமத்திலிருந்து தப்பித்துக்கொள்ள அவர்கள் இராமனின் பின்னால் ஒளிந்து கொள்கிறார்கள். அவர்கள் செக்ஸைப் கண்டு பயப்படுவதுதான் இதற்கு காரணம். ஏனென்றால் அவர்களது வாழ்க்கை முழுவதும் காமத்தால் கலக்கம் அடைந்துள்ளது. அவர்கள் இராமா, இராமா, இராமா இராமா என்ற பெயரை திரும்பத்திரும்ப சொல்வதில் அடைக்கலம் தேடுகின்றனர், காமனை மறக்க இப்படிச் செய்கிறார்கள்.

இராமா என்று ஓதிக் கொண்டிருக்கும் ஒருவனை நீங்கள் கவனித்துப் பாருங்கள். இராமா என்று அவன் திரும்பத்திரும்ப கூறுவதற்கு பின்னால் காமத்தின் எதிரொலி இருக்கும்.

காமத்தைப் பற்றிய உணர்வு அங்கே இருக்கும். யாராவது ஒரு பெண்ணைப் பார்த்துவிட்டால் உடனே இராமா, இராமா, இராமா என்று கையிலுள்ள மாலையில் இருக்கும் மணிகளை வேகமாக உருட்டிக்கொண்டு மூச்சைப் பிடித்து இராமா, இராமா என்று கூறுவார்கள். அவர்களுக்குள் இருக்கும் காமம் உள்ளேயிருந்து அவர்களைத் தள்ளுகிறது. ஆனால் அதிலிருந்து தப்பிச் செல்ல பார்க்கும் இவர்களோ அந்தக் காமத்தை கண்டு கொள்ளாமல் இருக்க, அதை மூழ்கடிக்க, அதை அடக்கிவைக்க இராமனின் பெயரை உச்சரிக்க முயற்சி செய்கின்றனர். இப்படிப்பட்ட ஒரு சிறிய தந்திரத்தால் ஒருவனுடைய வாழ்க்கை மாறிவிடுமெனில் இந்த உலகம் எப்போதோ மாறியிருக்க வேண்டும். மதம் என்பதை அவ்வளவு சுலபமல்ல.

நீங்கள் உங்கள் தெய்வீக நாட்டத்தைப் புரிந்து கொள்ள வேண்டுமெனில், காமனைப் பற்றித் தெரிந்து கொள்ளுதல் அவசியமாகும். ஏன்? உதாரணத்திற்கு பம்பாயில் இருந்து கல்கத்தா செல்ல விரும்புகிற ஒரு மனிதனை எடுத்துக் கொள்ளுங்கள். முதலில் கல்கத்தா வைப்பற்றிய விபரங்களை, அது எங்கிருக்கிறது, எந்த திசையில் உள்ளது என்பது போன்ற விபரங்களைப் பெறுவதிலிருந்து அது எந்த திசையில் உள்ளது என்பதை அறியவில்லையெனில் அவன் தனது பயணத்தில் எப்படி வெற்றியடைய முடியும்? பம்பாயிலிருந்து கல்கத்தா சென்றடைய முதலில் பம்பாய் எங்குள்ளது என்பதை அவசியம் தெரிந்திருக்க வேண்டும். பம்பாய் எங்கிருக்கிறது என்று தெரியாமல், பம்பாயிலிருந்து கல்கத்தா செல்வது எப்படி என்பது போன்ற விவரங்கள் எல்லாம் அர்த்தமற்றவை, எப்படியும் நான் பம்பாயில் இருந்துதானே புறப்படவேண்டும். எனது பயணம் பம்பாயில் தான் ஆரம்பமாக வேண்டும். எனவே புறப்படும் இடம்தான் எப்போதும் முதலில் வரும். சென்றடைய வேண்டிய இடம் பின்னால் தான் வரும்.

இப்போது நீங்கள் எங்கே நின்று கொண்டிருக்கிறீர்கள்? அதிஉன்னத மெய்யுணர்வை சென்றடையும் பயணத்தை மேற்கொள்ள நீங்கள் விரும்புகிறீர்களா?

நல்லது.

நீங்கள் தெய்வீகத்தை சென்றடைய வேண்டுமென் கிறீர்களா? ரொம்பவும் நல்லது.

ஆனால் இப்போது நீங்கள் எங்கே நின்று கொண்டி ருக்கிறீர்கள்?

இப்போது நீங்கள் காமத்தில் தவித்துக் கொண்டிருக் கிறீர்கள். இப்போது நீங்கள் செக்ஸில் தவித்துக் கொண்டிருக் கிறீர்கள். எனவே இந்த இடத்தில் இருந்துதான், இப்போது நீங்கள் எங்கு இருக்கிறீர்களோ அங்கிருந்துதான் முதல் அடியை எடுத்து வைக்கவேண்டும். எனவே இப்போது நீங்கள் எங்கே இருக்கிறீர் கள் என்பதை அறிந்து கொள்வது அத்யாவசிய மாகிறது. இந்த எளிய உண்மையை நீங்கள் புரிந்து கொள்வதன் மூலம் நீங்கள் எதிர்காலத்தைப் பற்றிய சாத்தியங்களைக் காண முடியும். நீங்கள் எதை அடைய வேண்டும் என்பதை அறிந்து கொள்ள நீங்கள் என்னவாக இருக்கிறீர்கள் என்பது முதலில் அறிந்து கொள்ளுதல் முக்கியமாகும்.

கடைசிப்படியை அடைவதற்கு முதலில் நீங்கள் முதல் படியில் அடியெடுத்து வைக்க வேண்டியது அவசியம். ஏனென்றால் முதல் படிதான் இரண்டாவது படிக்கான வழியை அமைத்துக் கொடுக்கும். அப்படியே சென்றீர்களேயானால் அது உங்களது பயணத்தின் இறுதிப்படியில் கொண்டுபோய் விட்டுவிடும். உங்களது முதல் அடியே தவறான திசையில் வைக்கப்பட்டால் நீங்கள் போய்ச் சேர வேண்டிய இடத்தை ஒருபோதும் சென்றடையமாட்டீர்கள். அதற்குப் பதிலாக வனாந்திரத்தில் மாட்டிக் கொள்வீர்கள். எனவே நீங்கள் முடிவான அந்த ஒன்றைக் கண்டடைய விரும்பினால் நீங்கள் இராமனைப் புரிந்து கொள்வதைவிட காமத்தைப் பற்றி அறிந்து கொள்ளாமல் நீங்கள் கடவுளைப் பற்றி அறிந்து கொள்ள முடியாது.

அடுத்து, செக்ஸைப் பற்றி ஃபிராய்டு அவர்களின்

கருத்துக்கள் மதிப்புள்ளவையாகவும், ஏற்றுக் கொள்ளும்படியும் உள்ளன. ஆனால் நீங்கள் கூறும் கருத்துக்களை உண்மை யானவை என்றும் கபடமற்றவை என்றும் எப்படி ஏற்றுக்கொள்வது என்று ஒருவர் கேட்டுள்ளார்.

நான் உண்மையில் பேசத்தகுதியும் அதிகாரமும் உடையவனா இல்லையா என்பதை நீங்கள் எப்படி தீர்மானிக்க முடியும்? இது குறித்து நான் எதைக் கூறினாலும் அதில் விடை கிடைக்காது. ஏனென்றால் கூறுகின்ற நானே இப்போது சர்ச்சைக்குரிய பொருளாக ஆகிவிட்டேன். அப்படியிருக்கும் போது நானே என்னை தகுதியுடையவனென்று கூறிக்கொள்வது அர்த்தமற்றது. நான் தகுதியற்றவன் கூறினாலும் அது அர்த்தமற்றது. ஏனொன்றால் இப்போது விவாதத்திற்குரிய விஷயமே இவற்றையெல்லாம் கூறுகின்ற மனிதன் நேர்மையானவனா அல்லது இல்லையா என்பதுதான். இது குறித்து நான் எதைக் கூறினாலும் அது அர்த்தமற்றது. பலனற்றுப்போயிவிடும். நீங்கள் செக்ஸில் நான் கூறியபடி பரிசோதனை பண்ணி பாருங்கள். அதன்பின் நீங்களாகவே என்னைப்பற்றி அறிந்து கொள்ளுவீர்கள். நீங்களாகவே அந்த அனுபவத்தை அடைந்து பார்க்கும் போது நான் கூறியவைககள் எல்லாம் உண்மை யானவைதானா என்பதை அறிந்து கொள்வீர்கள். வேறு வழியில்லை.

உதாரணமாக நான் உங்களிடம் நீச்சலின் நுணுக்கங் களைப் பற்றி பேசுகிறேன் என்று வைத்துக்கொள்ளுங்கள். என்னுடைய முறைகள் சரியாக இருக்குமோ, இருக்காதோ என்று நீங்கள் சந்தேகப்படலாம். அதற்கு நான் கூறும் பதில் நீச்சல் கற்றுக்கொள்ள ஒரு ஆற்றிற்கு உங்களை அழைத்துச் செல்வதுதான். நான் சொல்லிக் கொடுத்தவை உங்களை இந்தக் கரையிலிருந்து அந்தக் கரைக்கு கொண்டு செல்ல உங்களுக்கு உதவினால் அப்போது நீங்கள் நான் கூறியவை சரி என்று அறிய முடியும்.

குறிப்பிட்ட அந்த நண்பருக்கு நான் கூற விரும்புவது இதுதான். ஃபிராய்டைப் பொருத்தமட்டில் நான் இங்கே உங்களிடம் கூறியவற்றை அவர் அறிந்திருக்கவில்லை. காமத்திலிருந்து மனித இனம் விடுபடுவதற்கு வழிகாட்டியவர்களில் ஃபிராய்டும் ஒருவர். ஆனால் அவருக்கு ஆன்மீக பாலுணர்வு என்று ஒன்று இருப்பது தெரியாது. ஃபிராய்டு ஒழுங்குபடுத்திய அறிவு காம நோய் பற்றியது. அவரது ஆராய்ச்சி பாலுணர்வு நோய் சம்பந்தப்பட்டது. ஃபிராய்டு ஒரு மருத்துவரைப் போன்றவர். அவரது கண்டுபிடிப்புகள் நோயுற்றவர்களுக்கு சிகிச்சைகளாக அளிக்கப்பட்டன. ஃபிராய்டு சாதாரணமான, ஆரோக்கியமான பாலுணர்வைப் பற்றி ஆராயவில்லை. அவர் காம நோய்கள், காமத்திலிருந்து நெறி தவறுதல் பேன்றவற்றில் ஆராய்ச்சி செய்தார். அவரது மனம் முழுவதும் சிகிச்சை அளப்பதிலும், குணப்படுத்துவதிலும் தான் இருந்தது.

எனவே நான் கூறுகின்ற உண்மைகளை நீங்கள் ஒத்துக்கொள்ள வேண்டுமெனில் நீங்கள் தந்த்ரா என்னும் தத்துவத்தை புரட்டிப் பார்க்க வேண்டும். தந்த்ராதான் காமத்திற்கு ஆன்மீக அந்தஸ்தை கொடுப்பதற்கு முதன் முதலில் முயன்றது. ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே நாம் தந்த்ராவைப் பற்றி சிந்திப்பதற்கு தடை விதித்துவிட்டாலும் கூட கஜுராஹோவில் உள்ள சிற்பங்களும், பூரி மற்றும் கோனார்க்கில் உள்ள கோயில்களும் நம்மிடையே இன்னும் இருக்கின்ற சான்றுகளாக உள்ளன. நீங்கள் எப்போதாகிலும் கஜுராஹோ சென்றிருக்கிறீர் களா? அங்குள்ள உருவங்களை நீங்கள் பார்த்திருக்றீர்களா? பார்த்திருந்தால் நீங்கள் இரண்டு அற்புதமான கருத்துக்களை அனுபவித்திருக்க வேண்டும். முதலாவது நிர்வாணமான ஜோடிகள் உடலுறவு கொள்ளும் அந்த சிற்பங்களைப் பார்த்தபோதும் கூட அதில் எந்தவிதமான ஆபாசமும் உங்களக்குத் தெரிந்திருக்காது. நிர்வாணமாக ஆண், பெண் உடலுறவு கொள்கின்ற அந்த சிற்பங்களில் எந்த அசிங்கத்தையும்,

கெட்டதையும் நீங்கள் காண முடியாது. இரண்டாவது விஷயம் நீங்கள் ஒருவித அமைதியை, சாந்தத்தை உணர்வீர்கள். ஒருவித புனித உணர்வு உங்களை சூழ்ந்து கொள்ளும். உங்களது இந்த செயல் உங்களை அதிர்ச்சிக்குள்ளாக்கும். இந்த சிற்பங்களை உருவாக்கியவர்கள் நெருக்கமான ஆன்மீகப் பாலுணர்வை கண்டறிந்தவர்கள்.

உண்மையிலேயே காமத்தின் வசப்பட்ட ஒருமனிதனின் முகத்தையும், அவனது கண்களையும் நீங்கள் உற்று நோக்கினால் அவன் அசிங்கமானவனாக, பயத்துடன், மிருகத்தனமாக தோன்றுவான். அங்கு நீங்கள் கலக்கமடைந்து, அதேசமயம் ஆவேசமிக்க காம உணர்வைக் காண்பீர்கள். முழுவதும் காமம் நிறைந்துள்ளபோது ஒரு ஆண் ஒரு பெண்ணை நெருங்கினால் அவன் எவ்வளவுதான் அந்தப் பெண்ணிடம் நேசமுள்ளவனாக இருந்தாலும் அவள் அவனிடம் ஒரு விரோதியைத்தான் பார்ப்பாள், நண்பனை அல்ல. அவன் ஓர் மனிதனாகக் கூட அவளுக்குத் தெரிவதில்லை. அவன் நரகத்திலிருந்து வந்த தூதுவன் போல் தென்படுவான். ஆனால் அங்குள்ள மைதுனச் சிற்பங்களின் முகங்களில் நீங்க்ள புத்தரின் அந்த ஒளி வட்டத்தைக்காண முடியும். மேலான நிலையிலிருக்கும் மகாவீரரின் பிரதிபலிப்பை அங்கே நீங்கள் காணலாம். அந்த முகங்களில் தெரிகின்ற சாந்தமும், அமைதியும்தான் நாம் சமாதி நிலையில் பெறும் அனுபவங்கள். ஒரு தூய்மையான புனிதத் தன்மை அந்த சிற்பங்களில் இருந்து வெளிப்படும். அந்த சிலைகளைப் பார்க்கும்போது கொண்டு தியானம் செய்தால் அழிவில்லா அமைதி அலையைத் தவிர வேறெதுவும் உங்களைச் சூழாது. நீங்கள் வியப்பிலாழ்த்தப்படுவீர்கள்.

நிர்வாணமான சிலைகளைப் பார்த்தால் உங்களது காம உணர்ச்சிகள் தூண்டப்படும் என்று நீங்கள் கருதினால் காலதாமதமின்றி நேராக நீங்கள் கஜுராஹோ செல்லுங்கள். கஜுராஹோ இந்த பூமியிலுள்ள தனித்தன்மை வாய்ந்த ஒரு

ஞாபகச் சின்னம். ஆனால் மறைந்த ஸ்ரீ புருஷோத்தம்தாஸ் தாண்டன் போன்ற ஒழுக்கவாணர்களும் அவர்களது நண்பர்களும் கஜுராஹோவின் சுவர்களை சாந்து பூசி மறைத்துவிட வேண்டும் என்று எண்ணினர். ஏனென்றால் அந்த சிற்பங்கள் மக்களிடம் காம உணர்வுகளைத் தூண்டிவிடும் என்று அவர்கள் கருதினர். இதைக் கேள்விப்பட்ட நான் மிகவும் ஆச்சரியமடைந்தேன். இந்த சிலைகளின் முன்னால் மக்கள் அவற்றைப் பார்த்தபடி ஒருமணி நேரம் உட்கார்ந்தால் அவர்கள் காமத்திலிருந்து விடுபடுவார்கள். ஆயிரக்கணக்கான ஆண்டு களாக இந்த சிலைகள் தியானத்திற்குரிய பொருள்களாக இருந்தன. இது நமக்கு ஒரு முன் உதாரணமாகத் திகழ்கிறது. அதிகமாக காம வசப்படுகின்ற மக்கள் கஜுராஹோ கோவிலுக்குச் சென்று இந்த சிலைகளைத் தியானம் செய்து அவற்றில் தம்மை இழந்து விடும்படி கேட்டுக் கொள்ளப் படுவார்கள்.

மேலும் சாதாரண மனித அனுபவத்தில் அடிக்கடி நாம் இந்த உண்மையை உணர்ந்திருந்தாலும்கூட நம்மால் அதை உண்மையிலேயே பார்க்க முடிவதில்லை. உதாரணமாக நீங்கள் போய்க் கொண்டிருக்கும்போது ரோட்டில் யாராவது இரண்டு பேர் சண்டை போட்டுக் கொண்டிருந்தால் அதைக் கொஞ்சம் நின்று பார்க்கலாமே என்று நீங்கள் எண்ணுகிறீர்கள். இது ஏன்? மற்றவர்கள் சண்டை போடுவதை பார்த்தால் நமக்கு என்ன கிடைக்கிறது என்று நீங்கள் எப்போதாவது சிந்தித்துள்ளீர்களா? தலைக்கு மேல் உள்ள வேலைகளை விட்டுவிட்டு நீங்கள் அரைமணி நேரமாக நின்று மற்றவர் சண்டை போடுவதைப் பார்க்கிறீர்கள். அதே போன்று குத்துச்சண்டை போட்டிகள் நடக்கும் இடத்திற்கு செல்கிறீர்கள். இவையெல்லாம் ஏன்? இவைகளில் எல்லாம் ஒருவிதமான நோய்களைக் குணப்படுத்தும் தன்மைகள் உள்ளன. இரண்டு பேர் சண்டையிடுவதை நீங்கள் பார்க்கும்போது உங்களுக்குள் ஆழத்தில் அமர்ந்திருக்கும் சண்டைபோட வேண்டும் என்கிற உணர்வு திருப்திப்படுத்தப்

படுகிறது. அந்த உணர்வு வலுவிழக்கிறது. உங்களுக்குள் உள்ள உணர்வு வெளியே தள்ளப்படுகிறது. அதனால் நீங்கள் மேலும் அமைதி நிறைந்தவர்களாக ஆகிவிடுகிறீர்கள். எனவே ஒருவன் உடலுறவு கொள்கின்ற இந்த சிற்பங்களின் முன்னால் உட்கார்ந்து அமைதியான மனதுடன் தியானம் செய்தால் அவனுக்குள் இருக்கின்ற காமப்பித்து, மனிதனின் செக்ஸ் பைத்தியம் நீர் கொதித்து ஆவியாகி விடுவதுபோல் மறைந்துவிடும்.

ஒருவன் ஒரு மனநோய் மருத்துவரிடம் ஒரு பிரச்சனையுடன் சென்றான். அவனுக்கு அவனது முதலாளி மீது பெருத்த கோபம். அவனது முதலாளி ஏதாவது கூறினால் அவன் உடனே கோபமடைந்துவிடுவான். அவன் தனது செருப்பை கழற்றி முதலாளியை அடித்து விடலாமா என்று கூட எண்ணுவான். ஆனால் முதலாளியை எப்படி அடிக்க முடியும்? ஏதாவது ஒரு விஷயத்திற்காக முதலாளியை உதைக்கவேண்டும் என்று எண்ணாத தொழிலாளி இருக்கிறானா? அப்படியிருந்தால் அது அபூர்வம்.

எனவே அந்த ஆள் தனது முதலாளியை அடிக்க வேண்டும் என்கிற ஆசையை அடக்கிக்கொண்டே வந்தான். ஆனால் அவனுக்கு தன்னைப் பற்றியே பயம் வந்துவிட்டது. என்றாவது ஒரு நாள் நாம் முதலாளியை அடித்துவிடுவோமோ என்கிற பயத்தில் அவன் தினமும் தனது செருப்புக்களை மறக்க முடியவில்லை. அவன் முதலாளியைப் பார்த்த போதெல்லாம் அவனது கை தானாகவே அவனது கால்களை நோக்கிச் செல்லும். ஆனால் நல்ல வேளையாக அவன் தனது செருப்புக்களை வீட்டில் போட்டுவிட்டு வந்திருப்பான். ஆனால் அவனுக்கிருக்கும் வெறியில் என்றாவது ஒருநாள் ஏதாவது ஒரு செருப்பை எடுத்து முதலாளி மீது வீசி விடுவோமோ என்று அவன் பயந்தான்.

எனவே செருப்புக்களை வீட்டில் விட்டுவிட்டு வந்த பின்னும் அவனால் கவலையின்றி இருக்க முடியவில்லை. அது

அவனது மனதுக்குள் தொடர்ந்து இருந்து வந்தது. அவன் பேனாவைத் திறந்தால் உடனே செருப்பு படம் வரைய ஆரம்பித்தான். சும்மா உட்கார்ந்திருக்கும் நேரங்களில் எல்லாம் செருப்பின் உருவத்தை வரைய ஆரம்பித்தான். அவனது எண்ணம் முழுவதும் செருப்பாகிவிட்டது. எனவே எப்படியும் என்றாவது ஒருநாள் நாம் முதலாளியை அடித்துவிடுவோம் என்று உண்மையிலேயே பயந்தான்.

தனது வீட்டிலுள்ளவர்களிடம் தான் அலுவலகத்திற்கு செல்லாமல் இருந்தால் நன்றாக இருக்கும் என்று கூற ஆரம்பித்தான். இப்போதைய அவனது மனநிலையில் அவனுக்கு அவனது சொந்த செருப்புக்கள் தேவையில்லை. வேறு யாருடைய் செருப்பையாவது எடுத்து முதலாளியை அடிக்க எண்ணினான். அவனது கைகள் அவனுடன் வேலை செய்பவர்களின் செருப்புக்களை நோக்கிச் செல்ல ஆரம்பித்தது. எனவே இந்த நிலையில் அவனது குடும்பத்தினர் அவனை ஒரு மனநோய் மருத்துவரிடம் அழைத்துப்போக வேண்டுமென்று எண்ணினார். அவனும் போனான்.

மனநோய் மருத்துவர் அவனது நோய் ஒன்றும் கவலைப்படும்படி இல்லையென்றும் அதைக் குணப்படுத்தி விடலாம் என்றும் கூறினார். அவர் அவனிடம் வீட்டில் அவனது முதலாளியின் படம் ஒன்றை மாட்டி வைத்து ஒவ்வொரு நாள் காலையிலேயும் அதை ஐந்துமுறை செருப்பால் அடிக்கும்படி அறிவுரை கூறினார். அந்த போட்டோவை அவன் அலுவலகத் திற்கு செல்லும்முன் மிகவும் பக்தியோடு அடிக்கவேண்டு மென்றும், ஒருநாள்கூட தவற விடக் கூடாது என்றும் அறிவுரை கூறினார். தினமும் இதை ஒரு காலை ஜெபத்தைப் போல ஒரு சடங்காகச் செய்ய வேண்டும். அதேப் போன்று அலுவலகத்தில் இருந்து திரும்பி வந்த பின்னரும் இதே சடங்கை மீண்டும் செய்ய வேண்டுமென்றும் கூறினார்.

இது என்ன முட்டாள்தனம்! என்று முதலில் அந்த

மனிதன் கூறினான். அந்தக் கருத்தைக் கேட்டு அவன் அதிர்ச்சியடைந்தாலும் அதைக்குறித்து உள்ளுக்குள் சந்தோஷம் அடைந்தான். அதே போன்று போட்டோ ஒன்று தொங்கவிடப் பட்டது. டாக்டர் கூறியது போல் சடங்கை அவன் செய்ய ஆரம்பித்தான்.

முதல்நாள் அவன் வீட்டில் முதலாளியின் படத்தை ஐந்துமுறை அடித்துவிட்டு அலுவலகத்திற்குச் சென்றவுடன் ஒரு புதிய உணர்வைப் பெற்றான். இதற்கு முன்பு இருந்ததைப்போல் அவனது முதலாளியைப் பார்த்தவுடன் அவனுக்கு கோபம் வரவில்லை. மேலும் பதினைந்து நாட்களுக்குள் அவன் தனது முதலாளிக்கு மிகவும் அடக்கமான தொழிலாளியாகிவிட்டான். அவனது முதலாளியும் அவனிடம் ஏற்பட்ட மாற்றத்தை உணர்ந்தார். எப்படி இவன் மாறினான் என்று அவரால் அறிந்துகொள்ள முடியவில்லை. அவர் இவனிடமே நீ மிகவும் அடக்கமானவனாக, சொன்ன சொல் கேட்பவனாக, பணிவுள்ளவனாக ஆகிவிட்டது எதனால் என்று கேட்டார். அதற்கு அவன், தயவுசெய்து அதை மட்டும் கேட்காதீர்கள். கேட்டால் மீண்டும் குழப்பமாகிவிடும். நான் அதைக் கூற மாட்டேன் என்று பதிலளித்தான்.

இந்த கதையின் பின் உள்ள உண்மை என்ன? வெறுமனே போட்டோவை அடிப்பதால் அவனுக்குள்ளிருந்த முதலாளியை அடிக்கவேண்டும் என்கிற அவனது வெறி மறைந்துபோயிற்று.

கஜுராஹோ, கோனார்க், பூரி போன்ற கோவில்கள் இந்த நாட்டின் மூலை முடுக்குகளில் எல்லாம் உள்ளன. மற்ற கோவில்களில் எதுவும் முக்கியமில்லை. அவைகளில் விஞ்ஞானமும் இல்லை, திட்டமிடலும் இல்லை. அர்த்தமும் இல்லை. மற்ற கோவில்கள் தேவையே இல்லை. ஆனால் கஜுராஹோ போன்ற கோவில்கள்தான் முழு அர்த்தமுடையவை. யாருடைய மனமானது அதிக காமப்பித்து பிடித்திருந்தால்

அவர்கள் அங்கே சென்று தியானம் செய்யவேண்டும். அவன் திரும்பி வரும்போது உள்ளத்தின் பாரம் குறைந்து காணப் படுவான். அவனுக்கு அமைதி கிடைக்கும்.

தாந்திரீகர்கள் காமத்தை ஆன்மீகமாக மாற்ற முயன்றனர். ஆனால் ஒழுக்கத்தைப் பற்றி நமது நாட்டில் பிரச்சாரம் செய்தவர்கள். அவர்கள் கூறயவை பொது மக்களை சென்றடைய முடியாதபடிக்கு செய்துவிட்டனர். அதுபோன்ற மக்கள்தான் எனது சொற்பொழிவிற்கு முற்றுப்புள்ளி வைக்க விரும்பினார்கள்.

பம்பாயில் பாரதீய வித்யா பவனில் எனது சொற் பொழிவை முடித்துவிட்டு நான் ஜபல்பூர் திரும்பி வந்த மூன்று நாட்களுக்குள் ஒரு நண்பரிடமிருந்து எனக்கு ஒரு கடிதம் வந்தது.

அதில் நான் தொடர்ந்து பேசினால் சுட்டுக் கொல்லப்படுவேன் என்றிருந்தது. நான் அவருக்கு பதில் கூற விரும்புகிறேன். ஆனால் அந்த ஆள் ஒரு கோழையாக இருக்க வேண்டும். அவர் அந்த கடிதத்தில் கையெழுத்துப் போடவு மில்லை. விலாசமும் கொடுக்கவில்லை. நான் எங்கே போலீஸிடம் சொல்லி விடுவேனோ என்று அவர் பயந்து விட்டார் போலும். எப்படியோ, அவர் இங்கு இப்போது இருந்தால் என்னுடைய பதிலை அவர் ஏற்றுக் கொள்ளட்டும். இங்கு அவர் இருந்தாலும் கூட அவர் ஒரு மரத்தின் பின்னாலோ அல்லது சுவற்றின் பின்னாலோ ஒளிந்து கொண்டுதான் இருப்பார். அவர் இங்கு எங்காவது இருந்தால், நான் இந்த விஷயத்தை போலீஸில் புகார் செய்யப் போவதில்லை என்று கூறிக் கொள்ள விரும்புகிறேன். ஆனால் தயவுசெய்து அவர் தனது பெயரையும், விலாசத்தையும் தந்தால்தான் நான் அவருக்கு பதில் கொடுக்க எளிதாக இருக்கும். அதற்கும் அவருக்குத் துணிவில்லை யெனில் நான் எனது பதிலை இங்கேயே சொல்கிறேன். அவர் நன்றாக கவனித்துக் கொள்ளட்டும்.

முதலில் அவர் என்னைச் சுடுவதற்கு இவ்வளவு அவசரப்படக்கூடாது. ஏனென்றால் என்மீது குண்டு பாய்ந்தால் நான் கூறியவைகள் எல்லாம் அழியாத உண்மைகள் ஆகிவிடும் என்பதை அவர் அறிந்திருக்க மாட்டார் என எண்ணுகிறேன். இயேசு சிலுவையில் அறையப்படவில்லையெனில் இந்த உலகம் அவரை எப்போதோ மறந்து போயிருக்கும். ஒரு வகையில் அந்தத் தண்டனை இயேசுவிற்கு நன்மையாக முடிந்தது. ஜார்ஜ் கௌஸெட் (GEORGE GOUZETTE) என்னும் ஆசிரியர் இயேசு தான் சிலுவையில் அறையப்படவேண்டும் என்று திட்டமிட்டே செய்தார் என்று கூறியுள்ளார். இயேசுவே தான் சிலுவையில் அறையப்படவேண்டுமென விரும்பினார். ஏனென்றால் அப்போதுதான் அவர் போதித்த ஒவ்வொரு வார்த்தையும் இனிவரும் காலங்களில் உண்மையாக ஏற்றுக் கொள்ளப்பட்டு அதனால் பல கோடிக்கணக்கான மக்கள் நன்மை பெறுவர் என்று அவர் எண்ணினார்.

இதற்கு சாத்தியம் உள்ளது. இயேசுவை 30 வெள்ளிக் காசுகளுக்கு காட்டி கொடுத்த யூதாஸ் இயேசுவை மிகவும் நேசித்த சீடன். இயேசுவோடு அநேக வருடங்களைக் கழித்த ஒருவன் இந்த சிறு தொகைக்காக இயேசுவை ஒருபோதும் காட்டிக் கொடுத்திருக்கமாட்டான். இயேசுவே இதை செய்யும்படி அவனுக்கு கூறியிருப்பார். அவனை கட்சி மாறி இது போன்றதொரு தண்டனையை தனக்கு வாங்கித் தரும்படி இயேசுவே அவனிடம் கூறியிருப்பார். ஏனென்றால் அப்போதுதான் இயேசுவின் வார்த்தைகள் அழியாத அமுத ஊற்றுகளாகி பல கோடி மக்களை உய்விக்கும் என்று அவர் எண்ணினார்.

மகாவீரர் மட்டும் சிலுவையில் அறையப்பட்டிருந்தால் இப்போது இருப்பதைப் போல் 30 இலட்சம் ஜைனர்கள் இருக்கமாட்டார்கள், முப்பது கோடி ஜைனர்கள் இருப்பார்கள். ஆனால் மகாவீரர் அமைதியாக உயிர் நீத்தார். அவர் சிலுவையில் மடிவதைப் பற்றி எண்ணிப் பார்த்திருக்க மாட்டார்.

யாரும் அவருக்கு அதை செய்யவும் இல்லை. அவரும் அப்படி நடக்க வேண்டுமென்று முயற்சி செய்யவுமில்லை. அதே போன்று புத்தரோ, முகமதோ, இராமரோ, கிருஷ்ணரோ முயற்சி செய்யவில்லை. ஆனால் இயேசு சிலுவையில் அறையப்பட்டார். அதனால் இன்று கிறிஸ்தவர்கள் உலகில் பாதி உள்ளனர். இந்த உலகம் முழுவதுமே ஒருநாள் கிறிஸ்தவத்திற்கு மாறினாலும் மாறும். சிலுவையில் அறையப்பட்டதால் ஏற்பட்ட நன்மை இது. எனவே என்னை சுட்டுக் கொல்வதற்கு அவசரப்பட வேண்டாம் என்று நான் எனது நண்பருக்கு கூறுகிறேன். இல்லையெனில் அவர் வாழ்நாள் முழுவதும் பின்னால் வருந்த வேண்டியிருக்கும்.

இரண்டாவது விஷயம் என்னவெனில் அதைப் பற்றி அவர் அதிகம் கவலைப்பட வேண்டாம். எனக்கு படுக்கையில் சாகும் ஆசை இல்லை. சரியான நேரம் வரும்போது யாராவது ஒருவர் என்னைச் சுடுவதற்கு நான் என்னால் முடிந்தவரை முயல்வேன். எனவே அவர் அவசரப்படவேண்டாம். அதற்கு நானே ஏற்பாடு செய்வேன். வாழ்வும் உபயோகமானதுதான். ஆனால் ஒருவன் சுட்டுக் கொல்லப்பட்டால் மரணமும் உபயோகமானதாகிவிடும். வாழ்வு அவனுக்கு நிறைவேற்றா ததை துப்பாக்கிக் குண்டில் கிடைக்கும் மரணம் நிறைவேற்றி விடும்.

ஆனால் மக்கள் அதே தவறை மீண்டும் மீண்டும் செய்கின்றனர். அவர்கள் சாக்ரடீஸுக்கு விஷம் கொடுத்தனர், மன்சூரைக் கொலை செய்தனர். இயேசுவை சிலுவையில் அறைந்தனர். அவைகள் எல்லாம் சிறுபிள்ளைத்தனமான செயல்கள். குறைப் பிரசவம் போன்ற செயல்கள். சமீபத்தில் காந்தியை சுட்டுக் கொன்றவன், தனது கொலைச் செயலால் காந்தியைப் பற்றிய ஞாபகத்தை பரப்புவதில் அவர்களது சீடர்கள்கூட இந்த அளவுக்கு வெற்றி பெற்றிருப்பார்களா என்று எண்ணுமளவிற்கு, அவரது பெயர் நிலைத்து நிற்கும்படி செய்துவிட்டான். காந்தி சுடப்பட்டு இறக்கும் தருவாயில் தனது

இரண்டு கைகளையும் கூப்பி தலை வணங்கினார். அவர் இருகரம் கூப்பி வணங்கியது விசேஷ அர்த்தமுள்ளதாகும். காந்தியின் மிகச் சிறந்த அதே சமயம் கடைசிச் சீடன் இறுதியில் வந்து விட்டதையும், காந்தியை அமரத்துவம் பெற்றவராக ஆக்கக்கூடிய மனிதன் வந்து விட்டதையும் வெளிப்படுத்துவது போல் இருந்தது. கடவுள் தேவையான மனிதனை அனுப்பி வைத்துவிட்டார்.

படுகொலை செய்யப்படுவதால் ஒருவன் இறப்பதில்லை. அது அந்த மனிதன் அழியாப் புகழ் பெறுவதற்கு உதவுவதாகும். வாழ்க்கையின் சதி மிகவும் சிக்கலானது. வாழ்க்கையென்னும் கதையில் அநேக எதிர்பாராத நிகழ்ச்சிகள் நடக்கும். நீங்கள் நினைப்பது போல் விஷயங்கள் எளிதாக நடப்பதில்லை. படுக்கையில் படுத்து உயிரைவிடும் மனிதன் எப்போதைக்கும் இறந்து போகிறான். ஆனால் கொலைகாரனின் துப்பாக்கி குண்டிற்கு பலியாகின்ற ஒருவன் ஒருபோதும் சாவதில்லை.

சாக்ரடீஸிற்கு விஷம் கொடுக்க தயாரானதும் அவரது நண்பர்களில் சிலர் அவரது உடலை அவரது மரணத்திற்கு பின்னர் என்ன செய்ய வேண்டும் என்று கேட்டனர். உடலை எரித்துவிடுவதா, புதைத்து விடுவதா அல்லது என்ன செய்வது என்று அவரிடம் கேட்டனர். உடனே சாக்ரடீஸ் சிரித்துக் கொண்டே அவர்களிடம், அற்பமானவர்களே! உங்களுக்குத் தெரியாது. நீங்கள் எல்லோரும் இறந்த பின்னரும் நான் உயிர் வாழ்வேன். இதிலுள்ள தந்திரம் என்னவெனில் நான் இப்படிப்பட்ட சாவைத் தேர்ந்தெடுத்ததே காலாகாலத்திற்கும் உயிருடன் என் பெயர் வாழத்தான் என்று கூறினார்.

எனவே எனது நண்பர் அவர் இங்கு இருந்தால் சிந்திக்காமல் எதையும் செய்யக் கூடாது. அப்படிச் செய்தால் அவர் விரைவில் தோற்றுப் போவதை உணர்வார். எனக்கு எந்தக் கெடுதலும் வராது. துப்பாக்கி குண்டுகளில் அழிக்கப் படுகின்ற மனிதன் நான் அல்ல. துப்பாக்கி குண்டுகள் துளைத்தாலும் உயிர்

வாழ்பவர்களில் நானும் ஒருவன். எனவே என்னைச் சுடுவதற்கு அவர் அவசரப்படக் கூடாது. ஆனால் அதற்காக அவர் மனம் கலவரப்பட வேண்டாம். ஏனென்றால் நான் எனது படுக்கையில் உயிரை விடாமல் இருப்பதற்கு என்னால் முடிந்தவரை முயற்சி செய்கிறேன். அப்படிப்பட்ட மரணம் நடக்காது. அப்படிப்பட்ட மரணம் மதிப்பற்றது.

மேலும் அவர் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டியு மூன்றாவது விஷயம் கடிதங்களில் கையெழுத்துப் போட பயப்படவேண்டாம். அவரது விலாசத்தை கொடுக்க பயப்படவேண்டாம் என்பதுதான். என்னைச் சுடுவதற்கு தயாராகவும், தைரியமாகவும் யாராவது இருந்தால் அவர் கண்டிப்பாக செய்வார் என்று நான் உணர்ந்தவுடன் அவரை யாரிடமும் சொல்லாமலேயே என்னைச் சுடுவதற்கு நியமித்துவிடுவேன். ஏனென்றால் பின்னால் அவர் மாட்டிக் கொள்ள கூடாது.

ஆனால் இந்த ஆளிடம் வித்தியாசமாக ஒன்றும் தெரிய வில்லை. அவர் மதத்தை காப்பாற்றும் எண்ணத்துடன் இதை எழுதியுள்ளார். நான் மதங்களை அழித்து விடுவேன் என்று அவர் எண்ணியதால் இதை எழுதியுள்ளார். அவர் விரோத மனப்பான்மையில் செய்யவில்லை. அவரைப் பொருத்த அளவில் அவரது உணர்ச்சிகள் நியாயமானவை, மதப்பற்று மிக்கவை.

இப்படிப்பட்ட மதப்பற்றுள்ள மக்கள்தான் இந்த உலக மக்களின் உணர்ச்சிகளோடு விளையாடிக் கொண்டிருக்கின்றனர். அவர்களின் மனப்பான்மைகள் நல்லவையாக இருக்கலாம். ஆனால் அவர்கள் அறிவில் மிகவும் ஏழைகள், பல காலமாக தாங்கள் கூறுவதுதான் நியாயமானது என்கிற இது போன்ற மக்களாலும், அவர்களைப் போன்ற கூட்டத்தினராலும்தான் உண்மையானது முழுமையாக மலர முடியாமல் அதை மூச்சுத்திணறச் செய்துவிட்டனர். மக்களின் அறிவை வளர

விடாமல் இப்படி அடக்கிவிட்டதால் எங்கும் அறியாமை பரவி விட்டது. நாம் இருட்டில் துழாவிக் கொண்டிருக்கிறோம். அறியாமை என்னும் இருட்டில் நாம் காணாமல் போய் விட்டோம். இப்படிப்பட்ட இருளின் மத்தியில் பிரச்சாரம் செய்வதற்கான மேடையை அமைத்து அதன் மீது ஏறி நின்று கொண்டு இந்த ஒழுக்கவாணர்கள் நம்மிடம் பிரசங்கங்கள் செய்து வருகின்றனர்.

ஆனால் உண்மையின் ஒளிக்கதிர்கள் நமது வாழ்க்கையில் உதிக்க ஆரம்பித்துவிட்டதால் இப்படிப்பட்ட புனிதர்களுக்கு இங்கே வேலை இருக்காது என்பதும் உண்மைதான். கடவுளோடு நாம் உயிரோட்டமுள்ள ஒரு உறவை உற்பத்தி செய்து கொள்ளும்போது. நமது சாதாரண இகலோக வாழ்க்கையானது தெய்வீக வாழ்க்கையாக மாற்றமடையும் போது. இப்படிப்பட்ட ஒழுக்கத்தை போதிக்கும் போதனை யாளர்களுக்கு ஒன்றும் வேலை இருக்காது. மக்கள் இருட்டில் தேட ஆரம்பிப்பதை வைத்துதான் இதுபோன்ற போதனை யாளர்கள் ஆதாயம் தேடிக் கொண்டிருக்கிறார்கள்.

மக்களுக்கு நோய் வந்தால்தான் வைத்தியம் தேவைப் படும். மக்களுக்கு நோய் வரவில்லையென்றால் வைத்தியர்கள் அனாவசியமானவர்களாக ஆகிவிடுவார்கள். மதத்தை போதிக்கும் தொழிலைப் போல, வைத்தியத் தொழிலும் நமது உடலுக்குள் ஏற்படும் சச்சரவுகளைக் கொண்டுதான் உயிர் வாழ்கிறது. ஏனென்றால் மக்களுக்கு ஏதாவது நோய் வந்தால் தான் வைத்தியர் பிழைப்பு நடத்த முடியும். வெளியில் வைத்தியர் நோயாளிகளுக்கு சிகிச்சை அளிக்கலாம். ஆனால் அவருக்குள் மக்கள் நோயுற வேண்டும் என்றுதான் அவர் எண்ணுவார். மேலும் ஏதாவது தொத்து நோய் பரவி விட்டால் தனக்கு நன்றாக தொழில் நடப்பதால் அவர் கடவுளுக்கு நன்றி சொல்வார்.

நான் ஒரு கதை கேள்விப்பட்டிருக்கிறேன்.

ஒரு நாள் இரவு நண்பர்கள் கூட்டமாகச் சேர்ந்து ஒரு ஹோட்டலில் பெரிய விருந்து ஏற்பாடு செய்தனர். அவர்கள்

விடியும்வரை நன்றாக குடித்து, உண்டு மகிழ்ந்தனர். அவர்கள் விருந்து முடிந்து போகும்போது அந்த ஹோட்டலின் முதலாளி தனது மனைவியுடன் இப்படி நிறைய எண்ணிக்கையில் வாடிக்கையாளர்களை அனுப்பியதற்காக கடவுளுக்கு நன்றி கூறும்படி கூறினார். இப்படிப்பட்ட கூட்டம் தொடர்ந்து வந்தால் தாங்கள் பணக்காரர்களாகிவிடலாம் என்றும் அவர் மனிவியிடம் கூறினார். அந்த விருந்தை ஏற்பாடு செய்தவர் ஹோட்டல் முதலாளியிடம் விருந்துக்கான தொகையைக் கொடுக்கும் போது தான் செய்கின்ற தொழிலும் சிறப்பாக நடைபெற வேண்டுமென்று வேண்டிக் கொள்ளும்படி அந்த ஹோட்டல் முதலாளியிடம் கேட்டுக் கொண்டார். ஏனென்றால் தான் செய்யும் தொழில் நன்றாக நடந்தால்தான் மீண்டும் மீண்டும் இந்த ஹோட்டலுக்கு வரமுடியும் என்று கூறினார்.

உடனே ஹோட்டலின் சொந்தக்காரர், "அது சரி, உங்களது தொழில் என்ன ஐயா?" என்று கேட்டார். அதற்கு அந்த விருந்து கொடுத்தவர், "நான் பார்ப்பது சுடுகாட்டில் வெட்டியான் வேலை. நிறைய பேர் செத்தால் தான் எனக்கு தொழில் நன்றாக நடக்கும்" என்று கூறினார்.

அதேபோன்று ஒரு வைத்தியரின் வேலை மக்களின் நோயை குணப்படுத்துவதுதான். ஆனால் மக்கள் எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாக நோய்வாய்ப்படுகிறார்களோ அந்த அளவுக்கு அதிகமாக அவருக்கு பணம் வரும். எனவே அவர் தனக்குள்ளாக தன்னுடைய நோயாளிகள் ரொம்பவும் சீக்கிரத்தில் குணமடைய வேண்டுமென்று எண்ணமாட்டார். அதனால்தான் நோயாளிகள், குறிப்பாக பணக்காரர்கள் குணமடைய அதிக நாள் தேவைப்படுகிறது. ஏழைகள் அதிக நாள் நோய்வாய்ப்பட்டிருந்தால் வைத்தியருக்கு அதனால் அதிக லாபம் வராது. பணக்காரர்களிடம் அதிக பணம் கிடைக்கும். அதனால் அவர் பணக்காரர்களை மெதுவாகத்தான் குணப் படுத்துவார். எப்படியோ இந்த பணக்காரர்கள்தான் எப்போதும்

நோய்வாய்ப்படுகிறார்கள். வைத்தியர்களின் பிரார்த்தனை களுக்கு பணக்கார நோயாளிகள்தான் பலியாகின்றனர்.

அதே போன்றுதான் நீதி போதனைகளை சொல்பவர்களும் உள்ளனர். மக்கள் எந்த அளவுக்கு ஒழுக்கம் கெட்டு அலைகிறார்களோ, எந்த அளவுக்கு சமூக விரோதச் செயல்களில் ஈடுபடுகிறார்களோ, எந்த அளவுக்கு புரட்சி பரவுகிறதோ அந்த அளவுக்கு அந்த நீதி போதனையாளர்களின் பிரச்சார மேடை உயர்கிறது. ஏனென்றால் அப்போதுதான் அவர் மேடையில் நின்றுகொண்டு மக்களிடம் வன்முறையின்றி, உண்மையானவர்களாக, நேர்மையானவர்களாக நடக்க வேண்டமென்றும், விதிமுறைகளின்படி நடக்க வேண்டு மென்றும், சட்டதிட்டங்களை கடைபிடிக்க வேண்டுமென்றும் இன்னும் என்னென்ன செய்ய வேண்டுமென்று பேசிக்கொண்டே போக முடியும். மக்கள் நேர்மையானவர்களாக, தன்னடக்கம் நிறைந்தவர்களாகவும், ஒழுக்கமானவர்களாகவும், அமைதியான வர்களாகவும், புனிதமானவர்களாகவும் இருந்துவிட்டால் இப்படி ஒழுக்கத்தைப் பற்றி பிரச்சாரம் செய்பவர்களுக்கு வேலையே இல்லாமல் போய்விடும்.

மேலும் இந்த உலகத்தில் எங்கும் இருப்பதைவிட இந்தியாவில் மட்டும் மதப்பிரச்சாரர்களும், போதனையாளர் களும் அதிக அளவில் ஏன் இருக்கின்றனர்? ஒவ்வொரு கிராமத்திலும், ஒவ்வொரு வீட்டிலும் ஒரு பண்டிதரோ, ஒரு குருவோ, ஒரு சுவாமியோ அல்லது ஒரு பாதிரியாரோ இருப்பது ஏன்? இந்த தேசத்தில் மட்டும் மதத்தலைவர்கள் விருந்தாளி களின் கூட்டம் போல் அதிகமாக இருப்பது ஏன்?

நம்மிடையே அதிக அளவில் துறவிகளும், குருமார்களும் இருப்பதால் நாம்தான் ஆழ்ந்த சமயப் பற்றுமிக்கவர்கள் என்று எண்ணிவிடக்கூடாது. இன்று இந்த உலகிலேயே அதிக மதப் பற்றற்ற நாடுகளில் ஒன்றாக நாம் இருக்கிறோம் என்பதுதான் உண்மை. எனவேதான் இதுபோன்ற

போதனையாளர்களுக்கு நம் நாட்டில் அதிக சந்தர்ப்பங்கள் கிடைக்கின்றன. போதிப்பது என்பது நமது தேசீய உருவமாகி விட்டது. அமெரிக்கப் பத்திரிக்கை ஒன்றிலிருந்து ஒரு கட்டுரையை எனது நண்பன் எனக்கு அனுப்பியிருந்தான் அந்தக் கட்டுரையில் அவன் கண்டுபிடித்த குறைபாடுகளைப் பற்றி எனது கருத்தைக் கேட்டிருந்தான். அது ஒரு சிரிப்புக்குரிய கட்டுரை. அந்தக் கட்டுரையில் எந்த ஒரு நாட்டு மக்களின் ஒழுக்க குணங்களைப் பற்றி தெரிந்து கொள்ள விரும்பினாலும் அந்த நாட்டிலுள்ள ஒரு மனிதனை நன்றாக மது அருந்தச் செய்து பார்த்தால் தெரிந்துவிடும் என்று எழுதப்பட்டிருந்தது. டச்சு நாட்டை சேர்ந்த ஒருவன் அதிகமாக மது அருந்தினால் அவன் சாப்பாட்டில் அதிக பிரியம் கொள்வான். அவன் சாப்பாடு மேஜையை விட்டு வரவே மாட்டான். ஒரு தடவை குடித்து விட்டால் இரண்டு அல்லது மூன்று மணி நேரத்திற்கு தின்று கொண்டேயிருப்பான் என்று அந்தக் கட்டுரையில் கூறப்பட்டிருந்தது. பிரஞ்சு நாட்டைச் சேர்ந்த ஒருவன் குடித்தால் அவன் அமைதியாக இருக்க மாட்டான். அவன் ஆடவும், பாடவும் விரும்புவான். ஒரு ஆங்கிலேயன் குடித்தால் அவன் ஒரு மூலையில் போய் பேசாமல் உட்கார்ந்து கொள்வான். ஆங்கிலேயர்கள் சாதாரணமாகவே அமைதியானவர்கள். எனவே அவர்கள் குடித்தாலும் இன்னும் அதிக அமைதியானவர் களாக ஆகி விடுவர். பல்வேறு நாட்டைச் சேர்ந்தவர்கள் மது அருந்தினால் அவர்கள் என்ன செய்வார்கள் என்று அந்தக் கட்டுரையில் கூறப்பட்டிருந்தது.

ஆனால் தவறுதலாகவோ அல்லது அறியாமலோ அந்தக் கட்டுரையில் இந்தியர்களைப் பற்றி குறிப்பிடவில்லை. இந்தியன் ஒருவனின் குணநலன்களைப் பற்றி எனது நண்பன் என்னிடம் கேட்டிருந்தான். ஒரு இந்தியன் அளவுக்கு அதிகமாகக் குடித்தால் என்ன நடக்கும் என்று அவன் கேட்டிருந்தான். "நீ கேட்டதற்கான பதில் இந்த உலகப் பிரசித்தி பெற்றது. ஒரு இந்தியன் அளவுக்கு அதிகமாக குடித்துவிட்டால்

மற்றவர்களுக்கு போதனை செய்ய ஆரம்பித்து விடுவான். அதுதான் நமது தேசீய குணம்" என்று அவனுக்கு நான் எழுதினேன்.

போதனையாளர்கள், சந்நியாசிகள், துறவிகள், குருமார்கள் இவர்களின் முடிவில்லா நீண்ட வரிசையானது நம்மிடையே பரவியுள்ள நோயின் அறிகுறியாகும். ஒழுக்கம் கெட்டவர்களாக இருப்பதை அது காட்டுகிறது. ஆனால் இதில் ஒரு விநோதமான விஷயம் என்னவென்றால் இந்த தலைவர் களில் ஒருவர்கூட தங்கள் உள்ளத்தினுள் ஒழுக்கக்கேட்டை ஒழிக்க வேண்டுமென விரும்புவதில்லை. ஏனென்றால் இந்த நோய் எப்போது குணப்படுத்தப்படுகிறதோ அப்போது அவர்களுக்கு ஒன்றுமில்லாமல் போய்விடும். இந்த நோய் தொடர வேண்டுமென்றும், இந்த சுகவீனம் அதிகரிக்க வேண்டுமென்றுதான் அவர்கள் உள்ளுக்குள் ஏங்குவார்கள்.

இந்த நோயை கட்டுப்படுத்த முடியாத அளவுக்கு தொடர்ந்து வளரவிட வேண்டுமெனில் அதற்குள்ள மிகவும் சுலபமான வழி என்னவென்றால் மனிதனுக்கு வாழ்க்கையைச் சுற்றியுள்ளவற்றைப் பற்றிய அறிவை வளரவிடாமல் செய்துவிடுவதும், அதே சமயம் மனிதன் வாழ்க்கையின் மிக ஆழமான, சிறப்பு வாய்ந்த அம்சங்களைப் புரிந்து கொள்வதற்கு விரும்பினால் அதில் அவனை பயமுறுத்துவதும் ஆகிய இவைகளைச் செய்தால் போதும். எனவே வாழ்க்கையைப் பற்றி சரியாக அறிந்து கொள்ளாத அறியாமையினால் தானாகவே ஒழுக்கமின்மை, ஊழல், கொலைபாதங்கள் முதலியவை பரவ ஆரம்பித்து விடும். வாழ்க்கையின் இப்படிப்பட்ட ஆழ்ந்த, ஒளிமயமான அம்சங்களை கண்டு அவற்றை அறிய விரும்புவதற்கு முயற்சி செய்தால் மதப் பற்றின்மையும் மற்றும் அதைச் சார்ந்த சுகவீனங்களும் ஒன்றன்பின் ஒன்றாக தானாகவே நசிந்து போக ஆரம்பித்துவிடும்.

வாழ்க்கையில் காமம் என்னும் அம்சம்தான் ஒழுக்க

மின்மைக்கு காரணம் என்கிற உண்மைக்கு உங்கள் கவனத்தை திருப்ப விரும்புகிறேன். மனிதன் நெறிதவறிச் செல்வதற்கும், கொலை பாதகங்களுக்கும், மந்த புத்திக்கும் அதுதான் அடிப்படையான. அதே சமயம் ஊக்குவிக்கின்ற காரணமாகவும் இருந்து வந்துள்ளது. எனவேதான் மதத் தலைவர்கள் அதைப் பற்றி பேசுவதற்கு ஒருபோதும் விரும்புவதில்லை.

மற்றொரு நண்பர் எந்தத் துறவியும் அல்லது குருவும் செக்ஸ் பற்றி பேச மாட்டார்களென்று எனக்கு எழுதி அனுப்பியுள்ளார். நான் செக்ஸைப் பற்றி பேசியதால் என் மீது அவர் வைத்திருந்த உயர்ந்த மதிப்பு குறைந்து போயிற்று என்று அவர் எழுதியுள்ளார்.

என்னிடம் நீங்கள் ஏமாற்றம் அடைவதற்கு எந்தக் காரணமும் இல்லையென்று நான் அவருக்குக் கூற விரும்புகிறேன். முதன் முதலில் நீங்கள் என்மீது உயர்ந்த மதிப்பு வைத்திருந்தால் அது என்னுடைய தவறு அல்ல. அது உங்களுடைய தவறு. அனாவசியமாக என் மீது மதிப்பு வைக்க வேண்டியது ஏன்? உங்களது உள்நோக்கம் என்ன? உங்களிடம் மதிப்பையும், மரியாதையையும் நான் எப்போது கேட்டேன்? நீங்கள் எனக்கு மரியாதை செலுத்தினால் அது உங்களது தவறு. இப்போது என்னைச் சார்ந்திருக்க நீங்கள் விரும்ப வில்லை யெனில் அது உங்களது தனி சுதந்திரம். நான் மகாத்மாவும் இல்லை, யாரையும் சார்ந்திருக்கவும் இல்லை.

நான் ஒரு மகாத்மாகவோ அல்லது ஒரு குருவாகவோ ஆக விரும்பியிருந்தால் முதலில் இந்த விஷயத்தை நான் பேசுவதற்கு தேர்ந்தெடுத்திருக்க மாட்டேன். தனது சொற்பொழிவிற்கான விஷயங்களை தேர்ந்தெடுப்பதில் ஒருவன் கெட்டிக்காரனாக இல்லையெனில் அவன் ஒருபோதும் மகாத்மா ஆக முடியாது. நான் ஒருபோதும் மகாத்மாவாக இருந்தது கிடையாது. நான் ஒரு மகாத்மாவும் கிடையாது. நிச்சயமாக மகாத்மா ஆவதற்கு நான் விரும்பவில்லை. அந்த ஆசையே

கண்ணுக்குப் புலப்படாத சுத்திகரிக்கப்பட்ட நமது ஆணவத்தின் வெளிப்பாடுதான். உலகில் ஏழ்மையில் உழலும் பலதரப்பட்ட மக்கள் இருக்கும்போது ஒருவர் மகாத்மாவாக இருக்க நினைப்பது பாவச்செயல். இது சுயநலத்தைக் காட்டுகிறது.

மனித இனம் சிறக்க வேண்டுமென்ற நான் ஏங்குகிறேன். நான் ஒரு சிறந்த மனிதனைக் காண விரும்புகிறேன். மனிதனாக ஆவதிலும், மனிதத் தன்மையில் முழுமை அடைவதும் சிறப்பானது இல்லையா? ஒவ்வொரு மனிதனும் சிறந்தவனாக ஆகும் தகுதி உள்ளது. மகாத்மா, குருமார்கள் இவர்களின் நாட்கள் போய்விட்டன. இனிமேல் அவர்கள் தேவையில்லை. இப்போதைய தேவை மிகச் சிறந்த மனித வர்க்கம்தான். மிகப் பெரிய மனிதர்கள் நம்மிடையே இருந்தனர். ஆனால் அவர்களிடமிருந்து நாம் அடைந்தவை என்ன? எனவே மிகச் சிறந்த பெரிய மனிதர்களின் தேவை இல்லை. ஆனால் மிகச் சிறந்த மனித இனம், மிகச் சிறந்த மனித வர்க்கம்தான் இப்போது தேவை.

எனவே ஒரே ஒரு ஆள் மட்டுமாவது தவறான எண்ணத்தை நீக்கியுள்ளார். ஒரே ஒருவர் மட்டுமாவது நான் பெரிய மனிதன் இல்லை என்பதை அறிந்து கொண்டுள்ளார். இவர் தவறான எண்ணத்தை நீக்கியது பாரம் குறைந்தது போல் உள்ளது. எனக்கு மகாத்மா ஆக வேண்டுமென்ற ஆசை ஏற்பட வேண்டும் என்ற நோக்கத்தில் அவர் எழுதியுள்ளார். நான் இது போன்ற விஷயங்களைப் பற்றி பேசுவதை நிறுத்தி விட்டால் நான் ஒரு மிகப் பெரிய குருவாக வர முடியுமென்று அவர் எழுதியுள்ளார். இதுவரை இப்படிப்பட்ட அணுகு முறைகள் மகாத்மாக்களையும், குருமார்களையும் முட்டாள்கள் ஆக்கிவிட்டது. அதன் விளைவாக அந்த மிகப்பெரிய, ஆனால் தெம்பில்லாத மக்கள் இந்த விஷயங்களைப் பற்றி பேசுவது தங்களது குரு ஸ்தானத்திற்கும், மகாத்மாஸ்தானத்திற்கும் அழிவு வந்து விடும் என்று தெரிந்து கொண்டனர். அவர்கள் தங்களது சொந்த சிம்மாசனங்களை காப்பாற்றிக் கொள்வதற்காக அவர்கள்

எத்தனை பேரை தீங்கான வழியில் ஊக்குவித்துக் கொண்டிருக் கிறோம் என்பதைப் பற்றி ஒருபோதும் கவலைப்பட்டதில்லை.

ஆனால் நான் அதுபோன்ற உயர்ந்த ஸ்தானத்தில் இருக்க வேண்டுமென்று விரும்பவில்லை. அதைப்பற்றி நான் கனவு கூட காண்பதில்லை. அந்த நிலைக்கு நான் திட்டமிடவும் இல்லை. மாறாக என்றாவது ஒருநாள் யாராவது ஒருவர் மகாத்மாவாக ஆக்கி விடுவார்களோ என்பதுதான் எனது கவலை. இன்றைய நாளில் மகாத்மாக்களுக்கும், குருமார்களுக்கும் பஞ்சமே இல்லை. அதனால் அவர்களில் ஒருவராக கருதப்பட வேண்டுமெனில் அதற்கு சாத்தியமான நிலையை ஏற்றுக் கொள்வது மிகவும் முக்கியம். மகாத்மாக்கள் கிடைக்க வில்லையென்பது நமது உண்மையான பிரச்சனையல்ல. இப்போதுள்ள பிரச்சனை ஒரு உண்மையான மனிதனை உருவாக்குவது எப்படி என்பதுதான். அந்த லட்சியத்தை அடைவதற்கு நாம் செய்ய வேண்டியது என்ன? அந்த வேலையில் நம்மை ஈடுபடுத்திக் கொள்வது எப்படி?

நாம் இங்கு கூடிப்பேசிய விஷயங்கள் எல்லாம் எல்லாத் தடைகளையும் உடைத்து சரியான பாதையில் உண்மையான ஒரு மனிதன் உருவாக உங்களுக்கு புதியதோர் வழியைக்காட்டும் என்று திடமாக நம்புகிறேன். இப்புதுவழியில் உங்களது காமம் உங்களது ஆன்மநிலையாக மாறிவிடும்.

இப்போது இன்றுள்ள நிலையில் உங்களது காமமே நீங்களாக இருக்கிறீர்கள். நீங்கள் உங்களது ஆன்மாவாக இல்லை. நீங்களும் ஆன்மாக்களாக ஆக முடியும். ஆனால் உங்களது காமத்தை படிப்படியாக மாற்றிக்கொள்வதன் மூலமாகத்தான் முடியும். அப்போதுதான் உங்களது பயணம் ஆன்மீகவயப்பட்டு மேல் நோக்கிச் செல்ல ஆரம்பிக்கும்.

இதுபோன்ற அநேக கேள்விகள் எனக்கு அனுப்பப் பட்டுள்ளன. எனவே இதைப்பற்றி சில கருத்துக்களைச் சொல்ல

என்னை அனுமதியுங்கள்.

உடலுறவின்போது அனுபவிக்கின்ற சமாதி நிலையின் க்ஷணப்போதைய உணர்வை முடிவிலா விழிப்புணர்வாக்கிக் கொள்ள நீங்கள் முயற்சி செய்ய வேண்டுமென்று நான் கூறினேன். அதிலுள்ள கருத்தைப் புரிந்து கொள்ளவேண்டும். உடலுறவின் போது ஏற்படுகின்ற சமாதி நிலையின் தரிசனம் ஒரு மின்னலைப் போல் பளிச்சென்று மின்னிவிட்டு அதன்பின் மறைந்து போகிறது. அதை அறிந்து கொள்வதற்கு நீங்கள் முயற்சி எடுக்கவேண்டும். அதைப் பழகிப் பார்க்க வேண்டும். அதை அப்படிப்பட்ட முழுமையான உறவை ஒருமுறை பெற்றால்கூட போதும். அந்தக்கண நேரத்தில் நீங்கள் என்பது உங்களது இந்த உடல் மட்டுமல்ல என்பதை உணர்ந்து கொள்வீர்கள். நீங்கள் உடலற்றவர்கள்என்பதை அப்போது உணர்வீர்கள். அந்த ஒரு வினாடி நேரத்திற்குள்நீங்கள் என்பது வெறும் உடல் அல்ல என்பதை கண்டு கொள்வீர்கள். அந்தக் கண நேரத்திலேயே நீங்கள் வேறு ஒன்றாக மாற்றப்பட்டு விடுவீர்கள். உடலை தனியாக விட்டுவிட்டு நீங்கள் ஆன்மாவாக ஆகிவிடுவீர்கள். உங்களது உண்மையான சொரூபமாக ஆகிவிடுவீர்கள். எனவே அந்த மகத்துவத்தினை ஒரேயொரு முறை கண்டு கொண்டால் அதன்பின் தியானத்தின் மூலம் அதே நிலையை நீங்கள் மீண்டும் பெற முடியும். தியானத்தில் அந்த பரவச நிலையோடு ஆழ்ந்த. நீங்காத உறவு கொள்ள முடியும். அப்போது அந்த பரவச நிலை கண நேரம் மட்டுமே இருக்காது. எப்போதும் உங்களுடன் இருக்கும். அதன்பின் சமாதி நிலையின் பாதை உங்களுக்கு தெரிந்துவிடும். எனவே எப்போது அது உங்களுக்கு நன்றாகப் புரிந்து போகிறதோ, எப்போது அது உங்கள் அறிவின் ஒரு பகுதியாக ஆகிவிடுகிறதோ, எப்போது அது உங்கள் வாழ்க்கையின் ஒரு பகுதியாக ஆகிவிடுகிறதோ அப்போது காமத்திற்கு உங்கள் வாழ்வில் இடமே இருக்காது.

மற்றுமொரு நண்பர், ஒவ்வொருவரும் இப்படி சமாதி

நிலையை உணர்ந்து அதன்மூலம் பிரம்மச்சரியத்தை அடைந்துவிட்டால் நமது எதிர்கால சந்ததிகள்எப்படி உருவாகும் என்றும் நாம் செக்ஸிலிருந்து விடுபட்டு விட்டால் நமது மனித இனம், நமது வம்சம் என்ன ஆவது? என்றும் கேட்டுள்ளார்.

இப்போது இருப்பதைப் போன்ற குழந்தைகள் இருக்காது என்பதை மட்டும் ஒருவன் நிச்சயமாகச் சொல்லலாம். புதிய சந்ததிகளை உருவாக்குகின்ற தற்போதைய முறையானது பூனைகளை உருவாக்குவதற்கும், நாய்களை உருவாக்குவதற்கும் வேண்டுமானால் சரிப்பட்டுவரலாம். ஆனால் மனிதனை உருவாக்குவதற்கு தற்போதைய முறை சரிவராது. மனித

உற்பத்தியின் இப்போதுள்ள நோக்கம் எந்த வகையைச் சார்ந்தது? சிந்திக்காமலேயே குழந்தைகளை பெற்றுத் தள்ளுவது எந்த வகையைச் சேர்ந்தது? எதிர்பாராமல் நடக்கின்ற விபத்தைப் போல் உற்பத்தியையும் எதிர்பாராமல் செய்வது, அதையும் ஒட்டுமொத்தமாக எல்லோரும் செய்வதென்பது எந்தவிதமான குறிக்கோளும் அற்றது. அது உபயோகமற்றது. நமது மக்கள் கூட்டம் எவ்வளவு பெருகிவிட்டது! சரியான நேரத்தில் மக்கள் தொகை கட்டுப்படுத்தப்படவில்லையெனில் இன்னும் நூறு ஆண்டுகளில் நாம் நமது கால்களை நகர்த்துவதற்குக் கூட பூமியில் இடமில்லாத அளவுக்கு மக்கள் தொகை நம்ப முடியாத அளவுக்கு பெருகிவிடும் என்று விஞ்ஞானிகள் கூறுகின்றனர். இன்னும் நூறு ஆண்டுகள் கழித்து நீங்கள் எப்போதும் ஒரு பெரிய பிரார்த்தனை கூட்டத்திற்கு மத்தியில் இருப்பது போல் உணர்வீர்கள். எங்கு நீங்கள் திரும்பிப் பார்த்தாலும் ஏதோ ஒரு பெரிய கூட்டம் நடப்பதுபோல் தெரியும். பொதுக் கூட்டங்களை தனியாக கூட்டுவது தேவையில்லை.

குறிப்பிட்ட இந்த நண்பரின் கேள்வி மிகவும் பொருத்தமானது. பிரம்மச்சரியம் என்பது பொதுவானதாக ஆகிவிட்டால் குழந்தைகள் எப்படி பிறக்கும் என்று அவர்

கேட்கலாம்.

அவரது கண்களை திறப்பதற்கு நான் இன்னும் ஒன்று கூற விரும்புகிறேன். நீங்களும் அதை கேட்டுக்கொள்ளுங்கள். பிரம்மச்சரியத்திலும் குழந்தைகள் பெற முடியும். ஆனால் அப்போது குழந்தைகள் உற்பத்தி செய்வதன் முழு நோக்கமும் அர்த்தமும் ஒரு புதிய பரிமாணத்தை கொண்டதாக இருக்கும். உயிர்களை உற்பத்தி செய்வதற்கு காமம் சரியான வாகனம் கிடையாது. சீர்தூக்கிப் பார்த்தால் பிரம்மச்சரியம்தான் சரியான வழியாகும். இப்போது இருக்கும் நிலையில் ஒரு குழந்தையின் பிறப்பானது ஏதோ எதிர்பாராமல் நடக்கும் விபத்தைப் போன்றது நீங்கள் வேறு ஏதோ உள்நோக்கத்தோடு செக்ஸில் ஈடுபடுகிறீர்கள். அப்போது தவிர்க்க முடியாமல் குழந்தைகள் உருவாகின்றன. குழந்தைகள் நமது அழையா விருந்தாளிகள். எனவே இந்தக் குழந்தைகளிடமும் நீங்கள் எதிர்பாராமல் வந்த விருந்தினரிடம் காட்டுகின்ற அன்பைத்தான் காட்ட முடியும்.

அழையா விருந்தாளியை எப்படி நடத்துகிறீர்கள்? நீங்கள் அவர்கள் வசதியாகப் படுக்க படுக்கைகள் கொடுக்கிறீர்கள். அவர்களுக்கு உணவு பரிமாறுகிறீர்கள். அவர்களை மரியாதையுடன் வரவேற்கிறீர்கள். அவர்களது ஆசைகளை நிறைவேற்றுகிறீர்கள். ஆனால் இவையெல்லாம் மரியாதைக்காக செய்கிறீர்களே தவிர உள்ளுக்குள் உண்மையான அன்பு உணர்வு கிடையாது. இப்படி வந்து நமக்கு வெறுப்பூட்டுபவர்கள் எப்போது போவார்கள்? என்பதுதான் உங்களது எண்ணத்தில் எப்போதும் இருக்கும்.

இதே போலத்தான் நீங்கள் விரும்பாமல் பெற்ற குழந்தையின் மீதும் மரியாதை செலுத்துகிறீர்கள். முதல் காரணம் நீங்கள் அவர்களை உண்மையிலேயே விரும்பவில்லை யென்பதால்தான் இதுபோல் நடத்துகிறீர்கள். நீங்கள் எதையோ தேடிச் சென்றீர்கள். அப்படித் தேடும்போது குழந்தைகள் உப பொருள்காளாகக் கிடைத்துவிட்டன. இன்றைய குழந்தைகள்

எல்லாம் உற்பத்திப் பொருள்கள் அல்ல, அவைகளெல்லாம் உபபொருள்கள். அரிசிக்கு ஆசைப்பட்டு நெல்லைக் குத்தும்போது உமி என்னும் வேண்டாத ஒரு உபபொருள் கிடைப்பதைப் போல, செக்ஸில் ஈடுபடும்போது குழந்தைகளும் உமிபோன்று உபபொருளாக வந்து விடுகின்றனர்.

எனவே இதுபோன்ற விபத்துக்களில் இருந்து காமத்தைக் காப்பாற்ற இந்த உலகம் முழுவதும் முயன்று வருகிறது. குடும்பக் கட்டுப்பாடு இந்த எண்ணத்தில் உருவானது தான். செக்ஸை நாம் அனுபவித்துக் கொண்டு அதே சமயம் குழந்தைகள் பிறக்காமல் இருப்பதற்கு செயற்கையான வழிமுறைகள் எல்லாம் கண்டு பிடிக்கப்பட்டன. பல காலமாக இந்த சாபத்திலிருந்து மனிதனை விடுவிப்பதற்காக முயற்சிகள் நடந்து வருகின்றன. பழங்கால ஆயுர்வேத நூல்களில்கூட இதற்கான மருந்துகள் கூறப்பட்டுள்ளன. மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு எந்த விஷயம் ஆயுர்வேத விற்பன்னர்களை கவலைக்குள் ஆழ்த்தியதோ அதே விஷயம்தான் இன்றைய விஞ்ஞானிகளையும் கவலைக் குள்ளாக்குகிறது.

ஏன்? இப்படிப்பட்ட ஆராய்ச்சியில் மனிதன் ஏன் தனது கவனத்தை செலுத்த வேண்டும்? குழந்தைகள் வேண்டாத தொல்லைகள் தருகின்றன. குழந்தைகள் சில விஷயங்களில், குறுக்கே நிற்கின்றன. குழந்தைகளின் பொறுப்பை ஏற்பது கடினமாய் உள்ளது. மேலும் குழந்தைகள் பிறந்த பின் பெண்ணிற்கு செக்ஸின் மீது நாட்டம் குறைந்துவிடுகிறது.

ஆண்களும் குழந்தைகளை விரும்புவதில்லை. குழந்தையே இல்லாத மனிதன் குழந்தையை விரும்பலாம். ஆனால் அவனது விருப்பம் உண்மையிலேயே குழந்தைகளின் மீதுள்ள நேசத்தினால் அல்ல, தனது சொத்துக்களுக்கு வாரிசு வேண்டும் என்பதனால்தான். ஒரு மனிதன் குழந்தை வேண்டு மென்று விரும்பினால் அவன் ஆத்மார்த்தமாக ஒரு மகனை,

கள்ளம் கபடமற்ற ஒரு புதிய மனித உயிரைப் பெற வேண்டும் என்று எண்ணுவதாக தயவுசெய்து நினைத்துக் கொள்ளாதீர்கள். அவன் கஷ்டப்பட்டு பெரும் பொருளைத் தேடியுள்ளான். அவன் இறந்த பிறகு அவனது செல்வம் யார் கைக்குப்போய் விடுமோ, யார் அறிவார்கள்! அவனுக்கு தனது நிலபுலன்களை அனுபவிக்க ஒரு வாரிசு தேவை. யாரும் குழந்தையை குழந்தை வேண்டும் என்பதற்காக மட்டும் விரும்புவதில்லை. நாம் குழந்தைகளிடமிருந்து நம்மை காப்பாற்றிக் கொள்ளத்தான் நினைக்கிறோம். ஆனால் அவர்களோ அவர்கள் விரும்பியபடி வந்து விடுகின்றனர். நாம் செக்ஸைத்தான் அனுபவிக்க விரும்புகிறோம். ஆனால் குழந்தைகள் குதித்து வந்து விடுகின்றன. இப்போதுள்ள சந்ததிகள் எல்லாம் நமது காம வேட்கையின் உப பொருள்கள்தான். அவர்கள் நோயுற்று உள்ளனர். அவர்கள் பலவீனமாக உள்ளனர். அவர்கள் மெலிந்த வர்களாக உள்ளனர், அவர்கள் கவலை நிறைந்தவர்களாக உள்ளனர். பிரம்மச்சாரிகளும் குழந்தைகளுக்கு தகப்பன் ஆக முடியும். ஆனால் அந்தக் குழந்தைகள் காமத்தின் விளைவால் எதிர்பாராமல் கிடைக்கின்ற உப பொருளாக இருக்க மாட்டார்கள். இது நடக்குமெனில் குழந்தைகளைப் பெறுவதற்கு காமம் ஒரு கருவியாக மட்டுமே இருக்குமேயன்றி அதுவே முடிவானதாக ஆகிவிடாது.

காமத்தின் மூலம் நீங்கள் அந்த மிகவுன்னத மெய்யுணர்வு நிலையை அடையும் போது, நீங்கள் பிரம்மச்சரியத்தை அடையிம்போது, தெய்வீகத்தோடு ஒன்று கலக்கின்ற நிலையை அடையும்போது பிறக்கும் உங்களது குழந்தைதான் ஒரு உண்மையான பிறவியாக இருக்க முடியும். அதுதான் உண்மையான படைப்பாகும்! ஆனால் இதுவரையில் குழந்தைகள் பெறாமல் அதே சமயம் செக்ஸில் முழுமையாக ஈடுபடுவதற்கு பாதுகாப்பான நுணுக்கங்களை கண்டுபிடிப்பதில் தான் மனிதனின் வெகுளியான மனம் கவனத்தை செலுத்தி யுள்ளது. பிரம்மச்சரியம் எங்கும் பரவி விட்டால் நமது

ஆராய்ச்சித் திறமைகளை ஆன்மீகத்தின் திசையை நோக்கி செலுத்த முடியும். ஆனால் நாம் தற்போது எதிர் திசையில் தள்ளிக் கொண்டிருக்கிறோம். குழந்தைகள் பெறுவதை வெறுக்கிறோம். ஆனால் காமத்திற்காக காமத்தை அனுபவிக்கிறோம்.

மேலும் இந்தக் கேள்வியை கேட்டவரிடம் ஏன் அவர் இந்த உலகத்தை பிரம்மச்சரியத்தில் இருந்து காப்பாற்ற கவலைப்படுகிறார் என்று கேட்க விரும்புகிறேன். இப்போது அவர் எல்லோரும் பிரம்மச்சாரிகள் ஆகிவிட்டால் குழந்தைகள் பிறப்பது நின்று போய் இந்த உலகம் முடிந்துவிடும் என்று எண்ணுகிறார். எனது நண்பரே, இப்போதிருக்கும் நிலையை பார்த்தால் எல்லோரும் பிரம்மச்சாரிகளாக ஆகும் சாத்தியம் இல்லவே இல்லை. மேலும் காமத்தைக் குறித்து இதுபோன்ற இரக்கமற்ற, உணர்வற்ற, நூதனமான அவமரியாதை இருக்கும் வரையில் அது அப்படியே இருக்கும். நீங்கள் நினைப்பதுபோல் இல்லை நண்பரே, உலகிற்கு அபாயம் அந்த விதத்தில் இல்லை. ஆனால் தொடர்ந்து எதிர்பாராத விபத்தப் போல் குழந்தைகளை பெற்றுத் தள்ளுவது நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே போவதால்தான் உலகம் அழியும் சாத்தியம் உள்ளது. இந்த மாதிரியாக நீங்கள் குழந்தைகளை உருவாக்கிக் கொண்டே போனால் நிச்சயமாக இந்த உலகம் அழிந்து விடும், உங்களுக்கு அணுகுண்டோ அல்லது ஹைட்ரஜன் குண்டோ தேவைப் படாது. இந்த பெருகிவரும் ஜனத்தொகையை, தேனீக்கள் மொய்ப்பது போல் மொய்க்கின்ற இந்த அற்பமான, ஆபாசத்தின் உபபொருள்களாலேயே இந்த உலகம் தானே அழிந்து விடும்.

பிரம்மச்சரியத்தின் மூலம் பிறக்கின்ற அந்தப் புதிய மனிதன் ஒரு மாறுபட்ட ஆகிருதி நிறைந்தவனாக இருப்பான். நாம் கற்பனைக்கூட பண்ணிப் பார்க்க முடியாத அளவுக்கு அவன் நீண்ட நாட்கள் உயிர் வாழ்வான். அவனது ஆரோக்கியம் நன்றாக இருக்கும். எந்தவித நோயும் அவனைத் தாக்காது. அவனது உருவமும் தோற்றமும் ஒரு கம்பீரமான

சிலையைப் போன்று இருக்கும். உண்மையான நறுமணம் அன்பு, சத்தியம், அழகு, ஆன்மீவய மகிமை இவைகள்தான் அவனது குணாதிசயங்களாக இருக்கும். அவன் ஆன்ம நெறியுடன் பிறப்பான். அவன் தெய்வீக அவதாரம் போல இருப்பான்.

நாம் மததூஷனையாக உற்பத்தி செய்யப்பட்டு விட்டோம். நாம் பிறக்கும்போதே மத தூஷனையோடு பிறந்து விட்டோம். சாவதும் மத தூஷனையில்தான் சாவோம். இதற்கிடையில் காலையிலிருந்து மாலை வரை, பிறந்தது முதல் இறக்கும் வரை நமது வாழ்நாள் முழுவதும் மதத்தைப்பற்றி பேசிப் பேசியே காலத்தை தள்ளுகிறோம். ஆனால் அப்படிப்பட்ட அந்த உயர்ந்த மனிதனிடம் சோம்பேறித் தனமான பேச்சோ அல்லது மதத்தைப்பற்றிய வெறும் விவாதங்களோ இருக்காது. ஏனென்றால் அவனது வாழ்க்கையே அவனுக்கு ஆன்மநெறியாகி விடும். நமது வாழ்க்கையின் பகுதியாக இல்லாத விஷயங்களைத்தான் நாம் பேசுவோம். ஆனால் வாழ்க்கையின் ஒரு அங்கமாகிவிட்ட விஷயத்தைப் பேசுவ தில்லை. நாம் செக்ஸைப் பற்றி பேசுவதில்லை. ஏனென்றால் நாம் செக்ஸில்தான் வாழ்கிறோம். ஆனால் நாம் கடவுளைப் பற்றி பேசுகிறோம். ஏனென்றால் நமது வாழ்க்கைக்கும், கடவுளுக்கும் சம்பந்தமில்லை. உண்மையைச் சொன்னால் நம்மால் அடையமுடியாத அல்லது பெற முடியாத விஷயங் களைப் பற்றி பேசிப் பேசியே அதன் மூலம் நம்மைத் திருப்திப்படுத்திக் கொள்கிறோம்.

ஆண்களைவிட பெண்கள் அதிகமாக பேசுவதை கவனித்திருக்கிறீர்களா? பெண்கள் எப்போதும் ஏதாவது ஒன்றைப் பற்றி, மற்றவர்களிடமோ, பக்கத்து வீட்டுக்காரர் களிடமோ அல்லது யார் கேட்கிறார்களோ அவர்களிடமோ சுறுசுறுப்பாக பேசிக் கொண்டேயிருப்பார்கள். அதில் எந்தக் குற்றமும் இல்லை. ஒருவரோடு ஒருவர் பேசிக்கொள்ளாமல் இரு

கண்களால் வெகு நேரம் சேர்ந்து உட்கார்ந்திருக்க முடியாது என்று கூறுவார்கள். இது நான் கேள்விப்பட்டது. சைனாவில் நாட்டிலேயே மிகச் சிறந்த புளுகனைத் தேர்ந்தெடுக்க ஒரு போட்டி ஏற்பாடு செய்யப்பட்டது. வெற்றி பெற்றவனுக்கு பரிசும் உண்டு. எனவே மிகச் சிறந்த புளுகர்கள் எல்லாம் போட்டிக்கான இடத்தில் கூடினர்.

தனது முறை வந்ததும் ஒருவன் எழுந்து சென்று, நான் ஒரு பூங்காவிற்கு சென்றேன். அங்கே இரண்டு பெண்கள் ஒரு பெஞ்சில் உட்கார்ந்து கொண்டு ஒருவரோடு ஒருவர் பேசிக் கொள்ளாமலேயே அமைதியாக இருந்தனர் என்றான்.

ஒரே ஆரவாரமாக இருந்தது. எல்லோரும் சந்தோஷ மடைந்தனர். இதைவிட மிகப் பெரிய பொய் இருக்க முடியாது என்று மக்கள் கூச்சலிட்டனர். இதுவரையில் கேட்டதில் இதுதான் மாபெரும் பொய் என்றனர். எல்லோரும் அந்த மனிதனுக்கு வாக்களித்தனர்.

பெண்கள் நிறைய வேலை செய்வதைப் போலவே நிறையப் பேசுவதும் ஏன்? ஆண்களுக்கு வேலை உண்டு. ஆனால் பெண்களுக்கு அந்த அளவுக்கு வேலை இல்லை. வேலையில்லாத போது எப்பொழுதும் வெட்டிப் பேச்சுத்தானே இருக்கும். பெண்களுக்குள்ள இந்தக் குறைதான் இப்போது இந்தியாவின் தேசீய குணாதிசயமாகும். இந்த நாட்டில் எந்த முன்னேற்றமும் இல்லை. இங்கு பேச்சும், விவாதமும் மட்டுமே உள்ளது.

ஆனால் புதிய மனிதன், பிரம்மச்சரியத்தில் இருந்து பிறக்கின்ற மனிதன் வீண் பேச்சாளனாக இருக்கமாட்டான். அவன் வாழ்ந்து காட்டுவான். அவன் மதங்களைப் பற்றி பேசிக்கொண்டே இருக்கமாட்டான். அவன் மதத்தில் வாழ்ந்துகாட்டுவான். அப்போது மக்கள் மதத்தைப் பற்றி வெட்டிப் பேச்சையும், விவாதங்களையும் மறந்து போய்விடுவார்கள். ஏனென்றால் மதம் அவர்களது இயல்பாக

ஆகிவிடும். அப்படிப்பட்ட மனிதனை எண்ணிப்பார்ப்பதற்கு, கற்பனை செய்து பார்ப்பதற்கு அற்புதமாக உள்ளது. ஆச்சரியத்தை எழுப்புவதாக உள்ளது.

இப்படிப்பட்ட மனிதர்கள் பிறந்துள்ளனர். ஆனால் அவர்கள் பிறப்பு அபூர்வமானது. எப்போதாவதுதான் இப்படிப்பட்ட அழகான மனிதர்கள் தோன்றுவார்கள். அவர்களை அழகுபடுத்த நாட்டில் விலையுயர்ந்த துணிகளால் கூட முடியாது. அவர்கள் ஆடையின்றி நிர்வாணமாக இருந்தாலும்கூட உயர்வாக இருப்பார்கள். அவர்களுடைய அந்த அழகின் ஒளி தொலை தூரங்களுக்குப் பரவும். இந்த மாதிரி மனிதர்களைச் சுற்றி மக்கள் அவரை பார்ப்பதற்கும், ஒரு உயிருள்ள தெய்வத்தைப் பார்ப்பதற்கும் கூட்டம் கூட்டமாகக் கூடுவர். இப்படிப்பட்ட ஒளி வீசக்கூடய மனிதர் ஒருவர் இருந்தார். இது போன்ற சக்தி அவரிடம் இருந்தது. அவரது பெயர் வர்த்தமானர் என்றாலும் மக்கள் அவரை மகாவீரர் என்று அழைத்தனர். அதற்கு பெரும் வெற்றி பெற்றவர் என்பது பொருள். அவரிடமிருந்த பிரம்மச்சரியத்தின் மகிமையானது மக்கள் அந்த மனித கடவுளின் கால்களில் விழும் அளவுக்கு சிறப்பானதாக இருந்தது. எப்போதோ ஒரு புத்தர் பிறக்கிறார், எப்போதோ ஒரு இயேசு பிறக்கிறார்!, எப்போதோ ஒரு லாவோத்ஸு பிறக்கிறார். மனித இனத்தின் சரித்திரத்தில் இது போன்ற சிலரின் பெயர்களை நாம் வெறுமனே விரல்விட்டு எண்ணிவிடலாம்.

தூக்கமின்மையால் அவதிப்படும் வியாதியுடைய ஒருவனிடம் நான் சென்று நீ படுக்கையில் படுத்து தலையணையில் தலைவைத்ததும் தூங்கி விடுவாய் என்று கூறினால் அவன் நான் கூறுவதை நம்பமாட்டான். அவனால் படுக்கையில் புரண்டாலும், எழுந்து உட்கார்ந்தாலும் அல்லது கையில் உள்ள மாலையில் மணிகளை எண்ணிக் கொண்டிருந்தாலும் அல்லது ஆடுகளை எண்ணிக் கொண்டிருந்தாலும் அவனால் தூங்க முடியவில்லை என்று தான் என்னிடம்

கூறுவான். நான் பொய்யன் என்றுதான் அவன் கூறுவான். வெறுமனே படுத்தவுடன் எப்படித் தூக்கம் வரும் என்றுதான் கேட்பான். எவ்வளவு தான் முயன்று பார்த்தாலும் தன்னால் ஆழ்ந்து தூங்க முடியவில்லையென்றும் சில வேளைகளில் இரவு முழுவதும் தான் தூங்குவதில்லை என்றும்தான் அவன் குறைபடுவான்.

நியூயார்க் நகரத்தில் உள்ள மக்களில் 30-லிருந்து 40 சதவீதம் மக்கள் தூக்க மாத்திரைகளை சாப்பிடுகின்றனர். மேலும் இன்னும் நூறு ஆண்டுகளில் எவரும் இயற்கையான தூக்கத்தைப் பெற முடியாது என்றும் படுக்கைக்குச் செல்லும் முன் ஒவ்வொருவரும் ஏதாவது மனதை அமைதிப்படுத்துகின்ற மாத்திரைகளை சாப்பிட வேண்டியது வரும் என்று மனநோய் வல்லுநர்கள் கூறுகின்றனர். இன்னும் இருநூறு ஆண்டுகளில் இதே நிலைமை இந்தியாவிற்கும் ஏற்படும். வெளிநாட்டவரை அப்படி பின்பற்றுவதில் இந்தியத் தலைவர்கள் பின்தங்க மாட்டார்கள். நியூயார்க்கில் உள்ளவர்களைவிட நாம் ஒன்றும் பின்தங்கி விடமாட்டோம். மற்றவர்களின் நூல்களிலி ருந்து திருடுகின்ற நாம் இதை மட்டும் எப்படி விட்டுவிடுவோம்?

எனவே இன்னும் ஐந்நூறு ஆண்டுகளில் இந்த உலகிலுள்ள ஒவ்வொரு மனிதனும் தூங்கப் போவதற்கு முன்பு ஒரு தூக்க மாத்திரையை சாப்பிடும் நிலைமை நிச்சயம் வரும். மேலும் ஒரு குழந்தை பிறந்தவுடன் அதுவும் பாலுக்குப் பதிலாக மனதை சாந்தப்படுத்துகின்ற மாத்திரை களைக் கேட்கும். ஏனென்றால் அந்தக் குழந்தை அதன் தாயின் கருப்பையில் கூட நிம்மதியாக இருந்திருக்க முடியாது. அப்போது அந்த மக்களிடம் ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்பு மக்கள் தூக்க மாத்திரைகளின்றி வெறுமனே கண்களை மூடியவுடன் தூங்கிப் போவார்கள் என்று கூறினால் அவர்கள் அதை நம்பமாட்டார்கள். அவர்களை நம்ப வைப்பது கடினமாகிவிடும். அது நடக்க முடியாத காரியம் என்று அவர்கள் கூறுவார்கள். அது எப்படி முடியும் என்று அவர்கள் கேட்பார்கள்.

அதே போன்றுதான் பிரம்மச்சரியத்தில் பிறந்த மக்களிடமும் ஒரு காலத்தில் மக்கள் நேர்மையற்றவர்களாக இருந்தனர் என்றும் ஒரு காலத்தில் திருடர்களும், கொலைகாரர்களும் இருந்தனர் என்றும் அந்த மனிதர்கள் தற்கொலை செய்து கொள்வார்கள் என்றும் மற்றவர்களுக்கு விஷத்தைக் கொடுத்தோ அல்லது வெட்டியோ கொலை செய்வார்கள் என்றும் அவர்கள் யுத்தம் செய்வார்கள் என்றும் கூறினால் அவர்கள் நம்பமாட்டார்கள். அப்போது வெறும் ஆபாசமான காம உணர்ச்சிகளுக்கு அடிமைப்பட்டு உடல் மட்டத்தை விட்டு ஆழத்தில் செல்லாத உடலுறவில்தான் குழந்தைகள் பிறந்தன என்று அவர்களிடம் கூறினால் நம்பமாட்டார்கள்.

எனவே ஆன்மீகப் பாலுணர்வு பரிணமிக்க முடியும். மனித இனத்திற்கு ஒரு புதிய உயிர் ஆரம்பமாகும்.

கடந்த நான்கு தினங்களாக நான் உங்களிடம் இப்படிப் பட்ட ஒரு புதிய வாழ்வை அடைவதற்கான சாத்தியங்களைப் பற்றி பேசினேன். இதுபோன்ற சொற்பொழிவுகளை நீங்கள் அமைதியாக எப்போதும் கேட்க முடியாமல் போய்விடும் என்றாலும் நீங்கள் மிகவும் பொறமையாக அதே சமயம் மிகுந்த அன்புடனும் கேட்டீர்கள். உங்களுக்கு சில வேளைகளில் தர்ம சங்கடமாக ஆகியிருக்கும்.

இதைப் போன்ற விஷயங்களைப் பேசக்கூடாது என்று சிலர் எழுந்து கூச்சல் போட்டு இந்த சொற்பொழிவுகளை எங்கே நிறுத்தி விடுவார்களோ என்று தான் பயந்ததாக ஒரு நண்பர் வந்து என்னிடம் சொன்னார். பொது இடத்தில் இதுபோன்ற விஷயங்களை கூடிப் பேசுவதை மக்கள் பலத்துடனும், உரத்தக் குரலுடனும் எதிர்ப்பார்கள் என்று அவர் நினைத்தார். அப்படி வீரம் நிறைந்த மக்கள் இருந்தால் இந்த உலகம் இன்னும் நன்றாக இருந்திருக்கும் என்று நான் அவரிடம் கூறினேன். ஒரு பொதுக்

கூட்டத்தில் எழுந்து பேசிக் கொண்டிருப்பவரிடம் சொற்பொழிவை நிறுத்தும்படி கூறுகின்ற அளவுக்கு தைரியமான மனிதனை நீங்கள் எங்காவது பார்த்ததுண்டா? அப்படி தைரியம் வாய்ந்த மக்கள் இந்த நாட்டில் இருந்திருந்தால் நெடுநாட்களுக்கு முன்பே இந்த நாட்டில் உயர்ந்த மேடைகளைப் போட்டுக் கொண்டு செய்வது ஒன்றும், பேசுவது ஒன்றுமாகிய முட்டாள் தனமான பேச்சுக்களை பேசுவது நிறுத்தப்பட்டிருக்கும். ஆனால் அவர்கள் இன்றுவரை அதை நிறுத்தவில்லை, அவர்கள் நிறுத்தப் போவதும் கிடையாது. இதுவரை எனது பேச்சின் நடுவே எழுந்து என்னுடைய பேச்சை நிறுத்தும்படி கூற யாராவது தைரியமானவர் ஒருவர் வருவார் என்று எதிர்பார்த்தேன். அப்படியிருந்தால் நான் அவரிடம் இந்த விஷயத்தை இன்னும் விவரமாக பேசியிருக்க முடியும். அது எனக்கு மிகுந்த சந்தோஷத்தை கொடுத்திருக்கும்.

எனவே இதுபோன்ற சொற்பொழிவுகளுக்கு இது போன்ற தலைப்புகளுக்கு நிறைய நண்பர்கள் பயந்தாலும் யாராவது எழுந்து எதிர்ப்பு தெரிவித்திருக்கலாம். அல்லது இங்கு ஒரு கலவரத்தையாவது ஏற்படுத்தியிருக்கலாம். ஆனால் நீங்கள் அமைதியாகக் கேட்டீர்கள். நீங்கள் எல்லோரும் மிகவும் அன்புடன் இருந்தீர்கள். நீங்கள் பொறுமையாக, அமைதியாக கேட்டதற்கு நான் நன்றியுடையவனாக இருக்கிறேன்.

முடிவாக நம் எல்லோருக்குள்ளும் இருக்கும் காமமானது அன்பென்னும் கோவிலை நாம் அடைவதற்கான ஏணிப்படியாக ஆக வேண்டும் என்றும், நம் எல்லோருக்கும் உள்ளே இருக்கும் காமமானது நாம் அதிஉன்னத மெய்யுணர்வின் (SuperConsciousness) கோயிலை அடைவதற்கு ஒரு சாதனமாக ஆக வேண்டுமென்றும் நான் என் உள்ளத்தின் ஆழத்திலிருக்கும் விருப்பத்தைத் தெய்வீகத்துக்குத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இறுதியாக. நம் எல்லோருக்குள்ளும் அரியாசனத்தில் அமர்ந்திருக்கும் மிகவுயர்ந்த தெய்வீகத்துக்கு (Divine) நான் தலை வணங்குகிறேன்.

தயவுசெய்து எனது வணக்கத்தை ஏற்றுக் கொள்ளுங்கள்.

☆☆☆☆☆☆



# காமத்திலிருந்து ...கடவுளுக்கு

FROM SEX TO SUPERCONCIOUSNESS

"..... சிற்றின்பத்தில் இருந்து மனிதனை
பிரிக்கமுடியாது என்பது மற்றொரு
முக்கியமான கருத்து.
காமம்தான் ஆரம்ப இடம்:
மனிதன் அதில்தான் பிறந்துள்ளான்.
கடவுள் காமத்தைத்தான் படைப்பின்
ஆரம்ப நிலையாக ஏற்படுத்தியுள்ளார்.
கடவுளேகூட பாவச் செயல் என்று
கருதாத ஒன்றை மிகப்பெரும்
மனிதர்கள் பாவச்செயல்
என்றழைக்கின்றனர்.
கடவுள் காமத்தை ஒரு பாவச்செயலாக
கருதியிருப்பாரேயாகில் இந்த உலகில்
கடவுளைத் தவிர மிகப்பெரிய
பாவி வேறு யாரும் இருக்க முடியாது:
இந்து பிரபஞ்சத்திலிலேயே அவரைவிட
மிகப்பெரிய பாவி இருக்க முடியாது..."

\- ஓஷோ

OSHO